# தமிழ் இதழியல் வரலாறு

ஆசிரியர் :

மா. சு. சம்பந்தன்

வெளியீடு :

தமிழர் பதிப்பகம்

243, லிங்க செட்டி தெரு,

சென்னை-600 001.

முதற்பதிப்பு : 1987


ஆறாவது உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு
மாநாட்டில் - கோலாலம்பூரில் வெளியிடப்பட்டது

ஆசிரியரின் இதர நூல்கள் :

சிறந்த பேச்சாளர்கள்
சென்னை மாநகர்
அச்சுக்கலை
அச்சும் பதிப்பும்
எழுத்தும் அச்சும்
திருச்சி விசுவநாதம்

| | | |
|---|---|---|
| Title | : | Thamizh Ithazhial Varalaru |
| Author | : | Ma. Su. Sambandan |
| Date of birth | : | 25-5-1923 |
| Pen-name | : | Thodarban |
| Subject | : | History of Tamil Journalism |
| Language | : | Tamil |
| Publisher | : | Thamizhar Pathippagam,<br>243, Linga Chetty Street,<br>MADRAS-600 001. |
| Printer | : | T. Revathi Printers,<br>69, Muthiya Mudali Street,<br>MADRAS-600 086. |

பேராசிரியர்

# நாரண துரைக்கண்ணன்

## அணிந்துரை

உலகிலேயே மிகப் பெரிய தேசம் சீனாதான். மக்கள் தொகை மிகுதியாக உள்ள நாடும் இதுதான். மக்களுக்குப் பயன்படும் பல துறைகளும் அந்நாட்டில்தான், முதன் முதலாகத் தொடங்கப்பட்டிருக்கின்றன.

இதழியல் அதாவது பத்திரிகைத்துறை முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்டதும் சீனாவில்தான் என்றால் மிகை யாகாது.

பின்னர்தான் பத்திரிகைத்துறை பல நாடுகளில் பரவிப் பலவிதமாக வளர்ந்து வந்திருக்கின்றது.

அண்மையில் 'தமிழ்இதழியல்' வரலாறு குறித்து நண்பர் திரு. மா. சு. சம்பந்தம் அருமையான நூல் ஒன்றைச் சிறப் பாக எழுதி வெளியிட்டிருக்கிறார்.

எப்பொருள் குறித்தும் திரு. சம்பந்தம் அவர்கள் தம் நுண் மாண் நுழைபுலத்தால் மிக நுட்பமாக ஆராய்ந்து திட்ட வட்டமாகத் தம் கருத்தை வெளியிடுவதில் ஆற்றல் மிக்கவர்.

இவர் தமிழில் இதழியல் தோன்றி வளர்ந்த வரலாற்றை ஆழ்ந்து ஆராய்ந்து நிரல்பட ஒழுங்காக எழுதி வெளியிட் டிருக்கிறார்.

இவருடைய நோக்கும் போக்கும் தனித்தன்மை வாய்ந்தவை.

செய்தி இதழ்கள், பொது நோக்குள்ள இதழ்கள், சாதி, சமய இதழ்கள் எனப்பல துறை இதழ்கள் பற்றியும் விரிவாகத் தெரிவித்திருக்கிறார் இவர்.

தமிழில் பத்திரிகைத்துறை தோன்றி வளர்ந்த வரலாற்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டு மானால், நண்பர் திரு. சம்பந்தம் எழுதிவெளியிட்டுள்ள இந் நூலைப் படித்துப் பார்த்தாலே போதும்.

பயன் மிகவுள்ள இந்நூலைத் தமிழ் மக்கள் படித்துப் பயன் பெற வேண்டும் என நான் விரும்புகிறேன். திரு. சம்பந்தனுக்கு என் நல் வாழ்த்து உரியதாகுக.

,,ஜீவோதயம்''
சென்னை-94

**நாரண துரைக்கண்ணன்**

# முன்னுரை

தமிழ் இதழ்கள் தோன்றிய நாள் முதல் இன்று வரை ஒருமித்து ஒருசேரத் தொகுத்திருக்கும் வசதி எந்த ஒரு நூல் நிலையத்திடமோ தனியார் இடமோ காணக் கிடைக்க வில்லை! தோன்றிய இதழ்களும் நாளாவட்டத்தில் மறை யுண்டும் சிதறியும் போயிருக்கின்றன.

இந்தியத் துணைக் கண்டத்தை ஆங்கிலேயர் கட்டி ஆண்டபோது, எந்த நூலோ இதழோ அச்சிடப்பட்டு வெளி யிடப்பட்டிருந்தாலும் அவற்றின்படியைப் புத்தகப் பதிவாளர் (Registrar of Books and Periodicals) அலுவலகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டும் என்ற விதி ஒன்று நடைமுறையில் இருந்து வந்தது. இவ்விதி முற்றும் கடைப்பிடிக்கப்படா விட்டாலும், ஓரளவு அனுப்பி வைக்கப்பட்டவைகளைக் கொண்டு, ஒவ்வொரு காலாண்டிலும் ஒவ்வொரு மாகாண அரசிதழ்(Gazette) களில்—இதழ்கள், நூல்கள் பற்றிய விவரங்கள் பொருள்வாரியாகத் தொகுத்துத் தரப்பட்டு வந்தன.

ஆங்கிலேய ஆட்சி அகன்ற பிறகு, மேற்சொன்ன முறை யில் தொகுத்துத் தரப்படுவது அறவே நிறுத்தப்பட்டு விட்டது! அந்தந்த மாநில அரசிழ்களில் இதழ்களின் விவரங் கள் காலாண்டுக்கு ஒரு முறை தொகுத்துத் தரப்பட்டு வெளி யிடப்படுவதில்லை. மாறாக, இந்தியாவில் வழக்கிலுள்ள மொழிகளில் வெளிவரும் இதழ்களைப் பற்றிய விவரங்களைச் சுருக்கமாக இந்திய அரசுத் தகவல்துறையினர் தந்து வருகின்றனர்.

தமிழகத்திலும் தமிழர் வாழும் பகுதிகளிலும் என்னென்ன இதழ்கள் வெளி வந்திருக்கின்றன, வெளி வந்து கொண்டிருக்கின்றன என்ற விவரத்தை அறிந்துகொள்ள எந்த ஒரு பொது அமைப்பும், ஆராய்ச்சி நிறுவனமும் வேண்டிய முயற்சியை இதுவரை எடுத்திருப்பதாக அறிய முடியவில்லை. அப்படி விவரத்தை வெளியிட்டிருந்தால் இந் நூலை இன்னும் சிறப்பாக வெளியிட்டிருக்க முடியும்!

கடந்த 40 ஆண்டுகளாக நான் இதழ்களைத் தொடர்ந்து படித்து வருகிறேன். தமிழ் இதழ்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அறிந்து வந்துள்ளேன். தமிழ் இதழ்களின் வரலாற்றைப் பற்றி ஒரு நூல் எழுத வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. இதன் காரணமாக, **செயிண்ட் ஜார்ஜ் கெஜட்டில்** வெளியிடப்பட்டு வந்த தமிழ் இதழ்களின் விவரங்களைப் பற்றிய குறிப்புகளைச் சேகரித்தேன்! அடுத்து கன்னிமாரா பொது நூலகத்திலும், பாண்டிச்சேரி பொது நூலகத்திலும், மதுரைத் தமிழ்ச் சங்க நூலகத்திலும், மறைமலையடிகள் நூலகத்திலும் வைத்திருந்த தமிழ் இதழ்களைப் பார்த்துக் குறிப்புகளை எடுத்துக் கொண்டேன்.

இவைகளை ஒரு சேரப் பார்க்கும் போது, இதற்கு முன்பும் பின்பும் வெளியான தமிழ் இதழ்களைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது.

ஆகவே, வரலாற்றுப் பேராசிரியர் **கே. கே. பிள்ளை** அவர்களை அணுகி, தமிழ் இதழ்களின் வரலாறு பற்றி நூல் எழுத இருப்பதற்கு, உதவி புரியும்படி கேட்டுக்கொண்டேன். அவர் தந்த பரிந்துரை மடலை எடுத்துக்கொண்டு போய், சென்னை ஆவணக் காப்பகத்தின் (Madras Record Office) காப்பாளராக (Curator) இருந்த திரு. **பாலிகா** அவர்களிடம் தந்த பின்னரே, ஆவணக் காப்பகத்தினுள் நுழைய அனுமதி கிடைத்தது! அங்குக் கிடைத்த இதழ்களைத் தூசித்தட்டி ஆராய முற்பட்டேன். அவ் ஆவணக் காப்பக அலுவல் நேரங்களில் அமர்ந்து ஒவ்வொரு இதழையும் முதலில் இருந்து கடைசி வரை படித்து வேண்டிய குறிப்புகளை எடுத்துக் கொண்டேன். இந்த நிலை பல வாரங்கள் வரை நீடித்தது!

நான் எடுத்திருந்த குறிப்புகளை வைத்துக்கொண்டு நூலாக்க முயன்றேன். தமிழ் இதழ்களைப் பற்றிய நூலுக்கு பெருத்த ஆதரவு கிடைக்குமா என்ற அச்சம் ஏற்பட்டது; முயற்சி தடைப்பட்டது!

முதன் முதல் நான் 'தமிழ்ப் பத்திரிகைகள்' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதினேன். அது சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் வெளியீடான **பாரதி ஆண்டு மலரில்** (1958) வெளியிடப்பட்டது; தமிழ் இதழ்கள் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வலர்களால் அது நன்கு வரவேற்கப்பட்டது! அடுத்து, தமிழ்ப் பேராசிரியர் **சாலை இளந்திரையன்** அவர்களின் அன்புக் கட்டளைக் கிணங்க, அவரது பொறுப்பில் டில்லியிலிருந்து வெளியான **சுடர் வெள்ளிவிழா** மலர்க்குத் தமிழ் இதழ்கள் பற்றி விரிவான ஒரு கட்டுரை எழுதித் தந்தேன். அது அம்மலரில் 1971 இல் வெளியாயிற்று. அதனைத் திரு **சோமலெ** அவர்கள் தமது **தமிழ் இதழ்கள்** (1973) எனும் நூலில் அப்படியே இணைப்பாகச் சேர்த்து வெளியிட்டுள்ளார்.

பழந்தமிழ் இதழ்களைப் பற்றி அறிந்து கொண்ட பின்னர், இக்காலத் தமிழ் இதழ்கள் பற்றிய விவரங்களையும் சேகரித்து இந்நூலை ஒருவாறு உருவாக்கியுள்ளேன்.

இந்நூல் எழுதத் துணைபோன நூல்கள் கட்டுரைகள் பற்றிய விவரத்தைத் தனியே கொடுத்துள்ளேன். அவற்றின் ஆசிரியர்களுக்கு நான் பெரிதும் நன்றி செலுத்துகிறேன்.

இந்நூலுக்கு நல்லதோர் அணிந்துரை தந்துள்ள முது பெரும் எழுத்தாளர் **திரு. நாரண துரைக்கண்ணன்** அவர்களுக்கும், நண்பர் **திரு. சையத் முகம்மது** (ஹசன்) அவர்களுக்கும், இந்நூலுக்கு வேண்டிய அச்சுப்படிமைகளைக் கொடுத்துதவிய 'இராணி' ஆசிரியரான திரு. **அ. மா. சாமி** அவர்களுக்கும், சேகர் பதிப்பக உரிமையாளர் திரு. **வெள்ளையாம்பட்டி சுந்தரம்** அவர்களுக்கும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர் **திரு. முத்துக்குமாரசாமி** அவர்களுக்கும் எனது இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சுக் கோத்தவர்களுக்கும், அச்சடித்த **தி. ரேவதி** அச்சகத்தினர்க்கும், முகப்புப் படம் வரைந்து கொடுத்த ஓவியர் **அரசுக்கும்** என் மனமார்ந்த பாராட்டு தலையும் நன்றியையும் உரித்தாக்குகிறேன்.

இந்நூலை விரைவாகக் கோலாலம்பூரில் நடைபெறும் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு மாநாட்டிற்குள் வெளியிட வேண்டுமென்று திடீரென்று முடிவு செய்ததால், நான் எண்ணியிருந்தபடி விரிவாக நூலை வெளியிட இயல வில்லை. பின்னர் விரிவாக வெளியிட எண்ணியுள்ளேன்.

இந் நூலைப் படித்துப் பார்க்கும் அன்பர்கள் நிறை குறைகளை அன்புகூர்ந்து எடுத்தியம்பும்படி வேண்டிக்கொள் கிறேன். தங்களுக்குத் தெரிந்த புதிய தகவல்களைத் தருவார் களானால் அடுத்த பதிப்பில் அவற்றைச் சேர்த்து, செம்மைப் படுத்தி கொள்ள உதவியாக இருக்கும்.

அன்பன்
**மா. சு. சம்பந்தன்.**



# பொருளடக்கம்

# நுழைவாயில்..

மாந்தன் தன் கருத்தை முதலில் தோற்றங்கள் மூல மாகவும், சைகைகள் மூலமாகவும், தீ மூட்டி புகையைக் கிளப்புவதன் மூலமாகவும், தீ அம்புகளை வானத்தில் விடு வதன் மூலமாகவும், சூரிய வெளிச்சத்தைக் கண்ணாடியில் பிரதிபலிக்கச் செய்வதன் மூலமாகவும் பிறர்க்குப் புலப்படுத் தினன். அவன் நாகரிகம் அடைந்தவுடன் புறாக்களின் மூல மாகவும், மனிதர் மூலமாகவும் தான் அனுப்பும் செய்தி களைத் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு எட்டச் செய்தான். தற் போது சாரணர் கொடிகளை அசைத்தும், கப்பற்படையினர் விளக்கு வெளிச்சத்தைக் காட்டியும் செய்திகளை அனுப்பு வதை நாம் பார்க்கிறோம்.

மிகப் பழைய காலத்தில் அரண்மனையிலிருந்து அரசாங் கத்தின் அறிவிப்புகளும் கட்டளைகளும் பொதுமக்களுக்குப் பறையறிவிப்பதன் மூலம் தெரிவிக்கப்பட்டு வந்துள்ளன. தமிழகத்தில் அரசர்கள் முரசு அறைந்து அரண்மனைச் செய்திகளைக் குடிமக்களுக்கு அறிவிக்கச் செய்துள்ளனர். முற்காலத் தமிழகத்தில் அரசச் செய்திகளைத் தெரிவிப்பதற் காகவே 'வள்ளுவன்' என்னும் ஓர் அதிகாரியை ஏற்பாடு செய்திருந்தனர். ஆக உலகெங்கும் அரண்மனையே செய்தியை வெளிப்படுத்தும் மூலவாயிலாக அமைந்திருந் தது!

சீன நாட்டில் மிக நெடுங்காலமாகச் செய்திகளைக் கவிதைகளாக்கித் தெருவில் பாடிச் செல்லும் வழக்கம் இருந் துள்ளது! பின்னர் அங்கு மர அச்சமைப்பில் அச்சடித்து இதழை வெளியிடும் வழக்கம் சுமார் 2500 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது. இவ்வாறு இதழ்கள் வெளிவந்தவற்றுள் குறிப்பிடத்தக்கவை ''கிங்போ'', ''பீகிங்

நியூஸ்'', ''பீகிங் கெஜட்'' என்பனவாம். கி.பி. ஆறாம் நூற்றாண்டில் சீன அரசாங்கம் ''இத்சிங் பவே'' (Tsing Pao) என்னும் இதழைத் தொடங்கியது. 'பீகிங் நியூஸ்' கி. பி. 363இல் மரப்பலகையில் சீன எழுத்துக்களைச் செதுக்கிய பின்னர் அச்சிட்டு இவ்விதழ் வெளியாகியது. இது 1935 வரை இடையறாது நடைபெற்றுள்ளது. இதன் 1500ஆம் ஆண்டு விழா கி. பி. 1863 இல் கொண்டாடப்பட்டது. இது தான் உலகத்தின் மிகப் பழமையான இதழாகக் கருதப்படுகிறது. 'கிங்போ' கி. பி. 750இல் துவக்கப்பட்டது.1

மேலை நாட்டிலுள்ள உரோமிலும் 2062 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அரண்மனையிலிருந்து பல திக்குகளிலிருந்த இராணுவ அதிகாரிகளுக்கு நாள் தோறும் இராணுவ தகவல்கள் அனுப்பப்பட்டுவந்துள்ளன. இதற்கு 'ஆக்டோ டயூர்ணு' (Acta Diurna) என்று பெயர். இத்தாலிய நாட்டில் தாள்களில் செய்திகளை எழுதித் தெருவில் முக்கிய இடங்களில் ஒட்டிவைப்பார்கள். இதை அருகில் சென்று படிப்பதற்கு 'கெஜட்டா' என்னும் சிறு இத்தாலிய நாணயம் தர வேண்டும்! இதிலிருந்து தான் 'கெஜட்' (Gazette) என்ற பெயர் ஏற்பட்டது. பழங்கால இதழ்கள் எல்லாம் 'கெஜட்' என்ற பின் அடைமொழியைப் பெரும்பாலும் பெற்றிருக்கும். நாளாவட்டத்தில் அரசாங்க அலுவலரின் பெயர்களும் அவர்களது பதவி உயர்வுகளும், பதவி மாற்றங்களும் அதிகப்படியாக இதழ்களில் இடம் பெறத் தொடங்கின! ஆகவே, அரசாங்க அலுவலர்களுக்கு 'கெஜடட் ஆபீசர்' (Gazetted officer) அதாவது பதிவுப் பெற்ற அரசாங்க அலுவலர் என்ற பெயர் பின்னர் ஏற்படலாயிற்று!

---

1. "The first 'news paper' in the world was "The Peking News" which celebrated its 1500th anniversary in 1863 and remined in existence until 1935. "The king pao" (court circular) first, appeared in A. D. 750. "Every body's Book of Facts", p. 418.

அச்சும் அச்சுப் பொறியும் மேனாட்டில் பெருவழக்கிற்கு வரத்தொடங்கிய பின்னர்தான்-அதாவது 500 ஆண்டு களாகத்தான் செய்தி இதழ்கள் அச்சடித்து விரைவாக வெளி யிடப்படுகின்றன. இதற்கு முன்பெல்லாம் மரக்கருவிகளைப் பயன்படுத்தியே இதழ்கள் அச்சடிக்கப்பட்டன.

இங்கிலாந்து நாட்டில் எலிசபெத் அரசியின் காலத்தில் இதழியல் தொழில் தொடங்கியது! இங்கு 1588இல் தோன்றிய முதல் செய்தித்தாள், சாதாரண விளம்பரம் போல் வெளியாகியது! அது விக்டோரியா பேரரசிக் காலத் திற்குள் தக்க முறையில் வளர்ந்து நவீன செய்தி இதழ் வடிவ மைப்புடன் வெளியாயிற்று! அங்கு ''வீக்லி-நியூஸ் (The Weekly News) என்னும் பெயரில் முதல் கிழமை இதழ் 1622இல் தோன்றியது. இங்கு திரு இஸ்டேட் (W. T. Stead) என்பவர் இதழியல் தொழிலின் முன்னோடியாகத் திகழ்ந் துள்ளார். இலண்டனின் முதல் நாளிதழ் ''போஸ்ட் பாய்'' (The Post Boy). இதற்கு அடுத்தபடியாக வெளியானது ''மார்னிங் போஸ்டு'' (The Morning Post). அடுத்தது ''இலண்டன் டைம்ஸ்'' (The London Times). இது மிகப் புகழ் பெற்ற நாளிதழாகத் திகழ்ந்தது; செய்திகளைத் தெளி வாக அமைத்து வெளியிடும் முறையில் உலகிற்கு வழிகாட்டி யாக விளங்கியது. 1785இல் ஜான் வால்டர் என்பவர் 'தினசரி உலகப் பதிவேடு' (The Daily Universal Register) என்ற நாளிதழைத் தொடங்கினார். இதுதான் பின்னர் ''இலண்டன் டைம்ஸ்'' என்று பெயர் மாறிப் புகழ் அடைந் தது. இங்கிலாந்தில் முதல் நாளிதழைத் தொடங்கிய பெருமை எலிசபெத் மாலெத் (Elizabeth Mallet) என்னும் பெண்மணிக்குரியதாகும்! இவர் 'தினசரிச் செய்திகள்' (The Daily Courant) என்ற நாளிதழை 11-3-1702இல் தொடங்கி நடத்தினார்.

ஜெர்மனியில் 1609இல் இஸ்டராஸ்பெர்க் நகரில் தோன்றிய ''உறவு'' (The Relation) என்ற நாளிதழ்தான்,

தனிப்பட்ட ஒருவரால் நவீன முறையில் அச்சிட்டு வெளியிட்ட முதல் செய்தித் தாளாகக் கூறப்படுகிறது.

அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் *29-9-1690*இல் பெஞ்சமின் ஆரிஸ் (Benjamin Harris) என்பவர் "பொது நிகழ்ச்சிகள்" (The Public Occurences) என்ற பெயரில் நாளிதழ் ஒன்றை வெளியிட்டார். இவர் அரசாங்கத்தை மிகக் கடுமையாகத் தாக்கி எழுதியதால், அது வெளியான முதல் நாளே அச்செய்தித் தாளை அரசாங்கம் தடை செய்து விட்டது! *1833*இல் நியூயார்க் நகரில் "சன்" (The Sun) என்ற நாளிதழைப் பெஞ்சமின் எச்டே (Benjamin Hetchday) என்பவர் ஒரு 'பென்னி' (காலணா) விலையில் மலிவாக வெளியிட்டு வழிகாட்டினார். அதற்கு முன்பெல்லாம் ஒரு நாளிதழின் விலை ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் மதிப்புடையதாக இருந்தது. *1619*இல் இதே நகரில் "தினச் செய்தி" (The Daily News) என்னும் நாளிதழ்தான், திடுக்கிடும் பரபரப்பான செய்திகளைப் படத்துடன் வெளியிட்டு வழி காட்டிய முதல் இதழாகும்!

ஐரோப்பாவில் ஏற்பட்ட பிரஞ்சுப் புரட்சிக்குப் பிறகு தான்உரிமைஉணர்ச்சியும் சமுதாய விழிப்பும் பெருக்கெடுக்கத் தொடங்கின.இவை செய்தி இதழ்களின் உரிமை வேட்கையைக் கொழுந்துவிடச் செய்தன.ஐரோப்பாவில் கி.பி. *1702* முதல் இதழ்கள் தற்போது போல் தொழில் அமைப்புடன் நடைபெற்று வருகின்றன.

பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அச்செழுத்து அடுக்கலும் அமைத்தலும் (Type-Composing and Setting) அச்சுப் பதிப்புமே மக்கள் கூட்டத்தின் கருத்துக்களைப் பல திக்குகளில் பரவுவதற்கு அடிப்படையாக இருந்தன. மேலும், சுருக்கெழுத்து (Short-hand) மூலம் விரைவாகக் குறிப்புகள் எடுத்துச் செய்திகளைத் திரட்டி அனுப்ப ஆங்காங்கே நிருபர்கள் (Correspondents) ஏற்படுத்தும் முறை ஏற்படலாயிற்று. செய்திகளை உடனுக்குடன் அனுப்ப தந்தி முறை (Telegraph system) மிகுதியும் உதவியாக இருந்தது. புகை

வண்டி, கப்பல், கம்பியில்லாத் தந்தி (Wireless) வானவூர்தி (Aeroplane) போன்ற போக்குவரத்து வசதிகள் சாதனமாக மேற்கொள்ளப்பட்டன. இதன் காரணமாகச் செய்தி நிறுவன அமைப்புகள் (Press-news Bureau) ஏற்பட்டன. ஒளிப் படம் (Photo) பிடித்து வெளியிடுதல், பேட்டி காணல், அன்றாட முக்கிய நிகழ்ச்சிகளைக் கேலிச் சித்திரமாக வரைதல் போன்ற பல வழிகளால் இதழ்கள் விரைவாகவும் விளக்கமாகவும் செய்திகளைத் தாங்கி மக்களை மகிழ்வித்த தால், இதழியல் தொழில் நாளுக்கு நாள் உலகெங்கும் பல்கிப் படரத் தொடங்கியது!

இதழியல் இப்படி வளர்ச்சியுற்றாலும், ஒவ்வொரு நாட்டினருக்கு என்று இதழியல் துறையில் தனிச் சிறப்பு, தட்டாமல் இருக்கவே செய்கிறது!

''இலண்டன் டைம்ஸ்'' உலகத்திலுள்ள எல்லா இதழாசிரியர்களாலும் ஒரு முன்மாதிரியாகக் கொள்ளப் பட்டு, பின்பற்றத்தக்க பெருமை வாய்ந்ததாக மிளிர்கிறது!

அமெரிக்கச் செய்தி இதழ்களில்—பல்வேறு ஒளியுருவப் படங்களும், குற்றச் செய்திகளும், பல சரக்கு விளம்பரங் களும், பொறி புலன்களை ஈர்க்கக்கூடிய நிகழ்ச்சிகளும், அழகான பெரிய தலைப்புகளும் முக்கிய அமைப்புகளாகக் கொண்டு விளங்குகின்றன. பிற்காலத்தில் பிரிட்டிஷ் இதழியல் தொழிலின் வளர்ச்சி பெரும்பாலும் அமெரிக்க இதழியல் முறையைப் பின்பற்றியதாகவே உள்ளது என்கிறார் திரு. மாஷிங்காம் (H. W. Mashingham).

சிறுகதை, தொடர்கதை முறையால் மக்களால் விரும்பி வரவேற்கப்படுவது பிரஞ்சு இதழியலின் இயல்பாகும்.

பண்டைய ஜெர்மானிய இதழ்களின் முக்கிய அமைப்பு அதன் உள்நாட்டுத் தன்மையாகும். மற்றொன்று, அதன் பொதுப்படையான கவர்ச்சியற்ற தோற்றமாகும்! மிக்க வியப்பும் விருப்பும் உண்டாகுமாறு அமைக்கப் பெறும்

விளம்பர முறையில் ஜெர்மானிய இதழ்கள் பெயர் பெற்று விளங்குகின்றன. இங்கு இலக்கிய இதழ்களும் விஞ்ஞான இதழ்களும் நன்கு தேர்ந்தவர்களால் எழுதப்படுகின்றன.

சீன நாட்டின் இதழ்கள் பல திறத்தனவாய் அமைந்து காணப்படுகின்றன. சிறப்புச் செய்திப் பகுதிகளுக்கும் சாதாரணப் பகுதிகளுக்கும் இடையில் அவற்றை வேறு பிரித்துக் காட்ட ஒரு கோடு அமைக்கப்பட்டிருக்கும்!

ஜப்பானிய நாட்டில் இதழ்களின் தொடக்கம் 1845 ஆகும். 1861இல் டச்சு நாட்டு இதழின் செய்திகளைச் சீன மொழியிலே மொழி பெயர்க்கப்பட்டதை, ஜப்பானிய இதழ்கள் தம் மொழியில் அப்படியே எடுத்து வெளியிட்டுள்ளன. 1878இல் ஜப்பானின் முதல் நாளிதழ், ''காலை தோறும் செய்திகள்'' (The News of Every-morning) என்பதாகும்; அது யோகோயாமா நகரில் வெளியிடப் பெற்றது. ஜப்பானிய இதழ்கள் உள்நாட்டு நடவடிக்கைகளிலும், வெளி நாட்டு நடவடிக்கைகளிலும் வேற்றுமை உடையனவாக இருந்தன! ஆனல், தேசியப் பெருமைக் குறைவு அல்லது அழிவு நேரும் எச்சமயத்திலும் ஜப்பானியர் ஒற்றுமைப்பட்ட கட்டுப்பாடும் நாட்டுப்பற்றும் பூண்டு, வீறு கொண்டெழு கின்றனர். அறிஞர் நோமா (Siji Noma) என்பவர், தம் ஒன்பது இதழ்களையும் ஒன்றைவிட மற்ெறொன்று சிறக்குமாறு நன்கு நடத்தி வந்துள்ளார்! ''ஸ்யூபென் எலெக்வென்ஸ்'' (Xuben Eloquence) என்னும் சொற்பெருக்காற்றல் துறைக்கு என்று தனி இதழையும் நடத்தியுள்ளார்.

இந்தியாவில் பண்டைக் காலத்தில் இருந்த அரசர்களால் இதழ்கள் நடத்தி வரப்பட்டதாகத் தெரியவில்லை! இங்கு முகலாயர் ஆட்சிக் காலத்தில்தான் அரண்மனைச் செய்தித் தாள் வெளியிடும் வழக்கம் கொண்டு வரப்பட்டது. இதற்கு வகியா அக்நாவிஸ் (Wakiah nawis) என்று பெயர். இதில் அரசாங்க நிர்வாகச் செய்திகள் மட்டுமே இடம் பெற்றிருந் தது! கையால் எழுதப்பட்டு முகலாய அரண்மனையிலிருந்து வெளியிடப்பட்டுள்ள இத்தகைய செய்திகளுள், நூற்றுக்

கணக்கில் கலோனல் ஜேம்ஸ் பிட் என்பவர் 'இராயல் ஏசியாடிக் சொசைட்டி'க்கு அனுப்பியுள்ளார். இவை ஒவ்வொன்றும் சராசரி 8'' × 4.5'' அங்குலம் கொண்ட அளவில் வெவ்வேறு கையெழுத்தால், எழுதப்பட்டிருந்தனவாம்!

இவர்களுக்குப் பின்னர் ஆங்கிலேயர் ஆட்சி செய்த போது இந்தியத் தலைநகராயிருந்த கல்கத்தாவில் 1750 சனவரி 29ஆம் நாளன்று ஜேம்ஸ் அகஸ்டஸ் இக்கே (James Augustus Hickey) எனும் ஆங்கிலேயரால், ''வங்காள கெஜட்'' (The Bengal Gazette) என்ற முதல் ஆங்கில வார இதழ் தொடங்கப்பட்டது. இதுதான் இந்தியாவின் முதல் இதழாகக் குறிக்கப்படுகிறது. திரு. இக்கே, தமது முதல் இதழில், ''எனது அறிவின்-ஆன்மாவின் உரிமையைப் பெறுவதற்கு விலையாக என் உடலை அடிமைப்படுத்துவதில் மகிழ்ச்சியுறுவேன்'' என்று எழுத்துரிமை வேட்கையுடனும் துணிவுடனும் குறிப்பிட்டுள்ளார். இவர் அந்நாளில், ஆங்கிலக் கிழக்கிந்திய குழும்பை (கம்பெனி)ச் சேர்ந்த அதிகாரிகளிடம் காணப்பட்ட ஊழலை வெளியிட்டார்; அவர்தம் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றியும் வெளிப்படுத்தவும் செய்தார். இதனால், 1782இல் இவரது அச்சகத்தை ஆங்கில அரசாங்கம் கைப்பற்றிக் கொண்டது! இவரையும் கைது செய்து சிறையில் அடைத்தது! சிறையிலிருந்து கொண்டே இதழை வெளிவரச் செய்த பெருமை இவருக்கு உண்டாயிற்று!

இக்கியின் 'பெங்கால் கெஜட்' இரண்டு தாள்கள் கொண்டது; 1 × 28 அங்குலம் அளவுடையது. அதிகாரிகளின் ஊழல்களையும், தனிப்பட்ட வாழ்க்கையில் ஏற்பட்ட சம்பவங்களையும் குறித்து அவதூறுகள் எழுதியதனால், இக்கிக்கு ஓராண்டு சிறைத் தண்டனையும், ரூ 2000 அபாரதமும் விதிக்கப்பட்டது. உறுதியுள்ளவராக இருந்தும் இக்கியின் வாழ்க்கை வறுமையிலே கழிந்தது!

அக்காலகட்டத்தில் ஆங்கில அதிகாரிகளின் அட்டூழியங்களையும் ஊழல்களையும் வெளிப்படுத்துவது, ஆங்கிலேயர்களை ஆசிரியர்களாகக் கொண்ட இதழ்களின் பெரு வழக்கமாக இருந்து வந்துள்ளது. அவர்களால் நடத்தப் பெற்ற இதழ்களாவன: ''இந்தியா கெஜட்டு'' (The India Gazette), ''கல்கத்தா கெஜட்டு'' (The Calcutta Gazette), ''பெங்கால் ஹர்க்காரா'' (The Bengal Hurkara) என்பன வாகும்.

13-5-1799இல், அரசாங்கப் பிரதிநிதியாக (Viceroy) இருந்த வெல்லஸ்லி பிரபு (Lord Wellesly) கொண்டு வந்த கொடிய அடக்குமுறை சட்டத்தால், இந்தியாவில் தோன்றிய தொடக்கக் கால இதழ்கள் துவண்டு மறைந்து போயின; பின்னர் ஆட்சி செய்த ஹேஸ்டிங்ஸ் பிரபு (Lord Hastings) அக்கொடிய சட்டங்களை 19-8-1818இல் அகற்றியும், இதழாசிரியர்களுக்கு உதவியான சில பொது விதி களை மாத்திரம் வகுத்தும், தாராள மனப்பான்மை காட்டி னார். இவர் காலத்தில்தான் இந்நாட்டுத் தாய்மொழி இதழ்கள் முகிழ்க்கத் தொடங்கின!

அப்போது ஆங்கிலேய ஆட்சியினர் மேற்கே ஏடனுடனும், தெற்கே இலங்கையுடனும், கிழக்கே பர்மா சிங்கப்பூருடனும் இந்தியாவை இணைத்து ஆண்டு கொண்டிருந்தனர்.

இலங்கையில், கி.பி. 1802இல் ''சிலோன் கெஜட்'' (The Ceylon Gazette) எனும் இதழ் தொடங்கப்பட்டு, தமிழ் சிங்களம் ஆங்கிலம் என்னும் முப்பகுதிகளைக் கொண்டு வெளிவந்தது. இதுதான் இலங்கையில் தாய்மொழிகளைத் தாங்கி வெளிவந்த முதல் இதழாகும்!

இந்தியாவில் வங்காளத்தில் 1816இல் கங்கா கிஷோர் பட்டாச்சாரி என்பவரால் ''வங்காள கெஜட்'' எனும் வங்க மொழி இதழ் தோற்றுவிக்கப்பட்டு, சில காலம் வரை நடந்து மறைந்து விட்டது. பின்பு 1818இல் ''சமாச்சார் தர்பன்'' என்ற கிழமை இதழ், சிராம்பூர் கிறிஸ்தவ சமயத்தின் ஆதர வுடன் நடைபெற்றது.

அடுத்து 1821 இல் ''சம்பத்கௌமுகி'' எனும் வார இதழ், பவானி சரண் பானர்ஜி என்பவரால் நடத்தப் பட்டது. இதற்குத் திரு. இராஜாராம் மோகன் ராயின் போற்றுதல் கிடைத்தது. இராஜாராம் மோகன் ராயும் வங்காள மொழியிலும் பார்சி மொழியிலும் இதழ்கள் நடத்தியுள்ளார். 1853இல் கிரிச் சந்திர கோஷ் என்பவர் ''இந்து பேட்ரியட்'' எனும் பெயருடைய ஆங்கில இதழைத் தொடங்கி நடத்தினர். இதுதான் இந்தியரால் தொடங்கி நடத்தப் பெற்ற முதல் ஆங்கில இதழாகும்! மேற்படி கோஷாலும் அவரது உடன் பிறந்தவராலும் 1851-லேயே ''பெங்கால் ரெகார்டு'' என்ற இதழும் நடத்தப் பெற்றது. இந்த இதழ்களெல்லாம் கல்கத்தாவில் மட்டும் புகழ் பெற்று விளங்கின.

பம்பாயில் ''ஸ்ரீ மும்பை நா சமாச்சார்'' (Sri Mumbai-Na-Samachar) என்ற குஜராத்தி வார இதழைப்பர் தோன்ஜி மார்ஸ்பான் என்பவர் தொடங்கினர். 1832 இல் இது தினசரியாக வளர்ச்சியுற்றது; இப்போது இது ''பாம்பே சமாசார்'' என்ற பெயரில் நடந்து வருகிறது; இந்தியா விலேயே மிகப் பழைய இதழ் இதுதான் என்று சொல்லப் படுகிறது! 1846 இல் இதே நகரில், ''சித்திரக் கன்யன் தர்பன்'' (The Chitra Ganyan Darpan) என்ற குஜராத்தி இதழ் தொடங்கப்பட்டது. படங்களுடன் வெளிவந்த முதல் இந்திய மொழி இதழ் இதுதானாகும்! 1856இல் பம்பாயில் ''ஸ்திரி போதா'' (The Sri Bodh) என்ற குஜராத்தி மாத இதழ் தோன்றியது. இதுதான் இந்தியாவிலேயே பெண் களுக்காகத் தொடங்கப்பட்ட முதல் இதழாகும்.

1837 இல் ''தத்தர்சன்'' என்னும் மராத்தி மொழி இதழும் தோற்றமாகியது. 1868 இல் வங்காளத்தில் உள்ள அமிர்தபஜார் என்ற சிற்றூரில் சிசிர் குமார் கோஷ் உடன் பிறப்புகளால் ''அமிர்தபஜார் பத்திரிகா'' என்ற இதழ் தொடங்கப்பட்டது. கருத்துப்படம் (Cartoon) வெளியிட்ட முதல் இந்திய இதழ் இதுதான் என்று கூறப்படுகிறது!

மரக்கட்டைகளில் செதுக்கப்பட்ட அச்சுகளைக் கொண்ட ஓர் அச்சகத்தை அவர்கள் 32 ரூபாய்க்கு வாங்கி, அதில் மேற் சொன்ன 'அமிர்த பஜார்' இதழைத் துவக்கத்தில் அச்சடித் தனராம்! இவ்விதழ் இப்போது ஒரு நாளிதழாக நடந்து வருகிறது.

ஆங்கிலேயர் ஆட்சியின்போது, இந்தியத் தலைநகரா யிருந்த கல்கத்தாவில் இதழ்கள் தொடங்கப்பட்ட காலத்திலேயே, சென்னையிலும் பல இதழ்கள் தோன்றி யுள்ளன.

12-8-1785இல் ''சென்னை கூரியர்'' (The Madras Courier) என்ற முதல் சென்னை மாகாணச் செய்தித்தாளை ரிச்சர்டு ஜான்ஸ்டன் (Richard Johnston) என்பவர் தொடங்கி நடத்தியுள்ளார். இம்மாத இதழின் விலை ரூபாய் ஒன்றாகும். இதற்குப் போட்டியாக ''தி வீக்லி மெட்ராஸ்'' (The Weekly Madras) என்றஇதழ்தோன்றியது. 1791இல் ''சென்னை ஹர்காரு'' (The Madras Hurharu) என்ற இதழும், 1792இல் ''சென்னை கெஜட்டு'' (The Madras Gazette) இதழும், 1795இல் ''மதராஸ் எரால்டு'' (The Madras Herald) இதழும் துவக்கப்பட்டுள்ளன. 4-1-1832இல் ''செயிண்டு ஜார்ஜ் கெஜட்'' (St. George Gazette)டின் முதல் இதழ் வெளியாகியது. 1836இல் ஜெ. ஒளக்டர் லோனி என்பவர் ''திஸ்பெக்டேட்டர்'' (The Spectator) எனும் இதழைத் தொடங்கினார். இதனை வெளியிட்டவர் திரு. சுப்பு முதலி என்பவராவர். இதுதான் சென்னை மாகாணத்தின் முதல் ஆங்கில நாளிதழ்களின் தாயாகக் கூறப்படுகிறது! 1861இல் காண்ட் பிரதர்ஸ் என்ற புத்தக நிறுவனத்தார் ''திமெட்ராஸ் டைம்ஸ்'' (The Madras Times) என்ற இதழைத் தொடங்கி நடத்தி வந்தனர். முன்பு குறிப்பிட்ட 'ஸ்பெக்டேட்டர்' பின்னர் இத்துடன் இணைக்கப் பட்டது. இது காலையிலும் மாலையிலும் வெளி வந்தது. 1862இல்சென்னையில் ''தி மெட்ராஸ் மெயில்'' (The Madras Mail) என்ற ஆங்கில நாள் இதழ் தொடங்கப்பட்டது. இது

முன்பு தோன்றிய 'மெட்ராஸ் டைம்சு'டன் 1921இல் இணைக்கப்பட்டது. அப்போது இதன் ஆசிரியராக இருந்தவர் கிளின் பார்லோ என்பவராவர். 'மெட்ராஸ் மெயில்' தான் இந்தியாவில் துவக்கப்பட்ட முதல் மாலை நாளிதழாகும்! இதற்குப் பின்னர் ஆசிரியர்களாக வந்தவர்கள் டி. ஸ்காட்டு பிரம்னெர் (D. Scott Bremner) ஏ. ஏ. ஹேயில்ஸ் (A. A. Hayles) என்பவர்களாவர். இது நல்ல முறையில் செய்திகளை வெளிப்படுத்தியதுடன், கடைசிப் பக்கத்தில் படங்களை நிறைய வெளியிட்டுப் புகழ்ப் பெற்றுள்ளது. இது இந்தியர் கை மாறியது; நூறு ஆண்டுகள் வரை நடை பெற்று நிறுத்தப்பட்டு விட்டது!

சுதேசிகள் சங்கச் (Native Association) சார்பில் ''கிரிசென்ட்'' (The Cresent) என்ற இதழும் (இதற்கு திரு காஜுலு லட்சுமி நரசுசெட்டி ஆசிரியராகஇருந்தார்.) பூண்டி அரங்கநாத முதலியாரை ஆசிரியராகக் கொண்டு ''நேடிவ் பப்ளிக் ஒபீனியன்'' (The Native Public Opinion) என்ற இதழும் சென்னையில் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. ''மெட்ராஸி'' (The Madrasi) எனும் பெயரில் திரு. ஏ. இராமசாமி ஐயர் ஓர் இதழைத் துவங்கினர். 'நேடிவ் பப்ளிக் ஒபீனியன்' என்ற இதழ் முதலில் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் எனும் மூன்று மொழிகளிலும் கருத்துகளைக் கொண்டு வெளியாகியது. பின்னர் ஆங்கிலத்தில் மட்டும் அது வெளியாகியது.

1878 இல் சென்னையில் திரு. ஜி. சுப்பிரமணிய ஐயரால் ''இந்து'' (The Hindu) எனும் வார இதழ் முதலில் தொடங்கப்பட்டது. 1-4-1889 - லிருந்து அது நாளிதழாக மாறியது. இந்தியருக்கு அதிலும் தமிழருக்குச் சொந்தமான மிகப் பழைய ஆங்கில நாளிதழ் 'இந்து'வேயாகும். இது தொடக்கத்தில் சில வாரங்கள் கையால் எழுதி நகல் எடுத்து வெளியாகியது! 'இந்து' கஸ்தூரி ரங்க ஐயங்காரின் குடும்பத் திற்குக் கைமாறி, நூற்றாண்டு விழாக் கொண்டாடி, இந்தியாவின் மிகச் சிறந்த ஆங்கில நாளிதழாகத் திகழ்ந்து



வருகிறது. 'இந்து' விற்கு—'ஸ்போர்ட்ஸ்&பாஸ்ட் டைம்ஸ்,' 'பிரன்ட் லைன்' (The Sport and Pastimes & Front Line) போன்ற துணை இதழ்களும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இதன் சார்பில் தமிழ் நாளிதழும் நடத்த திட்டமிடப் பட்டுள்ளது! திரு. சுப்பிரமணிய ஐயரால் 1882 இல் தொடங்கப் பெற்ற வார இதழ்தான் "சுதேச மித்திரன்". இது பின்னர் நாளேடாக மாற்றப்பட்டது. திருமதி அன்னி பெசன்ட் அம்மையார் "மெட்ராஸ் ஸ்டாண்டர்ட்" என்ற இதழை விலைக்கு வாங்கி, "நியூ இந்தியா" (The New India) என்று பெயர் வைத்து, தினசரி யாக நடத்தியுள்ளார்.

தென்னிந்திய நல உரிமைக் கழகத்தின் (The South Indian Liberal Federation) சார்பில் 1917 இல் "ஜஸ்டிஸ்" (The Justice) என்ற ஆங்கில இதழ், டாக்டர் டி. எம். நாயரை ஆசிரியராகக் கொண்டு நடத்தப் பெற்றது. இந்த இதழ் புகழ் பெற்று விளங்கியதன் காரண மாகத்தான், இதனை நடத்திய முற்கூறிய கழகத்திற்கு, 'ஜஸ்டிஸ் கட்சி' என்ற பெயர் அமைந்துவிட்டது! இவ் விதழில் தான், புகழ் பெற்ற நாவலராக விளங்கிய ஆற்காட்டு இராமசாமி முதலியார் விறுவிறுப்பான தலையங்கங்களை எழுதி வந்தார். 1921 இல் "டெய்லி எக்ஸ்பிரஸ்" (The Daily Express) என்ற இதழ் ஒன்று ஆங்கிலேயரால் தொடங்கி நடத்தப் பெற்றது. இந்த இதழைத்தான் திரு. லட்சுமி காந்தன் என்பவர் வாங்க முயன்று, பொய்க் கையெழுத்திட்ட காசோலை(செக்)யைத் தந்ததால், வழக்குத் தொடரப்பட்டுத் தீவாந்திர தண்டனை அனுபவிக்க வேண்டியதாயிற்று!

திருவாளர்கள் எம். ஆர். ஜயக்கர், வால்சந்த் ஹிராசந்த் பிர்லா முதலியவர்களின் துணையோடு, திரு. சதானந்தம் என்பவர் 'நியூஸ் சர்வீஸ்' (The News Service) என்ற ஒரு செய்தி நிறுவனத்தைத் தொடங்கினார். பின்னர், இவர் பம்பாயில் 1930இல் "பிரிபிரஸ் ஜர்னல்" (The Free Press

Journal) என்ற ஆங்கில நாளிதழை வெளிக் கொண்டு வந்தார். இதில் சிறப்பான செய்திகள் வெளியிடப்பட்டன. செய்தித் தலைப்புகள் கொட்டை கொட்டையான பெரிய எழுத்தில் பக்க அகலத்தில் போடப்பட்டன. செய்தித் தலைப்புகள் இந்தியாவில் வேறு எந்த இதழும் இப்படிச் செய்ததில்லை. மற்ற இதழ்களின் விலை ஓர் அணா, இரண்டணா என்று இருந்த போது, இவர் அந்த இதழுக்கு அரையணா விலை வைத்து மலிவாகக் கொண்டு வந்தார்! "இந்தியன் எக்ஸ்பிரஸ்" (The Indian Express) என்ற ஆங்கில நாளேட்டை திரு. பி. வரதராஜுலு நாயுடு நடத்தி வந்தார். மேலும், இவர் "தமிழ்நாடு" என்னும் தமிழ் நாளிதழையும் திறம்பட நடத்தினார். இவரிடமிருந்து 'இந்தியன் எக்ஸ்பிரஸை, விலைக்கு வாங்கினார் திரு. சதானந்தம். 1934இல் இவர் "தினமணி" என்னும் தமிழ் நாளிதழைத் தொடங்கி, திரு. டி. எஸ். சொக்கலிங்கத்தை ஆசிரியராக அமர்த்தி நடத்தினார்.

1875 இல் ராபர்ட் நைட்டால் கல்கத்தாவில் தொடங்கப்பட்ட "ஸ்டேட்ஸ்மென்" என்ற இதழுக்கு ஓரணா விலை வைக்கப்பட்டது. 1870இல் "சுலப சமாச்சர்" என்ற இதழ் கல்கத்தாவில் தொடங்கப்பட்டது. ஒரு காசு விலை வைக்கப்பட்டு 4000 இதழ் செலவாயிற்று!

# 1. தமிழ் இதழ்களின் போக்கு

மக்களின் தேவைகளும் விருப்பங்களும் பெருகப் பெருகச் சமூக அமைப்பும் அதற்கு ஏற்ப மாறிக்கொண்டே வருகிறது. மக்களுக்கு அன்றாடம் உணவும் உடையும் இடமும் தேவைப் படுகின்றன.

உலகின் நாலா பக்கங்களிலிருந்து புத்தறிவுக் கொளுத்தி புதிய பார்வையைக் கொடுத்து, மக்கள் புதிய பாதையில் அடி யெடுத்து வைக்க புதிய புதிய செய்திகளைக் கொண்டு வந்து தருவது இதழ்களாகும்.

இதழ்கள் செய்திகளைத் தருவதுடன், மக்களுக்கு அறிவைப் புகட்டி அரசியல் விழிப்பை உண்டுபண்ணி, சமுதாயத்தைச் சீர்திருத்தி, மக்களின் உரிமையைப் பாது காத்து நாகரீகத்துக்கு நல்ல எடுத்துக்காட்டாகவும் விளங்கு கின்றன.

உலகை—அறிவுலகு என்றும் பண உலகு என்றும் ஆட்சி உலகு என்றும் பாகுபடுத்திச் சொல்வார்கள். அறிவைக் கொடுக்கும் இதழ்களும் இன்று தமக்கென்று ஒரு தனி இடத்தை இவ்வுலகில் தேடிக்கொண்டு விட்டன! ஆம். வல்லரசுகளுக்கு இருக்கும் செல்வாக்கைவிடப் போர்க்குணம் படைத்தவர்களுக்கு உள்ள பலத்தைவிட, அறிவாளி களுக்குத் தரப்படும் மேன்மையைவிட, இதழ்களுக்கு அதிக செல்வாக்கும் பலமும் மேன்மையும் இன்று கிடைத்திருக் கின்றன. இதனால்தான் அவை உலகப்போக்கையே மாற்றக் கூடிய வல்லமை பெற்றதாகி நனி சிறந்து விளங்குகின்றன!

சமூக வழக்கங்கள் மாறுதல் அடைந்து வருவது போல், படிக்கும் இயல்பும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகிறது. பண்டைக் காலத்தில் ஒரு சிலரிடத்தில் மட்டுமே அறிவு தேங்கிக் கிடந்தது! பின்னர் குருகுலக் கல்வி மூலமாக ஒரு சிலர்க்கே அளவோடு அது தரப்பட்டது! அதன் பின்னர்

திண்ணைப் பள்ளியிலும், உயர்நிலைப் பள்ளியிலும் மேல் உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரியிலும், பல்கலைக் கழகத்திலும் அறிவை விரும்புபவர்க்கெல்லாம் வாரி வாரி வழங்கப்படுகிற நிலையைப் பார்க்கிறோம்.

18ஆம் நூற்றாண்டில் மேனாட்டில் தேனீர் விடுதிகளில் மட்டும் இதழ் படிக்கும் பழக்கம் இருந்து வந்தது; 19ஆம் நூற்றாண்டில் தொடர் வண்டிகளில் படிக்கக் கூடிய அளவிற்கு அது வளர்ச்சியடைந்தது. இன்றோ இதழ்கள் பெருகி, உந்து வண்டிகளிலும் பேருந்து வண்டிகளிலும் விமானங்களிலும் தொலைக்காட்சிகள் மூலமும், மாடமாளிகை வாசிகளிலிருந்து மண் குடிசைகளில் உறைபவர்கள் வரையிலும், சாலையிலிருந்து முட்டுச் சந்துகளிலும்கூட அவை படிக்கப்பட்டு வருகின்றன.

காலையில் எழுந்தவுடன் செய்தி இதழைப் படிக்க வேண்டும் என்ற ஆவல் மக்களிடையே பெருகி வருகின்றது. அதனைப் படிக்க முடியாது போய் விட்டால், அந்த நாளின் உலகப்போக்கை அறிய முடியாத ஓர் இருண்ட சூழ்நிலை ஏற்பட்டு விடுகிறது! கண்ணாடி போடும் பழக்கமுள்ளவருக்குக் கண்ணாடி இல்லாவிட்டால் எப்படித் தொல்லையாக இருக்குமோ, மூக்குப் பொடி போடும் வழக்கம் உள்ளவருக்குச் 'சிட்டிகை'ப்பொடி கிடைக்கா விட்டால் எப்படி 'வெறி'ச்சென்று இருக்குமோ, 'காப்பி'க் குடிப்பவனுக்குக் 'காப்பி' இல்லாவிட்டால் எப்படித் தலைவலி வந்துவிடுமோ, அது போலத்தான் இதழைத் தொடர்ந்து படிப்பவர்க்கு அதைக் காணாவிட்டால் 'விழிப் பெற்று இழந்தவனைப்' போன்ற ஏக்கம் ஏற்பட்டுவிடும்! அந்த அளவிற்கு இதழ்கள் மக்களின் அன்றாட வாழ்க்கையில் இன்றியமையா இடம் பெற்றுள்ளன!

செய்தி இதழ்கள் விரிந்து கிடக்கும் உலகத்தைச் சுருக்கிக் காட்டுகின்றன; தொலைவில் உள்ளவர்களை நெருங்கிவரச் செய்கின்றன; ஒரு வேளை கஞ்சிக்கு ஆலாய்ப் பறக்கும் ஏழையையும், உண்ட உணவு உடம்புக்கு ஏற்றுக் கொள்ள

வில்லையே எனக் கவலைப்படும் செல்வனையும் உலகக் கவனத்திற்கு ஒருங்கே கொண்டு வந்துவிடுகின்றன. இவையும் இவைபோன்ற எண்ணற்ற பணிகளையும் அவை உடன் செய்து காட்டுகின்றன.

நேற்றுவரை ஓர் இடத்தைப் பற்றியோ ஒருவரின் பெயரைப் பற்றியோ பெரும்பாலோருக்குத் தெரியாது இருந்திருக்கலாம். ஆனால், செய்தி இதழில் அதுபற்றி அறிவிக்கப்பட்டதும், அந்த இடத்தையோ அல்லது அவ்வொருவரையோ குறித்துக் காட்டுத் தீ போல் செய்தி பரவி உலகம் முழுவதும் அறிந்து கொண்டு விடுகிறது!

இதனை விளக்க ஒரு சில எடுத்துக்காட்டுகளைச் சொல்ல வேண்டியுள்ளது. 1942 முன்பு வினோபா என்னும் பெயர் ஒரு சிலர்க்கே தெரிந்த பெயராக இருந்தது. தனிப்பட்டவர் அறப் போரை (தனி நபர் சத்தியாக்கிரகம்)க் காந்தியடிகள் தொடங்கி வைத்தபோது வினோபாவின் பெயரை முதலில் அறிவித்தார். பின்னர் அப்பெயர், மராட்டிய மண்டலத் தைத் தாண்டி இந்தியா முழுவதும் அறிந்த பெயராக ஆகி விட்டது! கச்சத் தீவு, இராமநாதபுர மாவட்டத்தில், இராமநாதபுர அரசர்க்குச் சொந்தமாக இருந்த ஒரு தீவாகும். இதனை, இந்திரா அம்மையார், இலங்கை அரசுக்கு, 'கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளை யாருக்கு உடைத்தது போல'த் தாராளமான மனதுடன் வழங்கியபோது, அத்தீவு உலகம் தெரிந்த ஒரு தீவாக மாறியது! நெய்வேலி, தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர். அங்கு நிலத்துக்கு அடியில் பழுப்பு நிலக்கரி புதை யுண்டு கிடக்கிறது என்ற செய்தி இதழ்களில் வெளிவந்த பின்னர், உலகினர்க்கு நெய்வேலி மிக நெருங்கிய ஊராகி விட்டது! இவைகளிலிருந்து செய்தி இதழ்களின் செல் வாக்கும் சிறப்பும் நன்கு விளங்குகின்றதன்றோ?

மாதவி தனது காதலனான கோவலனுக்குத் தாழம்பு மடலில் பிச்சுப் பூ முகை கொண்டு, சந்தனக் குழம்பில்

தோய்த்துத் தனது உள்ளக் கிடக்கைகளை எழுதித் தெரிவித்தாள் என்று 'சிலப்பதிகாரம்' தெரிவிக்கிறது. இதனால் தாழம்பு மடல் எழுது சாதனமாக இருந்திருக்கிறது என்று தெரியவரும். தாழம்பு மடலைத் தாள் என்றும் சொல்வர். ஆகவேதான், இன்று நாம் எழுதப் பயன்படுத்தும் காகிதத்தைத் தாள் என்று கூறுகிறோம். 'காகித்' என்ற உருது சொல்லிலிருந்து 'காகிதம்' என்ற சொல் வந்துள்ளது. பல இதழ்கள் கொண்டது மலர். இலைகளைப் 'பத்திரம்' என்று வடமொழியில் கூறுவர். எனவே, பத்திரிகையைத் (பத்திரிகா—பத்திரிகை; இது பத்திரம் என்ற வட சொல்லிலிருந்து வந்துள்ளது) தாளிகை என்றும் அழைக்கலாம். இதழ் என்றும் ஏடு என்றும் தாள் என்றும் கூறலாம். தினசரி (Daily) வெளியாகும் இதழை 'நாளிதழ்' அல்லது 'நாளேடு' என்றும், வாரந்தோறும் (Weekly) வெளியாகும் இதழைக்'கிழமை இதழ்', 'வார இதழ்', 'வார ஏடு' என்றும், 15 நாள்களுக்கு ஒரு முறை வெளியாகும் இதழைப்'பிறை இதழ்' (Fortnightly), மாதஇரு முறைஇதழ் என்றும், மாதம் ஒருமுறை வெளியாகும் இதழை, மாத இதழ் (Monthly), 'திங்கள் இதழ், மாசிகை' (Magazine) என்றும்,மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வெளிவரும் இதழை 'முத்திங்கள் இதழ்' (Quarterly), காலாண்டு இதழ் என்றும், ஆறு மாதத்திற்கு ஒரு முறை வெளியாகும் இதழை 'அரையாண்டு இதழ்' (Half yearly) என்றும், ஆண்டிற்கு ஒரு முறை வெளியாகும் இதழை ''ஆண்டு இதழ்'' (Yearly), ஆண்டு மலர் என்றும் நாம் பாகுபடுத்திக் கொள்ளலாம்.

பழங்கால இதழ்களைத் தேடிப் பிடித்து ஆராய்ந்து பார்த்தால்—அவற்றின் தொடக்க காலம் எப்படி இருந்தது, இதழ்களின் நோக்கங்கள் என்னவாயிருந்தன, என்னென்ன பொருள்களைப் பற்றி அவை விளக்கி இருந்தன, அவற்றின் அளவுகள், அமைப்புகள், நீக்குப்போக்குகள், அவை யாரால் தொடங்கி எங்கு நடத்தப் பெற்றன, அவற்றின் கையொப்பக்

காரர்களின் எண்ணிக்கை எவ்வளவு, அவற்றின் ஆசிரியர் களின் தகுதி திறமை என்னென்ன என்பன போன்ற விவரங்கள் எல்லாம் நன்கு தெரிய வரும்.

இதழ் ஒவ்வொன்றும் மலர்-1, இதழ்-1 என்றோ, சுவடி-1, ஏடு-1 என்றோ, மணி-1, ஓசை-1 என்றோ அவரவர் விருப்பப்படி தலைப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும். தமிழிலும் ஆங்கிலத்திலும் நாள் மாதம் ஆண்டு தெரிவிக்கப் பட்டிருக்கும். தொடக்கத்தில் ஓராண்டு வரையில் தமிழில் தொடர் எண்கள் தரப்பட்டிருக்கும். ஆண்டு முடிந்த பிறகு வேறு எண் மறுபடியும் தொடங்கும். இதழின் பெயர், அதைத் துவக்கிய காலத்திற்கும் துவக்கியவரின் விருப்பத் திற்கும் ஏற்றவாறு அமைக்கப்பட்டிருக்கும்; சமயச் சார்புடை யதாகவும், கொள்கைச் சார்புடையதாகவும், கட்சிச் சார்புடையதாகவும் அது அமைந்து காணப்படும். இதழின் நடையின் அமைப்பும் காலச் சூழ்நிலைக்குத் தகுந்தவாறும், ஆசிரியரின் கல்வி கேள்வி மொழி ஈடுபாடு இவற்றிற்கு ஏற்ப வும் சமைக்கப்பட்டிருக்கும்.

தமிழ் இதழியல் உலகைக் கூர்ந்து கவனித்தால், அது பல கால கட்டங்களைத் தாண்டி வந்திருப்பது தெரிய வரும். அதன் தொடக்க கால வளர்ச்சி குறுகியதாக இருந்தாலும், அக்காலத்தில் எழுந்த இதழ்கள்—ஆழமான நுட்பமான பொருள்களைக் குறித்தெல்லாம் மிகவும் கவனத்துடன் எழுதி, படிப்பவரின் சிந்தனையை மேலும் பெருகச் செய்வ தில் முனைப்பாக இருந்து வந்துள்ளன என்பது நன்கு புலப் படும். அக்கால இதழ்களின் ஆசிரியர்கள் ஆழ்ந்த அறிவும், மக்களை விழிப்புறச் செய்வதில் வேணவாவும் கொண்டிருந் தார்கள். அவர்கள் பண வருவாயைவிடச் சிந்தனையை வளர்ப்பதிலே அதிக கவனம் செலுத்தியுள்ளனர்.

தமிழ் இதழ்கள் முதலில் மாத இதழாகவும், மாத இரு முறை மாத மும்முறை இதழ்களாகவும். வார இதழாகவும், நாளிதழாகவும் தோன்றியுள்ளன என்பதையும் நாம் ஒருவாறாக அறியலாம்.

முற்காலத் தமிழ் இதழ்களின் பெயர்கள்—விவேகபாநு வித்தியாபாநு என்றும், சுதேசபிமானி, நியாயாபிமானி, தேசாபிமானி என்றும், ஜனானுகூலன், பிரஜாநுகூலன் என்றும், சுதேசமித்திரன் பிரபஞ்சமித்திரன் வைசிய மித்திரன் என்றும், விவேக சிந்தாமணி, விவேக போதினி என்றும் ஓர் இதழின் பெயரின் முன்னொட்டையோ பின்னொட்டையோ உடன் கொண்டு வெளி வந்துள்ளன.

தமிழ் இதழின் தொடக்கம் 1830. தமிழ் இதழியல் வரலாற்றை 1) 1830 முதல் 1859 வரை அதாவது சிப்பாய்க் கிளர்ச்சிக்கு முன்வரை ஒரு கால கட்டமாகவும், 2)1859 முதல் 1900 வரை மற்றொரு கால கட்டமாகவும், 3)1901-லிருந்து1942 வரை இன்னொரு கால கட்டமாகவும், 4)1943 லிருந்து 1980 வரை பிறிதொரு கட்டமாகவும் வசதிக்காக வேண்டி பிரித்துக் கொள்ளலாம்.

இம் முதல் கால கட்டத்தில் தமிழ் இதழ்கள் அரும்பின. இரண்டாவது கால கட்டத்திற்குள் அவைகளுள் பல அரும்பாகி போதாகி மலராகி மணக்காது கருகிப் போயின! மூன்றாவது கால கட்டத்தில் சமய இதழ்களும், சமூக இதழ்களும், அரசியல் இதழ்களும், புற்றீசல் போல் பெருகின. அவைகளில் ஒரு சிலவற்றைத் தவிர ஏனையவை ஓரிரு ஆண்டுகளுக்குள்ளே மறைந்து போயின! பின்னர் அரசியல் விழிப்புணர்வும் அறிவு வேட்கையும் வளரவளர அதற்கு ஏற்றாற்போல் வளைந்தும் நெளிந்தும் போகாத சமூகங்கள் சமூகத்தலைவர்கள், சமூகக் கட்சிகள் ஆகியவை ஆதரவு குறைந்து செல்வாக்கிழந்து போவது இயற்கையின் நியதிதானே!

இந்தியாவில் இதழ்களை முதலில் நடத்தியவர்கள் ஆங்கிலேயர்களாக இருந்ததால், அவர்கள் வெள்ளையதிகாரிகளின் அட்டூழியங்களையும் ஊழல்களையும் வெளிப்படுத்துவதில் கண்ணுங்கருத்துமாக இருந்தனர். அக்காலத்தில் அரசப்பிரதிநிதிக்கு (Viceroy) இதழ்களை அடக்க

உரிமையில்லாதிருந்தது! பின்னர், இந்திய உரிமைக் கிளர்ச்சி 1857ல் தோன்றியதால், அரசினர் இத்துறையில் அதிக கவனம் செலுத்தி இதழ்களுக்கு வாய்ப்பூட்டுச் சட்டத்தைக் கொண்டு வந்தனர். இதன்படி ''நேராகவோ, மறைபொருளாகவோ, குறிப்பாகவோ, உட் கருத்தாலோ, வேறு எந்த விதத்திலோ சில செயல்களை எழுப்பக் கூடிய எதையும் வெளியிடலாகாது'' என்று அச்சு அவசர சட்டத்தின் 14 வது பிரிவில் கூறப்பட்டிருக்கிறது. இச் சட்டப்படி இதழ்களை உரிமையோடு நடத்தவே முடியாது! ஆகவேதான், இந்தியாவில் இந்தியர்களால் அரசியல் இதழ்களை நடத்த முடியவில்லை! அவர்களில் ஒரு சிலர் இலக்கியம், சமயம், சமூகம் ஆகிய 'கெடுபிடி'யற்றத் துறையில் நாட்டஞ் செலுத்தினர்.

இப்படிப்பட்டவர்களில் சிலருக்கு இலக்கியத் தேர்ச்சியும், சமய உணர்வும், சமூகப் பற்றும் மிகுந்திருந்ததில் வியப்பில்லை அல்லவா? தகுதிமிக்க ஆசிரியர்கள் கிடைத்ததால், இலக்கியத் துய்ப்பு ஏற்பட்டது; சமய மறுமலர்ச்சி உண்டானது; சமூக விழிப்புணர்வு தோன்றியது.

ஆகவே, ஒவ்வொரு சமூகமும் தம் முன்னோர் பெருமையை அறிந்து விழித்தெழுந்தன! தமக்குள் காணப்பட்ட சில்லறை வேற்றுமைகளை ஒதுக்கி, மேலான நோக்கத்திற்காக ஒற்றுமை கொண்டன. தம் தாய் மொழி - மற்ற மொழிகளைப் போல பல துறைகளிலும் சிறந்து விளங்கப் பாடுபட்டன. தம் தாயகம் பிறர்க்கு எவ்வகையிலும் அடிமைப்பட்டுக் கிடக்காது உரிமையோடு வாழ வேண்டும் என்று சிந்திக்கத் தொடங்கின. தம் பழம் பெருமையோடு உலக முன்னேற்றுதலுக்கு ஏற்ப புத்தம் புதிய துறைகளில் ஏற்றம் பெறத் துடி துடித்தன.

இதற்கு வேண்டிய வகையிலெல்லாம் இதழாசிரியர்கள் சிந்தித்து சிறக்க எழுதினார்கள். படிப்பவர்களின் சிந்தனையைக் கிளறி அவர்களைச் செயல்படச் செய்வதில் நாட்டமுடையவர்களாக இருந்தார்கள்; அவர்களுக்குத் தங்கள் தகுதியும் தெரிந்திருந்தது; அவர்கள் இலக்கியத்தையும்

நன்கு கற்றிருந்தார்கள்; அதோடு உலகோடு ஒட்ட வாழவும் முனைந்திருந்தார்கள். ஆகவேதான், அவர்கள் மேற்போக்காக எழுதாமல் சற்று ஆழமாக - அகலமாக - ஏன் சிறிது கடினமாகக்கூட எழுதியுள்ளதைப் பழங்காலத் தமிழ் இதழ்களைச் சிறிது புரட்டிப் பார்த்தாலே உணர்ந்து கொள்ளலாம்!

தமிழ் இதழ்கள் தோன்றத் தோன்ற காலத்திற்கு ஏற்ற ஆசிரியர்கள் நமக்குக் கிடைத்துள்ளனர். அரசியல் விழிப் புணர்ச்சி' பெருக்கெடுப்பதற்கு முன்னர், சமய சமூக இலக்கியத் தோய்வு மிகுந்தவர்களே ஆசிரியர்களாக அமைந் திருந்தனர். அரசியல் கிளர்ச்சிகள் வளர்ச்சிப் பெறுவதற்கு உகந்த வகையில் தகுந்த ஆசிரியர்கள் பின்னர் இதழ் உலகை பிடித்துக் கொண்டனர்!

தமிழ் இதழியல் உலகில், தொடக்கத்தில் பலதுறை அறிவு மிக்கவர்கள் ஆசிரியர்களாயிருந்தனர். அடுத்து தமிழ் மரபு அறிந்தவர்கள் ஆசிரியர்களாயினர்; பின்னர் அரசியல் செல்வாக்குள்ளவர் ஆசிரியர்களாக அமர்ந்தனர்; அதன் பின்னர் அரசியல் அறிவு மிக்கவர்களும் மொழியறிவும் உலகியலறிவும் நிரம்பியவர்களும் ஆசிரியர்களாக வந்தனர்.

சாதி சமய சமூக உணர்வில் ஆழ்ந்து கிடந்தவர்களை யெல்லாம் 'தமிழ் இதழ் உலகம்' தட்டியெழுப்பி, அவர் களைக் குறிப்பிட்ட சிறுவட்டத்திற்குள்ளே சுழன்று வருவதைத் தடுத்து நிறுத்தி, உலகளாவிய பெரிய வட்டத்திற் குள் அவர்களை அடியெடுத்து வைக்கும்படி செய்துள்ளது. மேலும், மெத்த படித்தவர்களே எதையும் எழுதமுடியும், எப்படியும் எழுத முடியும் என்ற நிலையை மாற்றி - அறிவு வேட்கை கொண்டு ஆர்வமிகுதியினால் உந்தப்பட்டு, எழுதத் துடிக்கும் எவரையும் வாய்ப்புக் கொடுத்து, அது எழுத்துத் துறையில் ஈடுபடச் செய்துள்ளது. மற்றும், பல வகுப்பினரின் தனி நடையைக் குறைத்து, பல வட்டாரச் சொற்கள் விரவு வதைத் தடுத்து, தமிழ் மக்கள் அனைவரும் - தமிழ் தெரிந்த அனைவரும் - உணர்ந்து கொள்ளும் பொது நடை வளர வழி வகுத்துக் கொடுத்துள்ளது!

# தமிழ் இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

**தமிழ் எல்லை :** தமிழரின் தாயகம் தொல் பழங்காலத்தில் விரிந்து பரந்து கிடந்தது. கடற்கோள்களினாலும் இயற்கையினால் ஏற்பட்ட சீரழிவுகளினாலும், தமிழரின் தாயகம்—குமரிக் கண்டத்தை விட்டும், குமரி நாட்டை விட்டும், குமரிக் கோட்டை விட்டும், குமரி ஆற்றை விட்டும், குமரி முனையை விடாமல் பற்றிக்கொண்டு குறுகியுள்ளது!

தமிழகத்துடன் முன் ஒரு காலத்தில் சேர்ந்திருந்த இலங்கைத் தீவு (சேரந் தீவு—Seran Dib) கடலால் பிரிக்கப்பட்டுள்ளது. இலங்கைத் தீவின் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் நீண்ட நெடுங்காலமாகவே தமிழர் பூர்வீக குடிகளாக வாழ்ந்து வருகின்றனர். மேலும், இந்நாட்டின் மலைப்பகுதிகளில், தமிழகத்திலிருந்து 150 ஆண்டுகளுக்கு முன்பு வேலைக்காக அழைத்துச் செல்லப்பட்ட தமிழர், தோட்டத் தொழிலாளிகளாக நிலைத்துள்ளனர்.

குடியேறியுள்ள நாடுகள்: தமிழர் தமிழ் நாட்டைக் கடந்து, தென்னகத்திலும், இந்தியத் துணை கண்டத்தின் பல்வேறு பகுதிகளிலும், கடல் கடந்தும், கண்டங்கள் கடந்தும், இலங்கை, அந்தமான், நிக்கோபார், பீஜீ, மோரீசியஸ் போன்ற தீவுகளிலும், மலேயா, சிங்கப்பூர் போன்ற தீப கற்பங்களிலும், பர்மா, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளிலும், கடந்த 150 ஆண்டுகளாகக் குடியேறி வாழ்கின்றனர். இவ்விடங்களில் தமிழர்கள் சிந்திய குருதியும் உழைத்த உழைப்பும், பட்டபாடும் அந்த நாடுகளை வளங் கொழிக்கும் பகுதிகளாக மாற்றமடையச் செய்துள்ளன.

தமிழ் மக்களின் தனிச் சிறப்பு: தமிழ் மக்கள் மிகுந்த உழைப்பாளிகள்; அறிவாளிகள்; விருந்தோம்பும் குணம் கொண்டவர்கள்; எவரிடமும் எளிதில் பழகி நட்புக் கொள்ளும் அரியத் தன்மை கொண்டு, காட்சிக்கு எளியவர்களாகவும், கடுஞ்சொல் கூறாதவர்களாகவும் உள்ள அப்பாவி மக்கள்! ஆண்டாண்டு காலமாக அவர்களுக்கு இப்பண்பு நாளும் நாளும் துளிர் விட்டுக்கொண்டே வளர்ந்து வருகிறது!

உழைப்பவனுக்கே உலகம் என்பது வெறும் கூக்குரலாக இல்லாமல், உரிமையுள்ள பொருள் பொதிந்த சொற்றொடராக எப்போது கருதப்படுகின்றதோ அப்போதுதான், தமிழர் தம்முடன் வாழும் மாற்றாருடனும் ஒத்த உரிமையுள்ள குடிமக்களாக மாறி, இன்புற்றிருப்பர். அந்த நாளும் விரைவில் அமைவதாக!

தமிழர் குணம் : தமிழர் வாழும் இடங்களில் எல்லாம் தம் சமயத்தைச் சார்ந்த கோயில்களைக் கட்டுவார்கள். கலை, பண்பாட்டு விழாக்களைக் கொண்டாடுவார்கள்: அவற்றோடு பள்ளிக்கூடங்களை அமைப்பார்கள்; இதழ்களைத் தோற்றுவித்து நடத்துவார்கள்.

தமிழ் இதழ்களின் தோற்றம் : தமிழில் இதழ்கள் - தமிழகத்திலும் இந்தியாவிலுள்ள பம்பாய், தில்லி, கல்கத்தா போன்ற நகரங்களிலும் இலங்கை, மோரீசியஸ், பர்மா, சிங்கப்பூர், மலேயா, பீஜீத்தீவு, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளிலும், இலண்டன், பாரீஸ் வாஷிங்டன் போன்ற பிறநாட்டுத் தலைநகரங்களிலும் முகிழ்த்திருக்கின்றன. அவற்றின் விவரத்தைக் கிடைத்த வரை திரட்டித் தருகிறோம்.

பெயர் அமைப்பு : உலகத்தில் தோன்றிய தொடக்க கால இதழ்கள், 'கெஜட்' என்ற பின்னொட்டைப் பெற்று வெளி வந்துள்ளன. சான்றாக 'பீகிங் கெஜட்', 'லண்டன் கெஜெட்', 'பெங்கால் கெஜட்', 'மதராஸ் கெஜட்' 'செயிண்டு ஜார்ஜ் கெஜெட்'', 'சிலோன் கெஜெட்', 'டிஸ்டிரிக்ட் கெஜெட்', என்பனவற்றைக் கூறலாம்.

*தமிழில் அச்சு :* இந்திய மொழிகளிலே தமிழ் மொழி யானது, ரோம வரிவடிவில் கி. பி. 1554இல் லிஸ்பன் நகரில், 'கார்ட்டில்லா' என்னும் வெளியீட்டில்தான் அச்சில் பதிக்கப்பட்டது. அடுத்து தமிழ் வரிவடிவில் 'தம்பிரான் வணக்கம்' எனும் கிறிஸ்தவ சமய வெளியீடு மூலம் இந்தியா விலே முதன் முதலில் 1578 இல் அச்சிடப்பட்டது!

இதழ்களில் தமிழ் இடம் பெறல் : பின்னர் தமிழ் மொழியானது ஆங்கில இதழ்களில் விளம்பரங்களாகவும், அறிக்கைகளாகவும் அச்சாகியுள்ளது. கி. பி. 1802 இல் 'சிலோன் கெஜெட்' எனும் இதழில் - தமிழ், சிங்களம், ஆங்கிலம் எனும் மும் மொழியில் அச்சிட்டு வெளியாகியதன் மூலம், தமிழ் மொழி செய்தியாக வெளிப்படுத்தப்பட்டது. தமிழ் மொழியானது முதன் முதலில் 1830 இல் ''தமிழ் மாகஸின்'' (The Tamil Magazine) என்னும் பெயரில் முழுக்க முழுக்க தமிழில் செய்தி வடிவில் அச்சாகியுள்ளது.

தொடக்க காலப் போக்கு : தொடக்க காலத்தில், தமிழ் இதழ்களின் பெயர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் அச்சிடப்பட்டு வெளியாயின. கட்டுரை, கவிதை, கதை களின் தலைப்புகளும் இவ்விதமாகவே அச்சாகின. அடுத்து தான் தமிழிலேயே பெயரிடுவதும், தமிழிலேயே தலைப்புத் தருவதுமான வழக்கத்திற்கு வந்தன.

முதன் முதலில் தமிழ் இதழானது - மாத இதழாகவே தோன்றியுள்ளது. அடுத்து வார இதழாகவும், வார இரு முறை, முப்முறை இதழாகவும் வெளியாகியது. பின்னர் காலாண்டு இதழ்களும், அரையாண்டு இதழ்களும் தோன்ற லாயின. நாளிதழ்கள் இதற்கு அடுத்தே தோன்ற முற் பட்டன.

கிறித்தவர் இதழ்த் தொண்டு : தமிழ் இதழ்களை முதலில் தொடங்கிய பெருமை கிறிஸ்தவ பாதிரிமார் களையே சேரும். அவர்கள்தான், தமது சமயப் பரப்புதலுக் காக வேண்டியே இதழ்களை நல்ல சாதனமாகக் கருதித் தொடங்கினர். தமது சமயக் கொள்கைகளைப் பிற சமயத்

தினரும் அறிந்து கொள்வதற்காகவும், அவர்களை மத மாறச் செய்து கிறிஸ்தவ சமயத்தைப் பின்பற்றுவதற்கு நல்ல வாய்ப்பாக இருக்கும் என்று கருதியே இதழ்களை நடத்தினர். அடுத்து, கிறிஸ்தவர், பெண்மக்களைத் தம் பக்கம் ஈர்ப்பதற்காகவும், சேர்ப்பதற்காகவும் வேண்டியே பெண்களுக்கெனத் தனி இதழ்களைக் கொண்டு வந்தனர். சிறுவர்களைக் கவர்வதற்காகவே சிறுவர்க்கான இதழ்களையும் தொடங்கி நடத்தினர். இப்படியாகத் தமது சமய நலத்துக்காக வேண்டியே கிறிஸ்தவர்கள் இதழ்களைத் தோற்றுவித்து நடத்தியதானது பிற சமயத்தினரை விழிப்படையச் செய்து விட்டது!

முன்னோடிகளின் முனைப்பு: தென்னிந்தியாவில், ஆங்கிலக் கல்வியறிவுப் பெற்ற பெருமக்களில் சிலர், பாதிரிமார்களின் மத மாற்று முயற்சிகளையும் அவர்தம் சமயப் பரப்புதல் பணிகளையும் கண்டு வீறுகொண்டு எழுந்தனர்! இப்படிப்பட்டவர்களில் திரு. லட்சுமி நரசு செட்டியார் என்பவர், பாதிரிகளின் மத மாற்றுதல் நடவடிக்கைகளை தடுக்கவும், இந்திய மக்கள் படும் அவதிகளை எடுத்துக் காட்டி பரிகாரம் பெறவும் வேண்டி, ''கிரஸெண்ட்'' (The Crescent) என்ற இதழை 1844இல் தொடங்கி நடத்தியது. குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இவர், தென் இந்திய மக்கள் மீது ஆங்கில அதிகாரிகள் வரி வசூலிப்பதில் காட்டிய கெடுபிடியும் நடத்திய கொடுமையும் அரசினரின் கவனத்தை ஈர்க்க இதழ் வழியாகவும் கூட்டம் வழியாகவும் கிளர்ச்சி செய்து, விசாரணை நடத்தும் வரையில் விடாது பாடு பட்டார். இவர் சென்னை மாகாணச் சட்டமன்றத்தில் உறுப்பினராகிப் பெருந்தொண்டு புரிந்தார். சென்னை மாநிலத்தைப் பொறுத்தவரை தென்னிந்தியர் ஒருவரால் தொடங்கப்பட்ட முதல் இதழ் 'கிரெஸண்ட்'டேயாகும். இது ஆங்கில மொழியில் நடைபெற்ற இதழாகும். இவரைத் தொடர்ந்து இராஜா சர் மாதவ ராவும், பூண்டி அரங்கநாத முதலியாரும் சேர்ந்து ''நேடிவ் பப்ளிக் ஒபினியன்'' (The Native Public Opinion) என்ற பெயரில் ஓர் இதழைத் தொடங்கி சுதேச மக்களின் கருத்தைப் புலப்படுத்தினர்.

# 3. தொடக்க கால தமிழ் இதழ்கள்

உலகில் இதழ்கள் தோன்றியது பல நூற்றுண்டுகளுக்கு முன்பு என்றாலும், அவை தற்கால வடிவ அமைப்பைப் பெற்று ஏறக்குறைய 350 ஆண்டுகளேயாகின்றன. மேனாடுகளில் அரசியல், இலக்கியம், விஞ்ஞானம், பொழுது போக்கு, கலைத்துறை என்னும் பல்வேறு துறைகளிலும் நாளுக்கு நாள் புதுமையைக் கூட்டி எழிலாகவும் ஏற்றமுடனும் அவை நடந்தேறி வருகின்றன.

தமிழ்ப் பேசும் பகுதிகளில் தமிழ் இதழ்கள் கால் கொண்டு சுமார் 160 ஆண்டு காலமாகிறது. இந்தக் காலக் க்கட்டத்திற்குள் அவை மேனோடுகளைப் போல் அத்தனை துறைகளிலும் வளர்ச்சிப் பெற்றுள்ளதாகச் சொல்ல முடியாது. என்றாலும் அவற்றின் வரலாற்றையும் வளர்ச்சியையும் முடிந்தவரை எடுத்துக் கூறலாம்.

துவக்க காலம் : தமிழ் மொழியில் உரை நடையை வளர்த்தும், சிறுகதையைப் பெருக்கியும், அகராதியை அறிமுகப் படுத்தியும், அச்சையும் அச்சுப் பொறியையும் வழக்கிற்குக் கொண்டு வரச் செய்த கிறித்தவ சமயப் பாதிரிமார்களே, தமிழ் இதழ்கள் வெளியிடுவதிலும் துவக்கத்தில் பெரிதும் ஆர்வங்காட்டி முன்னின்றுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்க உண்மையாகும்.

தமிழகத்தில் 1830 ஆம் ஆண்டிற்கு முன்பு வரையில், தமிழில் தனி இதழ்கள் தொடங்கப்பட்டதாகத் தெரிய வர வில்லை!

முதன் முதல் இலங்கையில் தமிழ் மொழி இடம் பெற்ற இதழ் 'சிலோன் கெஜெட்'டு (The Ceylon Gazette,) ஆகும். இது 1802இல் தொடங்கப்பட்டுத் தமிழ், சிங்களம்

ஆங்கிலம் என்னும் முப்பகுதிகளைக் கொண்டு வெளி வந்தது.

சென்னை: *1831*இல் ''தமிழ் மாகசீன்'' (The Tamil magazine) என்ற பெயரில். சென்னையிலிருந்த கிறித்துவ சமயப் பரப்புக் கழகம் (TheMadras Christian Tract Society), ஒரு மாத இதழை முழுதும் தமிழிலேயே முதன் முதலில் வெளியிட்டுப் பெருமையடைந்துள்ளது. இதுதமிழில் முழுதும் செய்திகள் கொண்டதாக இருந்தது! *1833*இல் சென்னையில் ''விருத்தாந்தி'' என்ற பெயரில் வெளிவந்த இதழில், தமிழிலும் தெலுங்கிலுமாகச் செய்திகள் வெளியிடப்பட்டன என்று திரு ஜே. வாங் என்பவர் கூறியிருக்கிறுர். இதற்கு ஆங்கிலக் கிழக்கிந்திய நிறுவனத்தின் ஆதரவு இருந்தும் *1838*க்குப் பிறகு மறைந்து போனது. *1835*இல் சென்னை யில் வெளியான ''மெட்ராஸ் கிரானிக்கல்'' (The Madras Chronicle) எனும் பெயரில் வெளியான இதழில், தமிழும் தெலுங்குடன் இடம் பெற்றது. *1855*இல் ''இராஜவர்த்தினி போதினி'' என்ற பெயரில் மாத மும்முறை இதழ் ஒன்று சென்னையில் வெளி வந்தது. இதில் ஆங்கில இதழ்களில் வெளியானவற்றின் மொழி பெயர்ப்புகளே இடம் பெற்றிருந் தது. *1852*ஆம் ஆண்டில் ரெவ. பி. பெர்சிவல் பாதிரியாரால் சென்னையில் தொடங்கி வைக்கப்பட்டது, 'தினவர்த்தமானி' என்னும் வார இதழாகும். இதற்குத் திருவாளர்கள் சி. வை. தாமோதரம் பிள்ளையும், கறோல் விசுவநாதப் பிள்ளையும், எச். கிருஷ்ணப்பிள்ளையும் துணையாசிரியராக இருந்துள்ளனர். இதற்கு ஆங்கில அரசாங்கத்தின் ஆதரவு இருந்தது. மேலும், இது மக்களிடையே நல்ல செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. அக்காலத்தில் வாரந்தோறும் *784* படி களுக்கு மேல் விற்பனையாகியது குறிப்பிடத்தக்கதாகும். ''*1857*இல் முதலாவது இந்தியக் கிளர்ச்சி (சிப்பாய்க்கலகம்) ஏற்படுவதற்கு முன்பு தமிழில் தோன்றிய செய்தி இதழ்கள் மிகச் சிலவே. அவற்றில் ஒன்றிரண்டு தான் *1860, 1870* வரை நீடித்து வாழ்ந்தன'' என்று திரு இரா. நடராசன், தமது 'தமிழில் செய்தி இதழ்கள்' (உலகத் தமிழ் மாநாட்டு

பிரவரி-1968) என்ற கட்டுரையில் குறித்திருப்பது இங்கு நினைந்து பார்க்கத் தக்கதாகும்.

*'தினவர்த்தமானி'—பெரிய அள்விங் (Large Quarto) 8 பக்கங்கள் கொண்டது. ஆண்டுக் கட்டணம் ஐரோப்பியர்க்கு ரூ 5/- சுதேசியர்க்கு ரூ 3/- இதில் செய்திகள் மட்டுமின்றி இலக்கியம் விஞ்ஞானம் முதலிய பொருள் குறித்தும் வெளியிடப்பட்டது. அவ்வப்போது தமிழ் இலக்கியங்கள் குறித்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டும் வந்தது; சுதேசிருபர்கள் தங்கள் கருத்துக்களைத் தாராளமாகத் தெரிவிக்க அனுமதிக்கப்பட்டார்கள்! இவ்வார இதழைத் தமிழில் வெளியிடுவதற்கு வசதியாக இதன் ஆசிரியர் பெர்சிவல் பாதிரியார் ஆங்கிலத் தமிழ் அகராதியை உருவாக்கினார் என்று கூறப்படுகிறது! இவ்வகையில் ஏற்பட்ட முதல் முயற்சியும் இதுதான்! 'தினவர்த்தமானி'க்கு ஈடாக அக்காலத்தில் வேறு இதழ்கள் இல்லை!

1877இல் "சுதேசபிமானி" என்ற இதழும் சேலத்தில் பகடாலு நரசிம்மலு நாயுடுவால் துவக்கப்பட்டு நடைபெற்று வந்துள்ளது.

---

* In 1855, The Rev. P. Percival Commenced a weekly Tamil News paper, called Tinavartamani, containing 8 Large Quarto pages. The price to Natives in Madras is Rs. 3 per annum; to Europeans, Rs. 5; to Provincial subscribers, including postage Rs. 5 per annum. The low price and the excellence of the paper seems to have rendered competition hopeless. Since its establishment it has maintained almost undisputed position in the field. Literary and scientific articles are included as well as news, with occasional translations in English of Tamil classical authors; native correspondents are allowed freely to ventilate their opinions through its columns." - See y. Murdoch's "Classified catalogue of Tamil printed books." class I periodicals and news papers section.

தமிழகத்தில் வெளி வரும் ''இந்து'' (1878) எனும் ஆங்கில இதழைத் துவக்கி வைத்த திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர்தான், 1882 இல் ''சுதேசமித்திரன்'' என்ற தமிழ் வார இதழையும் தொடங்கி வைத்தவராவர். அவர் தொடங்கிய இரண்டும் நூற்றாண்டுக்குமேல் தொடர்ந்து நடைபெற்று வருவது குறிக்கத்தக்க தனிச் சிறப்பாகும். 'சுதேசமித்திரன்' நாளடைவில் வார மும்முறையாகி பின்னர் நாளிதழாக வளர்ச்சியுற்றுச் செல்வாக்குப் பெற்றது. நாள்தோறும் ஓராயிரம் படிகள் செலவழிய 15 ஆண்டுகள் பிடித்தது என்றும், அது 1920 வரையில்கூட இரண்டாயிரம் படிகள் விற்பனையாகவில்லை என்றும் கூறப்படுகிறது. என்றாலும் தமிழில் வெளியான முதல் நாளிதழ் 'சுதேச மித்திர'னே என்று சொல்லலாம். நாட்டு உணர்வை ஏற்படுத்தி, எழுச்சியை உண்டாக்கி, தமிழ் மக்களின் உள்ளக் கிடக்கைகளை வெளிப்படுத்தி, சக்திமிக்க நாளிதழாக முற்காலத்தில் விளங்கியது 'சுதேச மித்திர'னே ஆகும். இதில்தான் திரு.சி. சுப்பிரமணிய பாரதியார் துணை யாசிரியராகச் சில காலம் பணி புரிந்தார்.

''சென்னை மாநிலத்தில் பத்திரிகை வளர்ச்சிக்கு ஒரு வகையில் ஊன்று கோலாக இருந்தவை, 1870 - க்குப் பிறகு தொடங்கப்பட்ட தற்சிந்தனையாளர் குழுவும் (Free Thinkers Association), ''தியாஸபிகல் சொசைட்டியும்'' ஆகும் என்றும், ''ஃபிரிதிங்கர்'' (The Free Thinker) என்ற ஆங்கில இதழ், அறிவார்ந்த தற்சிந்தனைக்கும் விஞ்ஞானக் கண்ணோட்டத்திற்கும் மக்களின் கவனத்தை ஈர்த்தது. கொஞ்ச காலமே இந்தப் பத்திரிகை நடந்தது'' என்றும் திரு. பழநி. அரங்கசாமி, தமது 'செய்தி உலகம்' (1975) எனும் நூலின் 95 ஆம் பக்கத்தில் தெரிவித்திருக்கும் செய்தி யும் இங்கு நினைத்துப் பார்க்கத்தக்கதாகும்.

இலங்கை : 1841 இல் யாழ்ப்பாணத்தில் தோன்றிய ''உதயதாரகை'' (The Morning Star) என்னும் மாத இதழ் தான் இலங்கையில் வெளியான முதல் தமிழ் இதழாகக்

கருதப்படுகிறது. இது ஹென்றி மார்ட்டின், கறோல் விசுவ நாதபிள்ளை ஆகியோரை ஆசிரியர்களாக கொண்டு, இலங்கை மானிப்பாய் அமெரிக்க மிசனரிமாரால் வெளி யிடப்பட்டது. தமிழ், ஆங்கிலம் எனும் இருமொழிகளிலும் இது வெளியாயிற்று.

இவ்விதழின் முதலாவது ஆசிரியத் தலையங்கத்தி லிருந்து ஒரு பகுதியைப் பார்ப்போம்; "'உதயதாரகை'ப் பத்திரத்தில் இயற்கை சரித்திரம், பொதுவான கல்வி, பயிர்ச் செய்கை, அரசாட்சி மாற்றம் முதலானவை பற்றியும் அச்சடிக்கப்படும். அது தமிழ்ப் பாஷையிலும் இடைக் கிடையே தமிழும் இங்கிலீசும் கூடினதாயும், எட்டுப் புறம் உள்ள நான்காக மடித்த தாள் அளவில் ஒவ்வொரு மாத முதலாம் மூன்றாம் கிழமைகளில் பிரசித்தம் பண்ணப் படும்."

சமயத் தேவையைப் பிரதானமாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட இப்பத்திரிகையின் நோக்கும் அமைப்பும் பரந்த கோட்பாடுகளை உள்ளடக்கியதாகக் காணப் பட்டன.

இது முதலில் மாத இதழாகத் தொடங்கப்பட்டுப் பின்னர் திங்களிரு முறையாகி. வாரமொரு முறையாகி இன்று வரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. பார்க்க: 'இலங்கைத் தமிழ்ப் பத்திரிகைகளின் தோற்றமும் வளர்ச்சி யும்" ஆ. சிவநேசச் செல்வன் எழுதிய கட்டுரை, நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு 1977, முதலாம் தொகுதி பக்கம் 345—353,

1841இல்"உதயாதித்தன்"என்னும் இதழ் திரு.சைமன் காசிச் செட்டியாரால் தொடங்கப்பட்டு, கொழும்பு விலிருந்து வெளியிடப்பட்டது. மொத்தம் பதிமூன்று இதழ்களே வெளிவந்தன.

1845 இல் "உரைகல்லு" (The Touch Stone) எனும், இதழ், கொழும்புவிலிருந்து கிறிஸ்தவ சமய கத்தோலிக்கப் பிரிவினரால் வெளியிடப்பட்டது. கிறிஸ்தவ மிசினரி

மாரிடை ஏற்பட்ட சமய வேறுபாடுகளைக் களையும் வகை யிலும் அறிவுச் சூழலை உருவாக்க வேண்டும் என்ற ஆர்வத் துடனும் இவ்விதழ்கள் இயங்கியமையை அவைபற்றிய குறிப்புகளும் அறிமுக உரைகளும் உணர்த்துகின்றன.

'உதயாதித்தன்' 'உரை கல்லு' ஆகிய இதழ்களின் படிகள் இலங்கை தேசிய புராதன அரும் பொருளகத் (Ceylon National Archives) திலும் இல்லை என்று கூறப் படுகிறது! ''பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சகம் அமைக்கும் உரிமையைச் சுதேசிகள் 1835 ஆம் ஆண்டு சென்ஜோஜ் கசற்1றாரின் வழியே பெற்றுக் கொண்டமை மிசனரி மாரைத் தவிர்ந்த பிறரும் பத்திரிகை களைத் தோற்றுவிக்கும் வாய்ப்பினை ஏற்படுத்தியது. ஆங்கிலங்கற்ற புத்தி ஜிவிகளின் தோற்றமும் இவ்வகை முயற்சிகளுக்குரிய தளத்தினை ஏற்படுத்தியது'' என்கிறார் திரு. சிவநேசச் செல்வன், மேற்படி கட்டுரையில் 1. ST. George Gazette.

1835இல் ''வித்யா தர்ப்பணம்'' (The Literary Mirror) - சைமன் கதிரைவேற் பிள்ளையாலும் நிக்கோலசு கூல்ட்டா லும் வெளியிடப்பட்ட இதழாகும். இது சமய சமுக அறிவியற் கருத்துகளைத் தாங்கி வெளிவந்தது.

1835இல் ''பாலியர் நேசன்''—வில்லியம் சின்னத் தம்பி யால் இளைஞர்களின் சமய முன்னேற்றம் கருதி, யாழ்ப் பாணத்திலிருந்து அமெரிக்க மிசனரி மாரால் நடத்தப் பெற்ற சிறுவர்க்கான இதழாகும்.

1873இல் புதினலங்காரி எனும் இதழ், நெயிந்த மரக்கா யரும் வாப்பு மரக்காயரும் சேர்ந்து, கொழும்பு சோனகப் பட்டினத் தெருவிலிருந்து கரலிகித அச்சகத்தின் மூலம் வெளி யிடப்பட்டது. ஏனைய மக்கள் இதழாற் பெறும் நன்மையை இஸ்லாமியரும் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் இது வெளிவந்தது.

1876இல் ''சத்திய வேத பாதுகாவலன்'' எனும் இதழ் திரு. அருளப்ப முதலியாரை ஆசிரியராகக் கொண்டு, இலங்கையிலிருந்து வெளியிடப்பட்ட கிறிஸ்தவ வெளி யீடாகும்.

1876 இல் ''கத்தோலிக்க பாதுகாவலன்'' பிலிப்பையாவை யும் முருகப்பாவையும் ஆசிரியராகக் கொண்டு, இலங்கையில் வெளியிடப்பட்ட கத்தோலிக்க இதழாகும். 'உதயதாரகை' யும் பிற இதழ்களும் உருவாக்கிய சமயப் பரப்பு முயற்சி களுக்கு எதிர் முனைப்புக் கொடுக்கும் வகையில் இது யாழ்ப் பாணத்திலிருந்து தொடங்கப்பட்டது. தமிழிலும் ஆங்கிலத் திலுமாக முதலில் மாத இரு முறை இதழாக வெளியாகியது. 1877இலிருந்து 1893 வரை வார இதழாக நடைபெற்றது. 1896க்குப் பின்னர் மேலும் வளர்ச்சியுற்று இந்நாள் வரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

''இப் பத்திரிகைகள் வெளி வந்த விடயங்களின் தலையங்கங்கள் ஆங்கிலத்தில் இடப்பட்டுள்ளன! இப் பத்திரிகைகள் அரசியற் சம்பவங்களையும் பொதுச் செய்தி களையும் விமர்சன நோக்கில் வெளியிட்டமையும் அவ்வப் பத்திரிகை ஆசிரியர் உரைகளிலே வெளியிடப்பட்டுள்ளது'' என்று திரு. ஆ. சிவநேசச் செல்வன் ஆய்ந்து கூறியிருப்பதும் இங்கு சிந்திக்கத் தக்கதாகும்.

1877இல் ''இலங்கை நேசன்''—எச். சின்னத்தம்பியால் தொடங்கி நடத்தப் பெற்ற சைவ சமய இதழாகும்.

1880இல் ''சைவ உதய பாநு''—இது ஊரெழு சரவண முத்துப்பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு நடத்தப் பெற்ற சைவ இதழாகும்.

1881இல் ''விஞ்ஞான வர்த்தினி''—இது மூத்து தம்பிச் செட்டியாரால் நடத்தப் பெற்ற சைவ சமய இதழாகும்.

THE DAILY Universal Register,
Printed Logographically — By His Majesty's Patent
NUMB. 1.] SATURDAY, JANUARY 1, 1785. [Price Two-pence Halfpenny.

The SIXTH NIGHT.
By His MAJESTY's Company
AT the THEATRE ROYAL in DRURY-LANE, this present SATURDAY, will be performed
A New COMEDY, called
The NATURAL SON.
The characters by Mr. King, Mr. Parsons, Mr. Bensley, Mr. Moody, Mr. Baddeley, Mr. Wrighten, and Mr. Palmer. Miss Pope, Miss Tidswell, and Miss Farren.
With new Scenes and Dresses.
The Prologue to be spoken by Mr. Bannister, jun.
And the Epilogue by Miss Farren.
After which will be performed the last New Pantomime Entertainment, in two Parts, called
HARLEQUIN JUNIOR;
Or, The MAGIC CESTUS.
The Characters of the Pantomime, by Mr. Wright, Mr. Williames, Mr. Burton, Mr. Stageton, Mr. Williamson, Mr. Palmer, Mr. Waldron, Mr. Fawcett, Mr. Chaplin, Mr. Phillimore, Mr. Wilson, Mr. Alfred, Mr. Spencer, Mr. Chapman, and Mr. Grimaldi. Mrs. Burton, Miss Barnes, Miss Tidswell, Miss Barnes, Miss Cranford, and Miss Stageldoir.
To conclude with the Repulse of the Spaniards before
The ROCK of GIBRALTAR.

To-morrow, by particular desire, (for the 4th time) the revived Comedy of the DOUBLE DEALER, with the favorite Masque of ARTHUR and EMMELINE.
On Tuesday the Tragedy of VENICE PRESERVED. Jaffier by Mr. Brereton, Pierre by Mr. Bensley, and Belvidera, by Mrs. Siddons; And on Friday the Comedy. Massinger's Play of the MAID of HONOUR, (with alterations and Additions) is in Rehearsal and will soon be presented.

NINTH NIGHT. FOR THE AUTHOR.
AT the THEATRE-ROYAL, COVENT-GARDEN, the present SATURDAY, January 1, 1785, will be performed, a New Comedy, called
The FOLLIES of a DAY,
Or, The Marriage of Figaro.
With new Dresses, Decorations, &c.
The principal characters by Mr. Lewis, Mr. Quick, Mr. Edwin, Mr. Wilson, Mr. Wewitzer, Mr. Bonnor, Mr. Thompson, and Mrs. Martyr; Mrs. Bates, Mrs. Webb, Miss Wewitzer, and Miss Younge.
With a new Prologue, to be spoken by Mr. Davies.
To which will be added, for the sixth time,
A new Pantomime, called,
The MAGIC CAVERN,
Or, VIRTUE's TRIUMPH.
With new Scenery, Machinery, Music, Dresses, and Decorations.
The Scenes chiefly designed by Mr. Richards, and executed by him, Mr. Carver, Mr. Hodgins, and Assistants.
The Overture, Songs, Chorusses, and the Music of the new Pantomime, are composed by Mr. Shield.
Nothing under full Price will be taken.
The Words of the Songs, &c. to be had at the Theatre.

MR. WALTER returns his thanks to his Friends and the Public for the great encouragement and generous support he has already received from them in his new improvement in Printing, by the readiness with which they have subscribed to his intended publication of the works of some eminent Authors; and whilst he solicits a continuance of their favours, begs leave to acquaint them that by
The middle of January will be published,
In One Volume [illegible],
MISCELLANIES IN VERSE AND PROSE,
intended as a Specimen of his Printing Types at the Logographic Office, Printing-House Square, Blackfriars.—
And by the beginning of February, his first volume, containing Watts's Improvement of the Mind, with an Introduction written on the occasion, will be ready to be delivered to the Subscribers.

This Day is published, Price 6d.
PLAN of the CHAMBER of COMMERCE, King's-Arms Buildings, Cornhill, London; which is open every day, for Consultation, Opinion, and Advice (verbal or in Writing) Mediation, Assistance, Arbitration, &c. in all Commercial, Maritime, and Insurance Affairs, and matters of Trade in general; and the Laws and Usages relating thereto.——The Address is, To the Director of the Chamber of Commerce, as above.
To be had of Richardson and Urquhart, Royal Exchange; J. Sewell, Cornhill; T. Whieldon, Fleet-street; W. Flexney, Holborn; and at the aforesaid Chamber.
Where may also be had, in one Volume Folio,
Mr. Weskett's COMPLETE DIGEST of the THEORY, LAWS and PRACTICE of INSURANCE; an entire new and comprehensive work, including all the adjudged Cases extant, with several never before printed; Extracts from the Statutes, foreign Ordinances, and marine Treaties; accounts of all the Insurance Companies, the Maritime Courts, the commercial and maritime Laws, the Law of Nations, &c. the whole forming (alphabetically) a new Lex Mercatoria.
☞ "This Work has been compiled with great Care and Industry, by one who is evidently a Master of the Subject. It abounds with Proofs of extensive Reading, as well as mature Reflection, and judicious Remarks; and if the completest System of Information that has hitherto been composed be entitled to Praise, the present useful Digest must meet with the Approbation of the commercial World." Crit. Rev. Vol. 51. p. 423.—All the other Literary Journals speak in similar Terms of this Book; which had already been translated abroad.

This Day is published, in 3 Vols. Price 9s. sewed.
By the LITERARY SOCIETY,
MODERN TIMES; or The ADVENTURES of GABRIEL OUTCAST. A Novel, in Imitation of Gil Blas.
"[illegible]"
Published for the Author, and sold by J. Walter, Printing-house Square, Black-friars; where may be had, gratis, the Plan of this Society, affociated for the Encouragement of Literature, who propose to print and publish at their own Risk and Expence such original Works as they may approve of, and give their Authors all Profits arising from the same.

MRS. KING begs leave to acquaint her Friends she opens her SCHOOL at CHIGWELL, in ESSEX, on Monday, the 10th of January, for the EDUCATION of YOUNG LADIES; as she has always been accustomed to watch and improve the opening mind, hopes to give satisfaction to those who trust her with so important a charge.
Till the 10th of January Mrs. King may be spoke with at Mr. King's, Bit-maker to his Majesty, in the Mews, Charing-cross.
☞ Wanted an Apprentice and Half-boarder.

SHIPPING ADVERTISEMENTS

For NICE, GENOA, and LEGHORN,
(With Liberty to touch at One Port in the Channel,)
The NANCY,
THOMAS WHITE, Commander,
BURTHEN 280 Tons; Guns and Men answerable. Lying off the Tower, and will absolutely depart on Saturday the 8th instant.
The said Commander to be spoken with every morning at Sam's Coffee-house, near the Custom-house; at Will's Coffee-house, in Cornhill; and at Exchange hours on the French and Italian Walk, or
WILLIAM ELYARD, for the said Commander,
No. 16, Savage-Gardens.

Direct for LISBON,
The NANCY,
JOHN RACKHAM, Commander,
BURTHEN 300 Tons, Men answerable. Lying off Horsleydown Chain; Seven-eighths of her Cargo absolutely engaged, and is obliged by Charter-party to depart on Saturday the 8th instant.
The said Commander to be spoken with every morning at Sam's Coffee-house, near the Custom-house; at Will's Coffee-house, in Cornhill; and in Exchange hours in the French and Italian Walk; or
WILLIAM ELYARD, for the said Commander,
No. 16, Savage-Gardens.

For NICE, GENOA, and LEGHORN.
(With Liberty to Touch at One Port in the Channel.)
The LIVELY,
ROBERT BRINE, Commander,
BURTHEN 300 Tons, Guns and Men answerable. Lying off Iron Gate.
The said Commander to be spoke with every Morning at Sam's Coffee-house, near the Custom-house; at Will's Coffee-house in Cornhill; and in Exchange Hours in the French and Italian Walk; or
WILLIAM ELYARD, for the said Commander,
No. 16, Savage-Gardens.

For CONSTANTINOPLE and SMYRNA, or SMYRNA and CONSTANTINOPLE,
(With Liberty to Touch at One Port in the Channel,)
The BETSEY,
ROBERT LANCASTER, Commander,
BURTHEN 200 Tons, Men answerable. Lying at Iron-Gate. Two-thirds of her Cargo engaged, and is obliged to depart by Charterparty, in all the present Month of January.
The said Commander to be spoke with every Morning at Sam's Coffee-house, near the Custom-house; at Will's Coffee-house in Cornhill; and in Exchange Hours in the French and Italian Walk; or
WILLIAM ELYARD, for the said Commander,
No. 16, Savage-Gardens.
N. B. No Goods to be taken on Board the Vessel without an Order from the Broker.

NEW NOVELS.
This Day are published, (in two Volumes, price 5s. sewed,)
THE YOUNG WIDOW; or, the HISTORY of Mrs. LEDWICH.
The HISTORY of Lord BELFORD and Miss SOPHIA WOODLEY, 3 vol. 9s. bound.
Printed for the Editor, and sold by F. Noble, in Holborn;
Where may be had lately published,
St. Ruthen's Abbey, a Novel, 3 vols. 9s. bound.
The Woman of Letters; or, History of Fanny Belton, 2 vol. 7s. bound.
A Lesson for Lovers; or, History of Col. Melville and Lady Richly, 2 vols. 7s. bound.
Literary Amusements; or, Evening Entertainer, 2 vol. 7s. bound.
Adventures of a Cavalier, by Daniel Defoe, 3 vols. 9s bound.

F. RICKABY, PRINTER,
No. 13, Duke's Court, Drury Lane,
RESPECTFULLY informs his Friends and the Public in general, that the Partnership between him and Mr. Moore being entirely dissolved, he now intends to carry on every branch of the PRINTING BUSINESS upon his own account;—and having purchased a complete assortment of the newest and best materials, is determined to pursue a Mode of Printing which he hopes will meet with the approbation of his employers.
N. B. Cards, Hand Bills, Circular Letters, and all articles of the kind, accurately printed at a few hours notice, in a manner particularly neat, and at the lowest prices.
*,* An Apprentice wanted.

To the Readers of the London Medical Journal.
This day is first published, price 1s.
SYMPATHY DEFENDED; or, the State of MEDICAL CRITICISM in London; written to improve the Principles and Manners of the Editor of the London Medical Journal: To which are added the Contents of the Treatise on Medical Sympathy, and a Postscript, on account of a premature Review in a late Number of the London Medical Journal.
By a Society of Faculty;
Friends to the Public and Enemies to Imposition.
"Cum tua non edas, carpis mea carmina, Laeli,
"Carpere vel noli nostra, vel ede tua."
Mart. Epig.
This pamphlet has been hitherto distributed gratuitously. The repeated applications for them, particularly from the country, have become so numerous, that the Society find themselves under the necessity of putting them into the hands of a publisher.
Sold by J. Murray, Bookseller, Fleet-street.

Nondum lingua suo dextra peregit opus.
Mart.
SHORT-HAND, on the latest and most approved Principles taught by J. LARKHAM, No. 12, Red Alley, Bishopsgate Street.
It would exceed the limits of an advertisement merely to mention the various errors either in the plan or the execution of the different Schemes of Short-hand hitherto made public, or to point out the singularities and excellencies of the present. Mr. L. therefore only begs leave to observe, that the approbation of many gentlemen well known in the literary world, and well versed in the Theory and Practice of Short-hand, expressed in stronger terms than delicacy will permit him to repeat, warrants him in saying he will be found a system of short and swift writing more easy to acquire and retain, more expeditious, more legible and more regular than any ever yet offered to the Public.
The terms of teaching, One Guinea, the whole time of learning, from [illegible].

# To the Public.

TO bring out a New Paper at the present day, when so many others are already established and confirmed in the public opinion, is certainly an arduous undertaking; and no one can be more fully aware of its difficulties than I am: I, nevertheless, entertain very sanguine hopes, that the nature of the plan on which this paper will be conducted, will ensure it a moderate share at least of public favour; but my pretensions to encouragement, however strong they may appear in my own eyes, must be tried before a tribunal not liable to be blinded by *self-opinion*; to that tribunal I shall now, as I am bound to do, submit these pretensions with deference, and the public will judge whether they are well or ill founded.

It is very far from my intention to detract from the acknowledged merit of the Daily Papers now in existence; it is sufficient that they please the class of readers whose approbation their conductors are ambitious to deserve; nevertheless it is certain *some* of the best, *some* of the most respectable, and *some* of the most useful members of the community, have frequently complained (and the causes of their complaints still exist) that by radical defects in the plans of the present established papers, they were deprived of many advantages, which ought naturally to result from daily publications. Of these some build their fame on the length and accuracy of parliamentary reports, which unquestionably are given with great ability, and with a laudable zeal to please those, who can spare time to read ten or twelve columns of debates. Others are principally attentive to the politics of the day, and make it their study to give satisfaction to the numerous class of politicians, who, blessed with easy circumstances, have nothing better to do, than to amuse themselves with watching the motions of ministers both at home and abroad; and endeavouring to find out the secret springs that set in motion the great machine of government in every state and empire in the world. There is one paper which in no degree interferes with the pursuits of its cotemporaries; it looks upon parliamentary debates as sacred mysteries, that cannot be submitted to vulgar eyes without profanation; political investigations it apprehends to be little short of treason, and therefore *loyally* abstains from them; it deals almost solely in advertisements; and consequently, though a very useful, it is by no means an entertaining paper. Thus it would seem that every News-Paper published in London is calculated for a particular set of readers only; so that if each set were to change its favourite publication for another, the commutation would produce disgust, and dissatisfaction to all; the politician would then find nothing to amuse him but long accounts of petty squabbles about trifles in Parliament, or panegyrics on the men, and measures that he most disliked; or libels on those whom he most revered. The person to whom parliamentary debates afford unspeakable delight, would find himself bored with political speculations about the measures that the different courts in Europe might probably adopt; or disgusted with whole pages of advertisements, in which he felt no concern;—whilst the plain shop-keeper who wanted to find a convenient house for his business, and the servant who purchased his paper in hopes of seeing in it an advertisement directing where he might find a place to suit him, would have their labour for their pains, in perusing publications, filled with senatorial debates, or political essays and remarks, which would direct them to nothing less than the house or place they wanted.—A News-Paper, conducted on the true and natural principles of such a publication, ought to be the Register of the times, and faithful recorder of every species of intelligence; it ought not to be engrossed by any particular object; but, like a well covered table, it should contain something suited to every palate: observations on the dispositions of our own and of foreign courts should be provided for the political reader; debates should be reported for the amusement or information of those who may be particularly fond of them; and a due attention should be paid to the interests of trade, which are so greatly promoted by advertisements.—A paper that should blend all these advantages, and by steering clear of extremes, hit the happy medium, has long been expected by the public.—Such, it is intended, shall be the UNIVERSAL REGISTER, the great objects of which will be to facilitate the *commercial* intercourse between the different parts of the community, through the channel of *Advertisements*; to record the principal occurrences of the times; and to abridge the account of debates during the sitting of Parliament.

It is no less the interest of the proprietors of News-Papers, than of the public, that every encouragement should be given to advertising correspondents; yet this private interest of the proprietors is frequently sacrificed to the rage for parliamentary debates, to the great injury of trade; for the extreme length of these debates so greatly retards the publication of the New-Papers which are noted for detailed accounts of them, that the advantages arising from this species of intelligence, though highly acceptable in itself, are frequently over-balanced by the inconveniences occasioned to people in business by the delay. These inconveniences are great and many; it generally happens, that when either House of Parliament has been engaged in the discussion of an important question till after midnight, the papers in which the speeches of the Members are reported at large, cannot be published before noon; nay, they sometimes are not even sent to press so soon; consequently parties interested in *sales* are essentially injured, as the advertisements, inviting the public to attend them at *ten or twelve* o'clock, do not appear, on account of a late publication, till some hours after.—From the same source flows another inconvenience; it is sometimes found necessary to *defer* sales, after they have been advertised for a particular day; but the notice of putting them off not appearing early enough, on account of the late hour at which the papers containing it are published, numbers of people, acting under the impression of former advertisements, are unnecessarily put to the trouble of attending.—It will be the object of the *Universal Register* to guard against these great inconveniences, without depriving its readers of the pleasure of learning what passes in Parliament.—It is intended, then, that the debates shall be regularly reported in it; but on the other hand, that the publication may not be delayed to the prejudice of people in trade, the speeches will not be given on a large scale; the *substance* shall be faithfully preserved; but all the uninteresting parts will be omitted. I shall thus be enabled to publish this paper at an early hour; and I propose to bring it out *regularly* every morning at *six* o'clock. The *Universal Register* will therefore have this advantage over the *Daily Advertiser*, that, though published as early, it will contain a substantial account of the proceedings in Parliament the preceding night, which is never to be found in that paper; and compared with the other morning papers it will be found to have the merit of containing in substance, what they give in long detail (which men in business cannot well spare time to read) and, nevertheless, of being published much sooner. These circumstances, it is hoped, will give the *Universal Register* at least an *equal* claim to public favour with the parliamentary papers, and the trading part of the metropolis, it is presumed, will find it their advantage to give it the preference.

An essential part of the plan of this new paper is, that, for the convenience of advertising correspondents, their favours shall, *to a certainty*, be inserted on the very day that they shall direct; provided they deliver them at the office in due time. For the *strict* observance of this rule, the credit of the paper shall stand pledged; and its pretensions to public countenance will be renounced, if this fundamental principle in its institution shall ever be violated, except in cases of absolute necessity, which human prudence cannot prevent.—And here I beg it may be understood that I do not make use of the word *necessity* as a reserve, under colour of which, I may, whenever I think fit, be released from my engagements; I mean by that word a necessity arising from accidents that sometimes happen in the printing business, and from which, the most careful man cannot, at all times, be secure. But so far from wishing to shrink from my engagements, I intend, whenever the length of the Gazette, Parliamentary Debates, &c. shall render it impossible for me to insert all the advertisements promised for the day, in *one* sheet, to print an additional half sheet, and publish it with the ordinary paper without any additional charge to my customers.—From the difficulty that people experience in procuring the insertion of their advertisements even in the *Daily Advertiser*, and particularly from the impossibility of obtaining an *early* insertion at some periods of the year, it may be presumed that this regulation will greatly recommend the UNIVERSAL REGISTER to public notice, and procure it support.

These, though in my opinion good, are not the *only* grounds on which I build my hopes of success. I flatter myself, I have some claim to public encouragement, on account of a great improvement which I have made in the art of printing. The inconveniences attending the old and tedious mode of composing with letters taken up *singly*, first suggested the idea of devising some more expeditious method. The cementing of several letters together, so as that the type of a *whole word* might be taken up in as short a time as that of a *single letter*, was the result of much reflection on that subject. But the bare idea of cementing was merely the opening, not the accomplishment or perfection of the improvement. The fount consisting of types of words, and not of letters, was to be so arranged, as that a compositor should be able to find the former with as much facility as he can the latter. This was a work of inconceivable difficulty. I undertook it however, and was fortunate enough, after an infinite number of experiments, and great labour, to bring it to a happy conclusion. The whole English language is now methodically and systematically arranged at my fount; so that printing can now be performed with greater dispatch, and at less expence, than according to the mode hitherto in use.

In bringing this work to perfection, I had not my own advantage solely in view; I wished to be useful to the community; and it is with pleasure I see that the public will derive considerable benefit from my industry; for I have resolved to sell the REGISTER *One halfpenny* UNDER the price paid for seven out of eight of the morning

'த டெய்லி யுனிவர்சல் ரிஜிஸ்தர்' முதல் இதழ் 1-1-1785

JANAVINODINI.

# ஜநவிநோதிநி.

இல. 5, 6.] {மேமீ ஜூன்மீ} 1880. [புஸ்த. XI.

CONTENTS.



அட்டவணை.



MADRAS:

Published by the

CHOOL BOOK AND VERNACULAR LITERATURE SOCIETY,

D SOLD AT THEIR DEPOSITORY, OLD COLLEGE.

ஜநவிநோதிநி (1880) மாத இதழ்

பிலுங்கு

# ஞானசாரியன்.

தினப் பதிப்பு.

PENANG GNANACHARIAN.

DAILY NEWS.

சந்தா விபரம்.
உள்ளுருககு மாதம 1-கரு 75 காச.
வெளியூருககு மாதம் 1-கரு திகவி $ 1.
தனிபபததிரிகை 1-கரு 5 காசு.

10 கையொப்பம வாங்கி அனுப்புகிறவர்களுக்கு ஒரு பத்திரிகை இனுமாய் அனுபபபபடும்.

புத்தகம். 1. | பிலுக்கு 1912-வரு அக்டோபர்-மீ 14-உ திங்கட்கிழமை. 1330-வரு துலகயிதா-மீ 2-உ | இலக்கம் 115

பினாங்கில் வெளியான 'ஞானாசிரியன்' (1912) நாளிதழ்




ஜி. சுப்பிரமணிர ஐயரால் தொடங்கி நடத்தப்பட்ட
'சுதேசமித்திரன்' நாளிதழ் (1889)

1881இல் ''சைவ சம்போதினி''—உடுவில் வைத்தீசுவர ஐயரால் கரலிகித இதழாக வெளியிடப்பட்ட சைவ இதழாகும்.

இவை யாவும் ஆறுமுக நாவலருடைய சைவ சமயப் போராட்டங்களின் எதிரொலிப்பாக வெளியிடப்பட்டவை யாகும்.

1882இல் ''முஸ்லீம் நேசன்''—இது எம். சி. சித்தி லெவ்வை என்பவரால், முஸ்லீம் சமூகத்தினரிடையே மறு மலர்ச்சி ஏற்படுத்துவதற்காகத் தொடங்கப்பட்டஇதழாகும். மேலும், இது முஸ்லீம் மக்களுடைய சமயப் பின்னணியிலே தேச மறுமலர்ச்சிக்குரிய கருத்துகளைத் தாங்கியும், இஸ்லாமிய மறைக் கருத்துகளை மக்களிடையே பரப்பித் தத்துவார்த்த ரீதியிலான சிந்தனையை உருவாக்கவும் முனைந்தது. திரு. சித்தி லெவ்வை தான், ''அசன்பே சரித்திரம்'' என்ற நாவலையும் உருவாக்கித் தமிழ்க்குப் புகழ்த்தேடித் தந்தவராவர்.

1884இல் ''சைவாபிமானி''—வல்வை பொ. ஞான சபாபதிப் பிள்ளையால் நடத்தப் பெற்ற சைவ இதழாகும். இயற்றமிழ்ப் போதனாசிரியர் வல்வை வைத்தியலிங்கம் பிள்ளையும் இவ்விதழுடன் இணைந்து செயல்பட்டுள்ளார்.

1885இல் ''சன்மார்க்க போதினி''—இது தம்பி முத்துப் புலவரால் நடத்தப் பெற்ற இதழாகும். கிறிஸ்தவ சமயக் கருத்துகளுக்கு முன்னுரிமை கொடுத்த இவ்விதழில், நாடெங் கும் மலிந்திருந்த சமூக வேறுபாடுகளைக் களையும் நோக்குடனும் கருத்துகள் வெளியிடப்பட்டன.

1886இல் ''இலங்கை தினவர்த்தமானி'' - ரி. எஸ் ராஜூப் பிள்ளையால் தொடங்கப்பட்ட இலங்கையின் முதலாவது தமிழ் தினசரியாகும். பொதுச் செய்திகளைத் தாங்கி வெளி வந்த இவ்விதழில், கவர்ச்சிகரமான தலையங்கங்கள் இடுமுறையும் கையாளப்பட்டது.

1886இல்'சர்வ ஜன நேசன்'-இது ஏ.எஸ்.சி.மொகய்தீன் என்பவரால் வெளியிடப்பட்ட முஸ்லீம் இதழாகும்.

1889 இல் ''இந்து சாதனம்'' எனும் சைவ சமய இதழ் யாழ்ப்பாணத்தில் தோற்றுவிக்கப்பட்டு, இன்றுவரை தொடர்ந்து நற்பணி புரிந்து வருகிறது.

1890 இல் ''முஸ்லீம் பாதுகாவலன்''—இது ஐ. வே. ம. அப்துல் அசீஸ் என்பவரால் வெளியிடப்பட்ட முஸ்லீம் இதழாகும்.

1890 இல் ''சைபுல் இஸ்லாம்'' — இது அ. அப்துல் ரகுமானால் வெளியிடப்பட்ட இஸ்லாமிய இதழாகும்.

1893இல்''இஸ்லாம் மித்திரன்''—இது எல். எம்.ஓத்மன் என்பவரால் வெளியிடப்பட்ட இஸ்லாமிய இதழாகும்.

1890 இல் ''மாணவன்'' — இது எம். எஸ். பாவாவை ஆசிரியராகக் கொண்டு, வெஸ்லியன் மிசனரி மாரால், மட்டக்களப்பு பகுதியிலிருந்து வெளிவந்த முதலாவது இதழாகும். மட்டக்களப்புப் பகுதி வளம் பற்றியும் வழக்கு கள் பற்றியும், வரலாறு பற்றியும் அரிய தகவல்கள் இவ் விதழில் தரப்பட்டன.

மேலும், சத்தியாபிமானி (1884), வைத்திய விசாரணி (1898)—ஆ. முத்துபிள்ளை, வித்தகம் சந்தையா பிள்ளை, ஞானசித்தி(1908)—சி. தாமோதரப்பிள்ளை, மகா விஜய லட்சுமி விஜய லட்சுமி சண்முக நாதன் போன்ற இதழ் கள் தோன்றி இலங்கைத் தமிழ் மக்களுக்கு வழிகாட்டி யுள்ளன.

சுதேச நாட்டியம்—ஈ. வேலுப் பிள்ளையும் சி. நல்ல தம்பியும் சேர்ந்து நடத்திய இதழ். ஈழ சேகரி (1932) நா. பென்னையா பிள்ளையால் தோற்றுவிக்கப்பட்டு, சிவபாத சுந்தரம், அரியரத்தினம், முதலியவர்களை ஆசிரியராகக் கொண்டு திறம்பட நடத்த பெற்ற இதழும்'',

'வீரகேசரி' இதழும் 1930இல் கொழும்புவில் தோற்றுவிக்கப் பட்டன. ''தினகரன்''—1932 முதல் வெளிவரும் தினசரி இதழாகும்.

தற்போது கொழும்புவிலிருந்து ''வீரகேசரி''யும், ''மித்திரன்''(மாலைப் பதிப்பு)''தினபதி'' என்னும் நாளேடு கள் வெளியாகின்றன. கண்டியிலிருந்து ''செய்தி''யும், கொழும்விலிருந்து ''சுதந்தர''னும், யாழ்ப்பாணத்திலிருந்து ''ஈழ நாடும்''வார இதழ்களாகவும், ''கலைச் செல்வி'', ''விவேகி'', ''மல்லிகை'' 'இளம்பிறை'என்னும் மாத வெளி யீடுகளும் வெளியிடப் படுகின்றன. ''கலைவாணி'' (1931) சோம சட்ட நாதனை ஆசிரியராகக் கொண்டு, தமிழர் முன்னேற்றங் கருதி, கொழும்புவிலிருந்து வெளியாகிறது. 1922 இல் ''தமிழ்'' எனும் மாத இதழ் தொடங்கப்பட்டது. அதே காலத்தில் ''தமிழ்ப் போதினி'', ''கலா வல்லி'' எனும் இதழ்களும் தோற்றுவிக்கப்பட்டன. 1933 இல் ''ஞாயிறு'' எனும் இதழ், கலா நிலையத்தாரால் தொடங் கப்பட்டது. ஆரிய திராவிட பாஷா விருத்தி சங்கத்தினரால் ''கலாநிதி'' என்னும் முத்திங்கள் (காலாண்டு) இதழ் நடத்தப்பெற்றது.

மலேயா : மலேயாவில் உள்ள பினாங்கு நகரில் 1888 இல் ''இந்துநேசன்'' எனும் பெயரில் மாத இருமுறை இதழ் முதன்முதலாகத் தொடங்கப்பட்டது. அதே காலத்தில் ''பினாங்கு விஜய கேதனம்'' எனும் இதழும் வெளியாகி, ஓராண்டு காலம் வரை நடைபெற்றது. மேலும், ''பினாங்கு வர்த்தமானி'', ''உலகநேசன்'' எனும் இரு இதழ்களும் 1897இல் வெளியாகியுள்ளன.

1896-97இல் ''தேஜோபிமானி'' என்ற மாத இருமுறை இதழ், திரு. அம்பலவாணப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு பேராக் கிலிருந்து வெளியாகியுள்ளது.

இங்கு ''தமிழர் மலர்'' என்ற பெயரில் ஒரு நாளேடும், 'பொன்னி', ''மனோகரன்'' என்ற பெயர்களில் மாத இதழ் களும் தொடங்கப்பட்டு மிகுந்த செல்வாக்கோடு நடை

பெற்றுள்ளன. 1927 இல் ''நவநீதம்'' எனும் வார இதழ் திரு. எம். எம். புகாரியை ஆசிரியராகக் கொண்டு நடத்தப் பட்டது. 6-7-1935 இல் சிங்கப்பூர் தமிழ்ச் சீர்திருத்தச் சங்கத்தின் சார்பில், ''தமிழ் முரசு'' என்னும் வார இதழைத் திரு. கோ. சாரங்கபாணி நாயுடு, ஒரு காசு விலையில்நடத்த முற்பட்டார். பின்னர் இது வார மும்முறையாகவும் நாளிதழாகவும் மாறி 15 காசு விலையில் விற்கப்பட்டு புகழேணியில் திகழ்ந்தது!

கோலாலம்பூரில் ''தமிழகம்'' என்னும் வார இதழைத் திரு. சி. நரசிம்ம ஐயங்கார் தொடங்கினார். பின்னர் இவர் 1924இல் ''தமிழ் நேசன்'' என்னும் வார இதழையும் நடத்த முற்பட்டார். பின்னர் இது நாளிதழாக வளர்ச்சியுற்றது. இதற்கு திரு. முருகு சுப்பிரமணியம் ஆசிரியரானார். இது நாள்தோறும் 18,000 படிகளுக்கு மேல் விற்பனையாயிற்று. இங்கு, ''தமிழரசி'' என்னும் இதழும் நடத்தப்பட்டது.

1929இல்''கலியுக நண்பன்'' என்னும் இதழும், ''இந்திய மித்திரன்'' (ஆசிரியர் பி. வேணுகோபால்) என்னும் இதழும் ஈப்போவில் (எஃவ். எம். எஸ்) வெளியாயின.

சிங்கப்பூர் : 1887 இல் ''சிங்கை நேசன்'' என்னும் இதழ் தொடங்கப்பட்டு 1897 வரை மூன்றாண்டுகள் நடை பெற்றுள்ளது.

சிங்கப்பூரில் ''மலேயா நண்பன்'', ''முன்னேற்றம்'' எனும் இதழ்களும் துவக்கப்பட்டுள்ளன.

பர்மா: பர்மாவிலுள்ள இரங்கூனில் 1922இல் ''தேசோபகாரி'' என்ற வார்ர இதழைத் திரு. வி. சுந்தரம் என்பவர் தொடங்கி நடத்தினார். இதற்கு திரு. செல்லம் பிள்ளை என்பவர் ஆசிரியராக இருந்தார். இவர் தேசீய பற்று மிக்கவர்; ஆறு ஏழு முறை சிறை சென்றிருக்கிறார்! ஒரு முறை 'தேசோபகாரி' அச்சுக் கூடம் முழுவதும் பறி முதலாகியது; அதன் ஆசிரியரிடம் ரூ. 3000 ஈடுகானம் (ஜாமீன்) கேட்கப்பட்டது!

1925இல் ''டெய்லி மெயில்'', ''இந்தியன் டிட்பிட்ஸ்'' என்னும் இரு ஆங்கில இதழ்களைத் திரு. எஸ். வேத மூர்த்தி முதலியார் என்பவர், ரங்கூனில் நடத்தியுள்ளார். இவர் அழகான ஆங்கில நடையைக் கையாண்டு புகழ் பெற்றிருந் தார்.

இரங்கூனில் ''ரசிக ரஞ்சனி'' என்னும் நாளேட்டை திரு. எஸ். பி. இரத்தினம் என்பவர் ஆசிரியராக இருந்து நடத்தி வந்தார். ''தொண்டன்'' ''பர்மா நாடு'' ''காந்தி'' எனும் பெயர்களில் இங்கு நாளேடுகள் நடைபெற்றன.'பர்மா. நாடு' டேவிட்டை ஆசிரியராககொண்டு ஒருமாத இதழாகவும் நடத்தப் பெற்றது. ''பால பர்மா'' ஹரிகிருஷ்ணனை ஆசிரிய ராகக் கொண்டு நடத்தப் பெற்ற ஒரு நாளேடாகும்.'ஜோதி' எனும் வார இதழுக்குத் திரு. வெ. சாமிநாத சர்மா ஆசிரிய ராக இருந்து சில ஆண்டுகள் வரை திறம்பட நடத்தி வந்தார். இங்கு ''சுதந்திரன்'' எனும் பெயரில் ஒரு வார இதழும் வெளியாகியது.'தனவணிகன்' எனும் வார இதழைத் திரு. ஏ. ஆர். எம். ஏ. கருப்பன் செட்டியார் நடத்தி வந்தார். ''சைபுல் இஸ்லாம்'' என்னும் வார இதழ், இரங்கூனிலிருந்து புதன்கிழமைதோறும் வெளி வந்தது.

தென்னாப்பிரிக்கா: இங்கு டர்பன் நகரில் ''விவேக பாநு'' எனும் வார இதழைத் திரு. விருத்தாசலம் பிள்ளை என்பவர் நடத்தியுள்ளார். ''மெய்கண்ட மித்திரன்'' எனும் மாத இதழ், பிரிட்டோரியாவில் வெளியாகியது. ''பிரச மலர்'', ''செந்தமிழ்ச் செல்வன்'' ''தமிழ்மணி'' என்னும் இதழ்களுக்கு டர்பன் ச. மு. பிள்ளை ஆசிரியராக இருந்துள்ளார். ''ஜோகன்பர்க் நேசன்'' என்னும் இதழ்1902 இல் வெளியாகியது.

பீஜீத் தீவு: ''மித்திரன்'' எனும் இதழை அப்பா பிள்ளை என்பவர், பீஜீத் தீவின் தலைநகரான சுவா எனும் இடத்திலிருந்து தட்டுருட்டு (Cyclo style) படியாக வெளி யிட்டுள்ளார்.

''சங்கம்'' என்னும் பெயரில் தமிழ் இதழ் ஒன்றும் நடத்தப் பெற்றது.

இலண்டன்: இங்கிலாந்தின் தலைநகரான இலண்டனில் சில இதழ்கள் நடைபெற்று வருகின்றன. இங்கிலாந்து முழுவதிலும் பல பகுதிகளில் இருந்து வந்து வாழ்ந்து வரும் தமிழ் மக்களின் எண்ணிக்கை 20,000.

''இலண்டன் தமிழ் முரசு''—ஆசிரியர் எஸ். எம். சதானந்தம். இது 8, ஆஸன் குரோ, இலண்டன் S. W. 19 எனுமிடத்திலிருந்து வெளியாகும் இதழாகும்.

''தமிழன் குரல்'' (Voice of Tamil) எனும் மாத இதழ், 164, பிரௌனிங் வீதி, மெனார் பூங்கா, இலண்டன் E-12 என்ற இடத்திலிருந்து வெளியிடப்படுகிறது.

''தமிழ் மலர்ச்சி'' வி. சி. அப்பாசாமியை ஆசிரியராகக் கொண்டு, 15—ரீஜன்ட் ஸ்கொயர்—இலண்டன் W. C. I எனும் இடத்திலிருந்து வெளி வருகிறது.

''ஈழ விடுதலை''—எனும் மாத இதழும் இலண்டனிலிருந்து வெளியாகிறது. ''அறிவியல்'' என்ற மாத இதழையும் தமிழர் முன்னேற்றக் கழகம், 164, பிரௌனிங் வீதி, மெனார் பூங்கா, இலண்டன் E. 12 என்ற முகவரியிலிருந்து வெளியிட இருப்பதாக அறிவித்துள்ளது.

ஃபிரான்ஸ்: இங்கும் தமிழர்கள் வாழ்கின்றனர். பிரான்சுத் தமிழ்ச் சங்கம் (Federation Tamoule DeFrance) 195, ழு பேபர்ஸ் செயின்ட் டெனீஸ் 75010—பாரீஸ் என்னும் முகவரியில் இயங்குகின்றது. பாரீசிலிருந்தும், ''பாரீஸ் முரசு'' ''எரிமலை'' எனும் தமிழ் இதழ்கள் வெளியிடப்படுகின்றன.

பம்பாய்: மராட்டிய மாநிலத்தின் தலைநகரான பம்பாயில் தமிழ்ச் சங்கம் உள்ளது. இங்கு ''விந்தியா'' எனும் மாத இதழ் அழகிய முறையில் வெளியிடப்பட்டது.

தில்லி: இந்தியத் துணைக் கண்டத்தின் தலைநகரான தில்லியிலும் தமிழ்ச் சங்கம் காணப்பட்டுள்ளது. இச்சங்கத் தின் சார்பில் ''சுடர்'' எனும் மாத இதழ், திரு. டி. ஜி ஆனந்தசாமியை ஆசிரியராகக் கொண்டு 1951 முதல் வெளி வந்து கொண்டிருக்கிறது. இது அறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன், தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதையர், கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி ஆகியோரின் நினைவு மலர் களைச் சிறப்பாக வெளிக் கொண்டு வந்துள்ளது. இதற்கு முனைவர் சாலை இளந்திரையன் பெரிதும் துணை புரிந் துள்ளார். தில்லித் தமிழ்ச் சங்க வெள்ளிவிழா மலரும் சிறந்த முறையில் பெரிய அளவில் வெளியிடப்பட்டது. ''கணையாழி'' எனும் மாத இதழும் திரு. கஸ்தூரி ரங்கனால் முதலில் தில்லியிலிருந்தே வெளியிடப் பட்டது. பின்னர் சென்னைக்கு மாறியது.

பங்களூர் : கர்நாடக மாநிலத்தின் தலை நகரான பங்களூரிலும் தமிழ்ச் சங்கம் காணப்பட்டு வெள்ளிவிழா கொண்டாடப்பட்டது. இச்சங்கச் சார்பில் ''ஊற்று'' என்னும் மாத இதழ் வெளியிடப்படுகிறது. பங்களூரில் ''தினத் தபால்''— திரு. எஸ். சுந்தரத்தை ஆசிரியராகக் கொண்டு 1954 முதல் நாளேடு ஒன்று நடை பெற்று வருகிறது.

---

"Tamil Journalism of sporadic kind exists in Mauritius, Fiji and South Africa."—Father X. S. Thaninayagam, in his "The Study of Contemporary Tamil Groups a survey" an article presented to III International Conference Seminar, held in paris 1970 p, 221.

அமெரிக்கா : ''வாழும் தமிழ் உலகம்''(1983)-ஆசிரியர் டாக்டர் பழனி ஜி. பெரிய சாமி. மாத இதழ். கிரௌன் 1×16. விலை அமெரிக்காவில் 2 டாலர்; பிரிட்டனில் 3 பவுன்; இந்தியாவில் ரூ. 3. இது உலகத் தமிழ் பதிப்பக வெளியீடாகும். அமெரிக்காவிலுள்ள 7142 - ரிவர் எட்ஜ் ரோடு, கொலம்பியா, மேரிலாண்டு 21044 எனும் முகவரி யிலிருந்து வெளியிடப்படுகிறது. இது புகைப்பட அச்சடிப்பு மூலம் அழகாகச் சென்னையில் அச்சிடப்பட்டு, வெளியிடப் படுகிறது. இதில் மலர் - 3, இதழ் 11 இல் (1986 நவம்பர்) இதழில், 'புதிய முறையில் தீபாவளி! என்ற தலையங்கமும், ஆசிரியர் எழுதுகிறார் என்ற பகுதியும், 'திருக்குறளை நினைவூட்டுகிறோம்' என்ற பகுதியும், உலகிலே பெரிய பாறை மைதானம் என்ற கட்டுரையும், கதை கட்டுரைகள் படங்களுடன் வெளிவந்துள்ளன!

''தமிழ் ஈழத்தின் குரல்'' (The Voice of Thamil Eelam) -டாக்டர் வின்சென்ட் பஞ்சாட்சரம் இது நியூயார்க்கிலிருந்து வெளியிடப்படுகிறது. இவ்வேடு ஆங்கிலத்தில் தமிழ் ஆக்கங் களையும் தாங்கி வெளியாகிறது. முகவரி : 89, டெனிசன் டிரைவ், நனுவாட், நியூயார்க்—10954.

# 3. முற்கால புகழ் பெற்ற இதழ்கள்

''ஜன விநோதனி'' (1870): இது பல பொருள்களை விளக்கி வந்த மாத இதழ். 1870 முதல் 1890 வரை துரைத் தனக் கல்விச் சங்கத்தினரால் சென்னையில் வெளியிடப்பட்டு வந்தது. டிம்மி 1×8 அளவினது. சென்னையிலிருந்த சி. கே. எஸ். அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியது.

தாய் மார்களுக்குப் பயன்படும் குறிப்புகளும், நல்வழிக் குரிய திட்டங்களும், உண்மைக் கதைகளும், முழுப்க்க வண்ணப்படங்களும், வழிப் பயணம், துணிச்சலான செயல் கள் ஆகியவை பற்றிய விவரங்களும் ஒருங்கே கொண்ட முன்னாளில் புகழ் பெற்றிருந்த இதழாகும். இது அரசாங்கத்து ஆதரவுடன் நடத்தப்பட்டு வந்தது.

புது மாதிரியான கட்டடங்கள்—சிற்ப சாஸ்திரம்—அற்ப விஷயங்கள்—முப்படை தீர்ந்த பளிங்கு—தக்காணத்துப் பூர்வ கதை (ஜவந்தியம்மாள் கதை)—ஜீவ ஜந்துக்களின் பாஷைகள்—சிறுவர்க்கான கதை—சமாசாரம் ஆகியன இலக்கம்—1,2 புஸ்தகம்—9 ஜனவரி, பிப்ரவரி இதழ்களில் காணக்கிடக்கின்றன.

''செந்தமிழ்ப் போதக சாலைத் தலைவராகிய அருணாசலம் பிள்ளை (103,சூளைக் கடை வீதி, சென்னை), பிறவிக் குருடர்க்கும் தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்களின் ஒலி வரிவடிவங்களை எளிதாக எழுதவும் படிக்கவும் கற்பிப்பது யுக்த மென்று நினைத்து, அதற்கு வேண்டிய கருவிகளைச் சேகரித்து வைத்திருந்தார்.'' என்ற குறிப்பும் 'ஜனவிநோதனி'யில் தரப்பட்டுள்ளது. 'சித்திர வித்தை' என்பது பற்றி 'ஜனவிநோதனி' 1878 மே இதழில் எழுதப் பட்டுள்ளது.

அறிவும் ஆராய்ச்சியும் வளர்ந்து வரும் இக்காலத்தே கூட வெளிவராத பல அரிய செய்திகள் சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்னரே 'ஜன விநோதனி'யில் வெளி வந்துள்ளன. ரெவ. எஸ். ஜே. சௌரியப்பா போன்ற பலர் இதற்குப் பதிப்பாசிரியராக இருந்துள்ளனர்.

''ஜனவிநோதனி''யின் கட்டுரைகளில் சொற்பிழைகளும் வாக்கியப் பிழைகளும் பற்பல இடங்களிற் காண்கின்றன. அவற்றையெல்லாம் இருந்தவாறே பதிப்பித்துள்ளேன். அவை ஒரு காலத்தே உரைநடையின் ஆராய்ச்சி நிகழும் பொழுதில் அவ்வாராய்ச்சியாளர்க்குப் பயன்படுமென்பது என் கருத்து''என்று பேராசிரியர் கா. நமசிவாய முதலியார், 'ஜன விநோதனி'யிலிருந்து மீண்டும் எடுத்துப் பதிப்பிக்கும் போது (தொகுதி—4, பகுதி—1) குறிப்பிட்டுள்ளார்.

I. 'ஞான பாநு' (1876): திரு. செங்கல்வராய முதலியார் இதன் ஆசிரியர். சென்னை வர்த்தமான தாரங்கணி அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகிய மாத இதழ். இதுவும் பல் திறப்பட்ட பொருள்களைத் தாங்கி வெளிவந்தது. கல்வியின் மேன்மைக்காக வேண்டி இது மிகவும் பாடுபட்டு வந்தது.

II. 'ஞானபாநு' (1913) : ஆசிரியை மீனாட்சியம்மாள். சென்னை மயிலாப்பூரில் இருந்து வெளியாகிய மாத இதழ். டிம்மி 1 × 8 அளவினது; 24 பக்கங்கள் கொண்டது. ஆண்டுக்கு ரூ. 1-75. நாலைந்து ஆண்டுகள் வரை வெளி வந்தது.

திரு. சி. சு. சுப்பிரமணிய சிவா மிகத் தீவிர வாதியாக அக்காலத்தில் கருதப்பட்டதால், இதழ் வெளியிட அனுமதி கிடைக்காது என்று கருதி, தமது மனைவியின் பெயரால் இவ்விதழை வெளியிடலானார்.

''தேன் மொழி போன்ற நமது தென்மொழியில் திருவள்ளுவ தேவர் இயற்றியருளிய திருக்குறளைப் போன்ற

தோர் நூல், எத்தேசத்திலும் எப்பாஷையிலும் எவராலும் இயற்றப்படவில்லையென்று நாம் கூறத் துணிகின்றோம். அரிய பெரிய சாஸ்திரங்களின் ஆராய்ச்சியை யெல்லாம் ஐந்து ஆறு வார்த்தைகளில் அடக்கி, ஆச்சர்யமாக அனுபவத்தை விளக்கியுள்ள நூல், இத் திருக்குறளைத் தவிர வேறு யாது உள்ளது? எவரேனும் எடுத்துக் காட்ட முன்வரட்டும்!', என்று திரு. சுப்பிரமணிய சிவா, தமது 'ஞானபாநு' (தொகுதி -2, பகுதி-2. 1912 மே) இதழில் வினவியிருக்கிறார்.

இவரது 'ஞானபாநு'வில்தான் திரு.சி. சுப்பிரமணிய பாரதியாரின் கதைகளும் கட்டுரைகளும் வெளியாகியுள்ளன. 'தமிழில் எழுத்துக் குறை' என்ற தலைப்பிட்டு, பாரதியார் 'ஞானபாநு' (தொகுதி—3, பகுதி—4, பக்கம் 102—105) ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அதில், ''எல்லா ஐரோப்பிய பாஷைகளுமே அந்ய பாஷைகளிலுள்ள விசேஷ உச்சரிப்புகளுக்கிணங்குபடி சில தனிக்குறிகள் ஏற்பாடு செய்து வைத்துக் கொண்டிருக்கின்றன.

நாமும் அப்படியே சில விசேஷக் குறிகள் ஏற்பாடு செய்து கொள்ளுதல் மிகவும் அவசியமாகும்.

ஏற்கனவே, நான் இந்தக் குறையை நீக்கும் பொருட்டாக, மிகவும் சுலபமாக ஐந்து நிமிஷங்களில் யாரும் கற்றுக் கொள்ளக்கூடிய சில குறிகள் தயார் செய்து வைத்திருக்கிறேன்.'' என்று தெரிவித்துள்ளார்.

ஆனால், அக்குறிகள் என்ன என்பதை பின் இதழ்களில் காணமுடியவில்லை!

'ஞானபாநு' முதல் போடாமலே நடத்தப்பட்ட இதழாகும்!

''சித்தாந்த சங்கிரகம்'' (1878): இது டிம்மி 1×8 அளவினது; 24 பக்கங்கள் கொண்ட மாத இதழ். ஆண்டுக் கட்டணம் ரூ. 5-25.

இது ''கல்கத்தா, சென்னைப் பட்டணம், பம்பாய், அல்லஹாபாத்—இந் நான்கு உயர்நீதி மன்றங்களுடையவும், 'பிரிவு கவுன்சில்' என்கிற மகாராணி அவர்களுடைய நியாய சபையாருடையவும் சித்தாந்தங்களடங்கிய 'இங்கிலிஷ் லா ரிபோர்ட்'டிலுள்ள ஒவ்வொரு வழக்கினுடைய சுருக்கத்தைத் தமிழில், கரூர் இராமாராவ் என்பவர் மொழி பெயர்த்துக் கொடுத்து வெளியிட்ட இதழாகும். சிவில் அப்பில் (2) 1876ஞு விசேஷ அப்பில்— 39 (இ. லா. ரி. 133—139):

''விஷயம்: வாதி வீட்டிற்கு வெளிச்சமும் காற்றும் இராத படிக்கும், மற்றுஞ் சில விதமாக அவனுக்குக் குந்தகம் நேரிடும் படியாகவும் பிரதிவாதிகள் தங்கள் வீட்டை உயர்த்திக் கட்டக் கூடாதென்று அவன் நோட்டீசு மூலமாகத் தடுத் திருந்தும், அவர்கள் அதை உயர்த்திக் கட்டினபடியால், அவனுக்கு அவர்களால் நஷ்டம் கிடைக்கத் தக்கதென்றும், அவர்களுடைய வீட்டின் எந்தப் பாகத்தினால் வாதிக்கு குந்தகம் நேரிடும்படியாக இருந்ததோ, அந்தப் பாகத்துக் கட்டடத்தை அவர்கள் எடுத்துவிடத் தக்கதென்றும் தீர்மானிக்கப் பட்டது.''—பம்பாய் ஐகோர்ட்டாரவர்களுடைய சித்தாந்தங்கள் (5).

''மஹாராணி'' (1887): இது விக்டோரியா பேரரசியின் 50 ஆண்டுக் கால ஆட்சி விழாவின்போது 1887 ஜூனில் தொடங்கப்பட்ட மாத இரு முறை இதழாகும். ''அமிழ்தினு மாற்றவினிதே தம் மக்கள் சிறுகை யளாவிய கூழ்'' என்ற திருக்குறளைத் தலைப்பில் போட்டும், தொடர்கதை, பாட்டும் சங்கீதமும், மாதர் செய் கடமை, நாநா தேச யாத்திரை (வர்ணந் தீர்ந்த படங்களுடன்) பூத் தையல் வேலைகளுக்கும் வீட்டிலிடும் கோலங்களுக்கும் மாதிரி காட்டும் சித்திரங்களும், சுக வாழ்க்கையும் வீட்டுத் தொழில் களும், சிறந்தோர் வரலாறும், கட்டுக் கதைகளும் சிறு கதை களும், விடுகதை முதலியவை 'மகாராணி'யில் அடங்கி யிருந்தன.

"இது பெண்களுக்கு நினைப்பிலும் செய்கையிலும் மாசில்லா திருக்க வேண்டிய வகைகளைக் கற்பித்து, மனதிற்கு வினோதத்தை உண்டாக்குகிற நீதிபோதனை பத்திரிகையாக இருக்கும்" என்று சுட்டப்பட்டுள்ளது. இவ்விதழின் அடிப் பக்கத்திலே நீதிக் கருத்துத் தொடர்கள் போடப் பட்டிருந்தன.

கோல வகைகள்: 1. கிளி மூக்குப் பந்தல்; 2. குடைக் கமலம்; 3. சித்திராசனம்; 4. பாவற்கொடி பந்தல்; 5. வில்வ தளம்; 6. கொடித் தாமரை; 7. காளங்கி மடு; 8. யானையடிக் கமலம்; 9. நீராழி மண்டபம்; 10. சூரிய கிரகணம்.

இது திரு. வி. கிருஷ்ணமாச்சாரியாரை ஆசிரியராகக் கொண்டு சென்னை வி. என். ஜூபிலி அச்சகத்தில் அச்சிடப் பட்டு வெளியாகியது.

"கலா தரங்கிணி" (1887): இது சென்னைத் திராவிட ரத்னாகர அச்சகத்தில் அச்சாகி வெளி வந்த மாத இதழ். டிம்மி 1 × 8 அளவினது.

இதில், கடவுள் துதி—அலங்காரம்—கடிதம்,—கம்பர் சரித்திரம்—தர்க்க சாஸ்திரம் — பழமொழிகள் — பல விஷயங்கள்—புண்ணிய சரித்திரங்கள்—புராண, மத, பொருளிலக்கண, யாப்பிலக்கண, விரதாதிகள் ஆகிய பலவேறு பொருள்களைக் குறித்து விளக்கமாக எழுதப்பட்டுள்ளது.

"அவ்வகஸ்திய முனிவர் தாம் செய்த நூல் பிரபலமாக வும், காசியிலுள்ள வடமொழிச் சங்கத்துக்கு எதிர்த் தட்டாகத் தென்றிசையில் ஓர் தமிழ்ச் சங்க மேற்படுத்தவும் கருதி, (அக்காரியங்கள் அரசர்களுடைய ஆதரவின்றி நிறை வேறுவது கடினமாதலின்) அக்காலத்துப் பாண்டிய நாட்டில் அரசு செலுத்தி வந்த காய்ச்சின வழுதியைக் கொண்டு, அவன் இராஜதானியாகிய தக்ஷிண மதுரையில் ஓர் சங்கம்

ஏற்படுத்துவித்தார். அது அப்பாண்டியர்களுடைய ஆதரவும் அனாதரவும் காரணமாகத் தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்றாயிற்று.''—''கலாதரங்கிணி'', புத்தகம்—1, சஞ்சிகை—3.

'உபாத்தியாயர்' (The Village School Master)—1888. மாத இதழ். 16 பக்கங்கள். டிம்மி 1×8 அளவினது. விலை தனிப்படி இரண்டணா. ஆண்டுக் கட்டணம் ரூ. 1.

''உபாத்தியாயர்களுக்குக் குறைகள் நேரிடும்பொழுது முறையிட்டுக் கொள்ள என்ன சாதனங்களிருக்கின்றன? ஏதாவது சந்தியங்கள் தீர்த்துக் கொள்ள வேண்டுமானால் என்ன மார்க்கமிருக்கிறது? யாம் அறிக்கையில் வெளியிட்ட அநேக சங்கங்களோடுகூட இன்னும் அநேக பிரயோஜனங் களை அடையலாம்.'' என்று ஷெ Vol. 1 No. 1இல் எழுதப் பட்டுள்ளது.

மேலும், கிண்டர் கார்டனும் மனோதத்துவமும், வித்தியாப்பியாசமும் பாடக் குறிப்பும்—நடத்தும் முறை—பாடம்—எழுத்து வாசிப்பு முதலியவை பற்றியும் விளக்கி எழுதப்பட்டுள்ளன.

முன்பெல்லாம் 'மெட்ரிக்குலேஷன்' (பள்ளி இறுதித் தேர்வு) நவம்பர் டிசம்பர் சனவரியில் நடைபெற்றன என்றும், பின்பு மார்ச்சு, ஏப்ரல், மே மாதங்களில் வைக்கப் பட்டன என்றும் அறிய வருகிறோம்.

''விவேக சிந்தாமணி'' (1892): ஆசிரியர்—சி. வி. சாமி நாதையர். மாத இதழ். அளவு கிரவுன் 1×8; 32 பக்கங்கள்; 23 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது. தளமான காகிதப் பதிப்பு ஆண்டுக்கு ரூ 5/- தனிப்படி 7 அணா. லேசான காகிதப் பதிப்பு ஆண்டுக்கு ரூ 4/-தனிப்படி 5 அணா.

இது அறிவைப் பரவச் செய்வதற்கான தமிழ் மாத இதழாகும். முதற் பக்கத்தில் சித்திர வேலைப்பாடுடன்கூடிய 'விவேக சிந்தாமணி'யின் அச்சுப் படிமையும், நடுவில் கலை மகளின் உருவந்தாங்கியும் வெளியாகியது. இதற்கு ஆறுமுக நாவலர், தி. லட்சுமணப்பிள்ளை முதலிய பெருமக்கள் கட்டுரைகளும் கீர்த்தனைகளும் வழங்கியுள்ளனர். பெஞ்சமின் பிராங்கிலின் வரலாறு, உபாத்தியாயர் பக்கம், சிறுவர்க்கான பக்கம், விசேஷக் குறிப்புகள், மாதர் மஞ்சரி, புத்தரது திவ்விய சரித்திரம் ஆகியனவும், நந்தவன நஷ்டம் அல்லது மோட்ச ஈனம்—டி. சுந்தர ராவ் பி. ஏ. தொடர்ந்து எழுதிய கதையும் வெளியிடப்பட்டுள்ளன. ''ஆபத்துக்கிட மான அபவாதம் அல்லது கமலம்பாள் சரித்திரம்'' என்ற கதையைத் திரு. பி. ஆர். இராஜமய்யர் இதில்தான் தொடர்ந்து எழுதினார். திருஞான சம்பந்தர் காலநிர்ணயம் என்ற தலைப்பில் பேராசிரியர் ப. சுந்தரம்பிள்ளை ஆங்கிலத் தில் எழுதியதைத் திரு. சண்முக சுந்தரம் தமிழில் மொழி பெயர்த்தது, இதில் தொடர்ந்து வெளியாகியது. 'விக்டோரியா மகாராணியவர்கள் சரித்திர'மும், 'நகைப் பைத்தியம்' என்ற கட்டுரையும் இதில் வெளியாகியுள்ளன. 'மார்பில் (Marble) பேபர் என்னும் வழவழப்பு வர்ணக் காகிதம் செய்யும் வகை' என்னும் கட்டுரையும் 'விவேக சிந்தாமணி'யில் 1898 ஜூன் இதழில் வெளிவந்துள்ளது.

திரு. பி. ஆர். இராஜமய்யர் 'விவேக சிந்தாமணி'க்குத் தொடர்ந்து எழுதி வந்தார். இவருக்கு வேதாந்த ஆசையே பெருகிப் பைத்தியம் போல் முற்றி வந்தது! 'ஆரிய பால போதினி' மூலம் தமது வேதாந்தக் கருத்தை வெளியிட முயன்றார். அது சரிபடாததால், 'பிரபுத்தப் பாரதம்' என்னும் ஆங்கில இதழுக்கு ஆசிரியரானார். தமது இளம் மனைவியை விட்டுக் குறைந்த வயதில் மயிலாப்பூரில் குடியிருந்த வீட்டில் இறந்து போனார்.

இவர் 'கமலம்பாள் சரித்திரத்'தைத் தமது 21ஆம் வயதில் எழுதத் தொடங்கி, மூன்றாண்டுகள் வரை 'விவேக

சிந்தாமணி'யில் சிறிது சிறிதாக எழுதி வெளியிட்டு வந்தார். இவர் 1898 இல் தமது 26 ஆவது வயதில், தமது நாவலின் முதற் பதிப்பு அச்சிடப்பட்டதற்குப் பின்னர் மறைந்தார்.

I. ''வித்யா பாநு'' (1893) : ஆசிரியர்— கே. என். ஈஸ்வரய்யா. இது பலதரப்பட்ட பொருள்களை உள்ளடக்கி கோயம்புத்தூரிலிருந்து 1 - 3 - 1893 முதல் வெளிவந்த மாத இதழ்.

II. வித்யா பாநு (1909) : ஆசிரியர்கள்— மு. ரா. கந்தசாமிக் கவிராயரும் ம. கோபால கிருஷ்ணய்யரும். இது மதுரை ஜடாமுனி கோயில் தெருவிலிருந்து வெளியிடப்பட்ட மாத இதழாகும். இதில்தான் திரு. சுப்பிரமணிய பாரதியாரின் கவிதை முதலில் வெளியிடப்பட்டுள்ளது!

''பொது நோக்காக ஆராயுங்கால் பாஷை என்பது ஒலிவடிவம் ஆதலாலும், அது குணங்கள் 24இல் ஒன்றாக லானும், ஆதி சிருஷ்டியில் சப்தமொன்றையே பரமாத்மா சிருஷ்டித்திருத்தல் வேண்டும்! அதன் உட் பிரிவான பாஷைகள் அவர் சிருஷ்டியின் அடங்கினவல்ல. அவ்விதம் சங்கேதம் செய்து கொண்டவர்கள் மனிதர்களேயாக வேண்டும் என்று நிச்சயிக்கலாம்.

''பாஷையென்பது மனிதர் ஏற்படுத்திக்கொண்ட ஓர் வகைச் சங்கேதமே யொழிய வேறில்லையென்று நிச்சயமாய்த் துணியலாம்!'' என்று திரு. வி. டி. சீனிவாச ஐயங்கார், 'பாஷையின் தோற்றம், என்ற கட்டுரையில் 'வித்யா பாநு' தொகுதி—5, பகுதி—3, 1914 பக்கம் 21 இல் எழுதியுள்ளார்.

''சர்வஜன நேசன்'' (1886) : ஆசிரியர்— ஏ. எல். சி. மொகையதீன். இது கொழும்புவிலிருந்து வெளியாகிய மாத இதழ். அளவு 34 × 22 செ. மீ. ஆண்டுக் கையொப்பம் ரூ. 3.

இது சாதி சமய பேதமின்றி எல்லா மக்களுக்கும் அறிவுண்டாகும் வகையில் நல்ல கட்டுரைகளை வெளியிட்டு, மக்களுக்கு நன்மையுண்டாக்க வேண்டும் என்பதனையே அடிப்படை நோக்கமாகக் கொண்டு வார இருமுறையாக நடத்தப்பட்ட இதழாகும்.

'இந்து சாதனம்' (1889): ஆசிரியர்—எஸ். ஆட்சிலிங்கம். இது யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையின் சார்பில் வெளியிடப்பட்ட வார இருமுறை இதழாகும். அளவு 58×44 செ. மீ. தனி இதழ் விலை 5 சதம்.

இது சைவ சமயக் கல்வியின் பொருட்டு உழைத்தது. என்றாலும், தமிழ் மக்களின் அரசியல் விடுதலை நாடியும் பாடுபட்டு வந்தது. இவ்விதழ் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து பாடுபட்டுத் தமிழ் மக்களிடையே விழிப்புண்டாக்கித் தனிச்சிறப்புப் பெற்று விளங்கி வருகிறது.

'சுதேச பரிபாலினி' (1904) : இது பி. இ. முதலியாரால் இரங்கூன் சுதேச பரிபாலினி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்ட நாளிதழ். அளவு 50×32 செ. மீ. தனி இதழ் ஓரணா. ஆண்டுக் கையொப்பம் உள்நாட்டுக்கு ரூ. 18; வெளிநாட்டிற்கு ரூ. 22; எட்டுப் பக்கங்கள் கொண்டது.

இவ்விதழ் பர்மிய நாட்டு நன்மையையே பெரிதாக நாடி அதற்குத் தக்கவாறு உள்நாட்டுச் செய்திகளையும் பிற நாட்டுச் செய்திகளையும் வெளியிட்டு வந்தது. இது நீண்ட காலம் நடந்துள்ளது.

'லோகோபகாரி' (1895) : ஆசிரியர்—வி. நடராஜ ஐயர் பி. ஏ. இவர் திருச்சியைச் சேர்ந்தவர். 1895 இல் சென்னையில் இது மாத இதழாகத் தொடங்கப்பட்டது. 1895 டிசம்பர் மாதத்தில் இவ்விதழ் மாதம் மும்முறையாகியது. இதனை எல்லோரும் விரும்பிப் படிக்கத் தொடங்கவே 1897 முதல் மாதம் நான்கு முறையாகி—வார இதழாக மாற்றப்பட்டது.

இதற்கு அப்போது 2500 கையொப்பக்காரர்கள் இருந்தனர். இதழ் முழுவதும் நற்கருத்துகள் நிறைந்து, இடையிடையே செய்திகளும் கலந்து வெளியாகியது. இவ்விதழைப் படிப்பவர் களுக்கு இனாமாகப் புத்தகம் ஒன்று வழங்கும் ஏற்பாட்டை முதன் முதலில் உண்டாக்கினவர் இவ்வாசிரியரே ஆவர்.

'ஞான சந்திரிகா' என்ற மாத இதழையும் வி. நடராஜ ஐயர் 1897 அக்டோபர், முதல் தொடங்கி வெளியிட்டு வந்தார். ஆனால், அது இடையில் நிறுத்தப்பட்டு விட்டது.

திரு. வி. நடராஜ ஐயருக்கு நல்ல நடை அமைந்திருந் தது. இவருடன் இணைந்து பணியாற்றிய பண்டித விசாலாட்சியம்மாள் 1902இல் 'லோகோபகாரி'க்குத் துணையாசிரியையாக ஆக்கப்பட்டார்! இதற்கு முன்பு தமிழ்ப் பெண்மணி எவரும் இதழாசிரியராக முன்வந்தது கிடை யாது! திருமதி விசாலாட்சியம்மையாருக்கும் ஏற்ற நடை யொன்று கைவரப் பெற்றிருந்தது! 1906 ஆம் ஆண்டில் 'லோகோபகாரி' இதழின் உரிமையை விசலாட்சியம்மை யாருக்குத் தந்து விட்டார் நடராஜ ஐயர்! இவ்விதழ் 11 ஆண்டுக்காலம் வரை மிகச் சிறப்பாக ஏற்றமுற நடைபெற்று வந்தது. இதனை 1908 இல் திரு. பி. வைத்திய நாத ஐயருக்கு ஆசிரியை விற்றுவிட்டார். அடுத்து, பண்டிதர் கோ. வடிவேலு செட்டியார் இவ்விதழின் ஆசிரியப் பொறுப் பேற்றார். பின்னர் இவர் இவ்விதழின் உரிமையாளராகவும் ஆனார். இதன் பின்னர் 'லோகோபகாரி' திரு. பரலி சு.நெல்லையப்பர் கைக்கு மாறியது! இதற்கடுத்து, திரு.சாமி சிதம்பரனார் இதற்கு ஆசிரியரானார். தமிழ் இதழ் உலகில் 'லோகோபகாரி'க்கு நல்லதோர் சிறப்பான இடமுண்டு.

பண்டித விசாலாட்சியம்மாள் 'லோகோபகாரி'யின் துணையாசிரியையாகவும் ஆசிரியையாகவும் அதன் உரிமை யாளராகவும் மாறித் தொண்டு புரிந்தார். தமிழ் இதழ் உலகில் இவருக்கு முன் இதழாசிரியையாகவும் உரிமையாள ராகவும் ஒருவரும் ஆகியது கிடையாது. அத்தகைய பெருமை யைப் பெற்ற முதல் பெண்மணி விசாலாட்சியம்மையாரே

ஆவர். இவர் 'லோகோபகாரி'யை விற்றுவிட்ட பின்னர், 'ஹிதகாரிணி' எனும் மாத இதழின் ஆசிரியையாக ஆனார். இவர் தமது 42 ஆம் வயதில் 25-10-1926இல் சென்னை இராயப் பேட்டையில் காலமானார்.

ஒரு 'லோகோப காரி' இதழைப் பெற்றுக் கொண்டால் உலகப் போக்குகள் அனைத்தையும் தெரிந்து கொள்ளலாம் என்றும், அந்த இதழுக்கு இணையாக வேறு எந்த இதழும் இருக்கவில்லை என்றும், அவ்விதழில் அழகிய இனிய கம்பீர மான நடை கையாளப்பட்டது என்றும் திரு. எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு சிறப்பித்துக் கூறுகிறார்.

'ஜந்து வர்த்தமான ஸாரம்' (Titbits of animal life) - *1900*. ஆசிரியர் - இராவ்சாகிப் பி. இராமச்சந்திர ராவ் பி. ஏ. இது சென்னைப் பட்டின ஜீவ ஹிம்சை நிவாரண சங்கத்தினரால் காலாண்டு இதழாக நடத்தப்பட்டு வந்தது.

ஆண்டு தோறும் 'ஜந்து விநோதக்' காட்சிகளும், வாயில்லா உயிர்களுக்காக மருத்துவச் சாலையும், நாய்களுக் கும் சக்தியற்ற கிழ உயிர்களுக்கும் விடுதிகளும் இச் சங்கத் தினரால் நடத்தி வரப்பட்டன.

''மனிதர்களுக்கு உடம்பில் ஏதேனும் ஒரு காயம் ஏற் பட்டால் எப்படிச் சுறுக்கென்று உறைக்கின்றதோ, அப்படியே வாயில்லா ஜந்துக்களுக்கும் உறைத்து நோயுண் டாகும். மேலும், மனிதரைப் பார்க்கிலும் மிருகங்களுக்கு அப்படி உபத்திரபடுத்தினால் நோய் இன்னும் அதிகமா கும். ஏனென்றால், அந்த நோயைப் பொறுத்துக் கொள்ளும் படியான மனவுறுதி அவைகளுக்கில்லையன்றோ? ஆகையால் அவைகள் விஷயத்தில் அதிகமான அன்பு பாராட்டி ஆதரிக்க வேண்டும்'' என்று பத்திராதிபர் எழுதியுள்ளார்.

பாட சாலைகளுக்கும் வீடுகளுக்கும் உபயோகப்படும் ''ஜீவகாருண்ய விளக்கம்'' மும்மாத இதழ் சம்புடம் 20,

இலக்கம்- 21. மாட்டுக்கு வரும் நோய்களைப் பற்றிய வர்த்த மானக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன.

சென்னை புறாப் பந்தயச் சங்கம் 1920 முதல் நடந்து வந்தது. முதல் பந்தயத்தில் வெற்றிப் பெற்ற புறாச் சொந்தக்காரர்களுக்கு வெள்ளிக் கிண்ணம் பரிசுத் தரப் பட்டது என்ற குறிப்பும் காணக் கிடைக்கின்றது!

இதற்குத் திரு. கே. செங்கலவராய் அய்யர் பி.ஏ.பி.எல். பத்திராசிரியராக இருந்தார். பின்னர் ராவ் சாகிப் ஜீ. வெங்கட்டராவ் எம்.ஏ.கெளரவ ஆசிரியரானார்.

இவ்விதழில் கால் நடைகளைப்பற்றிய பழமொழிகள் தொகுத்து வெளியிடப்பட்டன. சான்றாக : 'உழுகிறவன் இளப்பமானால், எருது மைத்துனன் முறை கொண்டாடும்' —பழமொழி.

மாதந் தோறும் ஜீவஹிம்சை (உயிர்க்குத் தொல்லைக் கொடுத்தோர்) செய்தோருள் தண்டனை அடைந்தவர்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது. இது கிரெளன் 1×9 அளவில் வெளியாகியது.

எழுவகை புறாக்கள் : 1. காட்டுப் புறா; 2. தவிட்டுப் புறா; 3. பச்சைப் புறா; 4. பெரும் புறா; 5. மணிப் புறா 6. மலைப் புறா; 7. மாடப் புறா.

''யதார்த்தவசனி'' (1900): ஆசிரியர் டி. வி. கோவிந்த சாமிப் பிள்ளை. இது 1900 முதல் தஞ்சாவூரில் தொடங்கி நடந்து வந்த வார இதழ். பின்பு இது கும்பகோணத்திற்கு மாற்றப்பட்டது. முதல் போருக்கு முன் காலணா விலை. இதன் நடை உயரிய தமிழ் நடை கொண்டதாக இருந்தது. இலக்கணப் பிழையின்றி எழுதப்படினும், 'கற்கண்டு போல் தித்திக்கும் இனிய நடை' என்று புகழப்பட்டது. மிக விறு விறுப்புடன் படிக்கும்படியாக 'யதார்த்த வசனி'யின் நடை அமைந்திருக்கும்!

''ஸ்ரீமான் கோவிந்தசாமிப்பிள்ளை எவருக்கும் அஞ்சாத சிங்கம். 'கோர்ட்'டு என்றளவில் நடுங்கி விடும் பத்திராசிரிய கோஷ்டியைச் சேர்ந்தவரல்லர். மிக்க தைரியசாலி சாமர்த்தியசாலி; வியவகார ஞானம் தெரிந்தவர்; எத்தகையோருக்கும் அஞ்சாதவர். ஹாஸ்ய ரசத்தில் மிக்க வல்லுநர். கௌரமான நடையில் விகடங்கள் எழுதுவதில் மிகவும் தேர்ந்தவர். இந்தியாவில் சந்தா இல்லாமல் வெளியாகும் பத்திரிகை 'யதார்த்தவசனி' ஒன்றே என்று சொல்லக்கூடிய வகையில் பின்னர் மாற்றியமைத்தார்.'' என்று அனுபவிக்க திரு. எஸ். ஜீ. இராமனுஜலு நாயுடு, தமது 'சென்று போன நாட்கள்' என்றும் கட்டுரைத் தொடரில் துல்லியமாக எழுதியுள்ளது இன்றும் நினைந்து பார்க்கத் தக்கதாகும். 'யதார்த்த வசனி' 27 ஆண்டுக் காலம் வரை தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது பெருமையுடன் குறிக்கத் தகுந்ததாகும்.

''ஜனானுகூலன்'' (1900): ஆசிரியர்—பி. வி. கிருஷ்ண தாஸ். இது தஞ்சாவூரில் காலணா விலையில் வெளியிடப்பட்ட வார இதழ். ஒரு வாரத்தின் முக்கிய செய்திகள் இதில் அடங்கியிருந்தது; தஞ்சாவூர் மாவட்டத்தின் செய்திகளும், மற்றும் உலக வர்த்தமானங்களும் நிறைந்திருக்கும். 'காலாணா பத்திரிகையாயினும் இதற்குமுன் நடுங்காத உத்தியோகஸ்தர்கள் அபூர்வம்! இது பொதுவாகத் தமிழ் நாட்டுக்கும் சிறப்பாகத் தஞ்சை ஜில்லாவுக்கும் மிகுந்த ஊழியம் செய்திருக்கின்றது.''—என்று திரு. எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு முன்கூறிய கட்டுரையில் குறித்துள்ளார்.

இது வாரந்தோறும் 2000 படிகள் அச்சாகியது; 1919 இல் போயர் யுத்தத்தின் போது 5000 படிகள் செலவாயின. ஐரோப்பிய முதல் யுத்தத்தின் போது காகிதத்தின் விலை ஒன்றுக்கு ஐந்து பங்காக ஏறிவிட்டது! ஆகவேதான், காலணா பத்திரிகையான 'ஜனானுகூலன்' விலை அரையணா

வாக உயர்த்தப்பட்டது. 'ஜனானுகூலன்' இதழ் 40 ஆண்டுக் காலமாக நடைப் பெற்றது. இதன் நடை எளிமையானது; விறுவிறுப்பானது.

''பெண்கல்வி'' (1900): ஆசிரியை — சகோதரி ஆர். தாயாரம்மா. மேலாளர் அ. சேஷாத்திரி சர்மா. சென்னை; மாத இதழ்; டிம்மி 1×8 அளவினது. படங்களுடன் கூடியது.

இதில் I. கீதத் திரட்டு; II. பிரபஞ்சப் போக்கு, ஸ்திரிகளின் அபிவிருத்தி, ஆங்கிலத்தின் கீழ்த் தமிழிலும் தலைப்புகள்; விருப்பமான பகுதிகளின் கீழ்—குழந்தைகள் விஷயம், கிரகத்தியக் குறிப்புகள், சமையலறையும் சமையலும், சட்டம், வித்யா விஷயம், ஸ்திரி பிரபஞ்சம், தமாஷ், மாச வர்த்தமானி; III. விசேஷ வியாசங்கள்; IV. விசேஷ குறிப்புகள் ஆகியவை அடங்கியிருந்தன.

''இம்மாதம் (1915மே) நெல்லூரில் இவ்வருஷத்திய மாகாண ஆசார சீர்திருத்த கான்பரன்ஸ் (Provincial social conference) வழக்கம் போல் நடந்தது. ஆசார சீர்திருத்தத் துக்குரிய பல தீர்மானங்கள் தீர்மானிக்கப்பட்டன. ருதுமதி விவாஹம் சட்டமாக்க வேண்டுமென்று மிஸ்டர் ஸ்ரீநிவாஸய் யங்கார் அவர்கள் வெகு பிரயாசைப் பட்டார். மிஸ்டர் சத்திய மூர்த்தி அவர்கள் ருதுமதி விவாஹம் சட்டமானால் சமூகத்துக்குப் பெருத்த தீங்கு விளைவிக்குமென்று பேசினார். கடைசியாக அந்தத் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. ஆசார சீர்திருத்தக்காரர்கள் சேர்ந்து ருதுமதி விவாஹத் தைப் பற்றிச் சீக்கிரம் ஒரு தீர்மானத்துக்கு வருவது நலம்.'' என்று 'பெண்கல்வி' 1915 மேஇதழில் காணப்படுகிறது.

''சாந்தியாவதற்கு முன் விதவையான பெண் இஷ்டப் பட்டால் வேத மந்திரத்தோடு மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ளலாமாம். சாந்தியானவளாயிருந்தால், வேத கர்மா இல்லாமல் புனர் விவாகம் செய்து கொள்ள

லாமாம்''—என்று 'நியூ இந்தியா' இதழில் ஒரு நிருபர் எழுதியுள்ளதை 'பெண் கல்வி' எடுத்து வெளியிட்டுள்ளது.

'பெண் கல்விக்கு' அவ்வந்திபுரம் இனாம்தார் ஸ்ரீ எஸ். அப்புசாமி அய்யரும், ஆண்டிப்பட்டி ஜமீன்தார் திரு. எஸ். ஆர். எம். எம். சி. டி. பெத்தாச்சி செட்டியாரும் காப்பாளராக இருந்தனர்.

திரு. சி. சுப்பிரமணிய பாரதியாரின், 'பெண்களின் சமத்துவக் கும்மி, அவரது மனைவி செல்லம்மாள் பெயரில் 'பெண்கல்வி' —1916 சனவரி இதழில் வெளியாகியது. 'சுதேச மித்திரன்' துணையாசிரியர் பண்டிட் வி. சுப்பிர மணிய ஐயரும், 'மதமும் சாஸ்திரமும்' என்பது பற்றி கட்டுரை எழுதியுள்ளது இதில் வெளிவந்துள்ளது. ''இந்துக் களின் தற்கால நிலைமையைக் கவனித்துப் பார்த்தால், தாறு மாறாகச் சீர்குலைந்து, அலங்கோலப்பட்டு இழந்து பாழாகிக் கிடக்கும் ஹிந்து மதம் என்னும் பழங் கோட்டையை அங்கே சிறிது இங்கே சிறிதாக எவ்வளவு ஒழுங்குப்படுத்தி முட்டுகள் கொடுத்துப் பழுது பார்த்தாலும் பயன்படாது. நாம் முன்னுக்கு வரவேண்டுமானால், இந்து மதத்தின் புராதன அஸ்திபாரங்களை மூடிக்கொண்டிருக்கும் யாவற்றையுமே, தயவு தாக்ஷயண்யமின்றி வெட்டித் தள்ளி ஒதுக்கி விடவேண்டும். நமது தற்கால அவசியத்துக்கும் உபயோகத்துக்கும் ஏற்றதாக சாதாரணமான புதுக் கட்டடம் ஒன்று காட்டுவதே உத்தமமென்றும் தோன்று கினறது".

''வர்ணாச்ரம தர்மத்தின் உட்கருத்து முற்றிலும் மறக்கப்பட்டு அதனால் இப்போது அநுகூலங்களின்றி இடையூறுகளும் கஷ்டங்களும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு வருகின்றன. அந்தத் தர்மத்தை அறவே கைவிட்டு விடுவதைத் தவிர வேறு வழியில்லை''— என்று டாக்டர் சர். எஸ். சுப்பிரமணிய அய்யர் பி. ஏ. எல். எல். டி. கே. சி. ஐ அவர்கள் 'இந்து மதச் சீர்திருத்தம்'

பற்றி, 'பெண்கல்வி' 1916 ஜூன் இதழில் எழுதியுள்ளது இன்று நினைந்து பார்க்கத்தக்கதாகும். இவரை 'மகான் மணி' ஐயர் என்று திரு. வி. க. தமது வாழ்க்கைக் குறிப்பு களில் புகழ்ந்து கூறியுள்ளார்.

''சக்கர வர்த்தினி"(1905): இது திரு.பி. வைத்திய நாத ஐயரால் முதலில் தொடங்கி நடத்தப்பட்டது. பின்னர் திரு. பி. எஸ். அப்புசாமி ஐயர் 1912 சனவரி மாதம் வரை இதை நடத்தி வந்தார். அடுத்து 'லோகோபகாரி'யை நடத்தி வருபவரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது. மாத இதழ்; டிம்மி 1 × 8 அளவினது.

இதில் கருணை அன்பு போன்ற பண்புகள் பற்றிய குறிப்புகளும், நாடகம் கதை கட்டுரைகள் தாங்கியும், கடைசியில் 'வர்த்தமான' என்பதன் கீழ் அம் மாதத்திய முக்கிய நிகழ்ச்சிகளின் தொகுப்பும் அடங்கியிருந்தன.

கட்டுரையின் பெயர் முதலிலும் அதை எழுதியவரின் பெயர் முடிவின் கீழ் வெளியிடப்பட்டது. தொடர்ச்சி 'வரும்' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

திரு. பெ. மாணிக்க முதலியார் பி. ஏ. என்பவர் இரங்கூனிலிருந்து விவேகானந்தரின் நற்கருத்துகளை ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்துத் திரட்டித் தந்து வந்தார். ஆண்டு முடிய மாதந்தோறும் இவ்விதழின் பக்க எண்கள் தொடர்ந்து வந்துள்ளன. 'சக்கர வர்த்தினி' இதழில் 'மணிவாசகன்' என்னும் தொடர் கதையைத் திரு. தெ. கிருஷ்ண சாமிப் பாவலர் தொகுதி —13, பகுதி 1—லிருந்து எழுதி வந்துள்ளார். வரகவி அ. சுப்பிரமணிய பாரதி இதில் நாடகம் கட்டுரை எழுதியுள்ளார். 'நாலடியார் வசன'மும் இதில் வெளிவந்தது.

''இந்திரனோ மாசற்றோன் (கௌதமன்) வெளியே செல்லக் கண்டான், ஆனந்தங்கொண்டான், மனம்பூரித்துக்

குதித்தான். தன் மதியை வியந்தான். விதியை வென்றேன் என நினைத்தான். மாதர் மணியை எவ்விதத்தும் அடைவேன் எனப் புகன்றான். மார் போடணைத்து மகிழும் வேளை வந்தது என மகிழ்ந்தான். கூத்தாடினான். 'மாந்தளிர் மேனியாளே! நுண்ணிடை ஏந்திழையே! உனக்கேற்ற நாயகன் இதோ காத்திருக்கிறேன் பெண்மணியே! பூங்குழல் மங்கையே! மின்னற் கொடியே இதோ வந்தேன். கிழவன் செல்லட்டும், செல்லட்டும். சற்றுப் பொறு. சற்றுப் பொறு. உனக்கு நல்ல காலம். இதோ வந்து விட்டது. உன் பாக்கியமே என் சிலாக்கியம்' என்று நினைத்து நினைத்துக் கூத்தாடினான்.''—'சக்கர வர்த்தினி'—1918 தொகுதி - 13 பகுதி 9 - 10 இல் காணப்படும் இப்பகுதி நல்ல உயிர்த் துடிப்புடன் விறுவிறுப்பாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

இச் 'சக்கரவர்த்தினி'—1916 ஆகஸ்டு செப்டம்பர் இதழ்களில் திரு. கோ. வடிவேலு செட்டியார் பத்திராதிபராகக் குறிப்பிடப்பட்டிருக்கிறார்.

'லோக மித்திரன்' (1913): ஆசிரியர் எம்.வி. கோவிந்தராஜ ஐயங்கார். இது நாமக்கல்லிலிருந்து வெளிவந்த மாத இதழ். டிம்மி 1×8 அளவினது. தனிப்படி நான்கணா. வருடம் ரூ. 3/-

இது கதை, கட்டுரை, சிறுவர் பக்கம், பெண்கள் பக்கம் போன்ற பகுதிகளைக் கொண்டிருந்தது.

இதில், ''இன்றைக்கு (1913) முன்னூறு வருடங்களுக்கு முன் போனிஷியர் (Phoenicians) இந்தியக் கப்பலையும் கப்பற்றொழிலையும் கண்டு ஆச்சரியப்பட்டிருக்கும்படி நம்மவர் கப்பற்றொழிலைச் செய்திருக்கின்றனர்'' என்று எழுதப்பட்டிருக்கின்றது.

மேலும், ''வெள்ளம் வருமுன் அணை போட்டுக் கொள்ளுங்கள்; வேலையில் வழி தேடுங்கள்; கொள்ளையை

திருத்தக் குறி சொல்லுங்கள்; ஏழைகள் முகத்தைப் பாருங்கள்; அவர்கள் தொழிலை ஆதரியுங்கள். பரச் சரக்கு களை நீக்குங்கள். பஞ்ச காலத்தைப் போக்குங்கள். உள்ளூர் சரக்குகளென்றால் உயர்த்தி வையுங்கள். வெளியூர்ச் சரக் கென்றால் பெயர்த்தெறியுங்கள். கண்ணைத் திறந்து பாருங்கள். காரணமின்னதெனத் தேறுங்கள்'' என்று 'லோக மித்திரன்'—1913 பிப்ரவரி இதழில் விறுவிறுப்பாக எழுதப்பட்டுள்ளது.

''இவர்களுக்கு (பிராமணப் பண்டிதர்களுக்கு) ஆரிய பாஷை என்று சொல்லப்படும் ஸம்ஸ்கிருதத்தில் மிகவும் பரிவும், த்ராவிட பாஷையென்று சொல்லப்படும் தமிழில் துவேஷமும் தம்மையறியாமலே ஏற்படுகின்றது! ஆகவே, இவர்கள் எழுதும்போதும் ஸம்ஸ்கிருதத்தை உயர்த்தியும் தமிழைத் தாழ்த்தியும் சொல்வது சகஜமாகிவிட்டது!

'தமிழ் ஸம்ஸ்கிருத வார்த்தையினின்றும் வந்தது' போன்ற வழுக்களை, இல்லாத காரணங்களை உற்பத்தி செய்து ருசுப்படுத்துவதனால் நாம் அடையும் பயனென்ன என்பது நமது விசாரணை.''—'தமிழும் சமஸ்கிருதக் கலப்பும்' வி. ராமலிங்கம் எழுதிய 'லோக மித்திரன்' ஆனந்த ஸ்ரீ சித்திரைமீ (1914) இதழில் காணப்படும் கட்டுரையின் ஒரு பகுதியாகும்.

''பொதுச் சங்கங்கட்கும் சமாஜங்கட்கும் மஹான் களுடைய படம் குறைந்த சார்ஜில் எழுதிக் கொடுக்க முடியும். மங்கிப் போன பழைய படங்களைப் புதியது போல் சீர்திருத்த முடியும். கறை பிடித்திருந்தாலாவது பூச்சியரித் திருந்தாலாவது அதைச் சீர்திருத்தி அழகு செய்து கொடுக்கப் படும்''— வி. ஆர். லிங்கம், ஆர்டிஸ்ட், நாமக்கல் என்ற விளம்பரமும், மேற்படி 'லோக மித்திர'னில் வெளியாகி யுள்ளது.

முன் குறிப்பிடப்பட்ட வி. ராமலிங்கமும், பின் குறிப் பிடப்பட்ட வி. ஆர். லிங்கம், ஆர்டிஸ்ட்,நாமக்கல் என்பதும்

என்ன தெரிவிக்கின்றன? அவ்விரண்டும் ஒரே பெயருடைய நாமக்கல் கவிஞர் வெ.இராமலிங்கம்பிள்ளை என்பதைதான். திரு. இராமலிங்கம் பிள்ளை முதலில் ஓவியராக வாழ்க்கையைத் தொடங்கியவர்; பின்னர் நாட்டுப்பற்றுக் காரணமாக விடுதலையார்வம் கொண்டு சிறை சென்றவர். 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் ஒன்று வருகுது' என்று பாடியவர்.

''செந்தமிழ்'' (1902) : இது சேதுபதி மன்னரால் தொடங்கிவைக்கப்பட்ட மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளியிடப்பட்டு வரும் இலக்கிய மாத இதழாகும். இதன் தொடக்ககால ஆசிரியராகத் திரு. ரா. இராகவய்யங்கார் இருந்தார். பல புகழ் பெற்ற ஆசிரியர்களால் ஆராய்ச்சி நிரம்பிய அரிய கட்டுரைகள் இதில் எழுதப்பட்டுள்ளன. இலக்கியப் பெட்டகம் என இவ்விதழ் போற்றப்பட்டு வருகிறது. கடந்த எண்பதாண்டுகளுக்கு மேல் இது தொடர்ந்து நடத்தப் பெற்று வருகிறது. 1903 ஆம் ஆண்டு முதல் இதன் தொகுதிகள் -1952, 1953, 1963 என்னும் மூன்று ஆண்டுகள் நீங்களாக - 'செந்தமிழ்'த் தொகுதிகள் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ள குறிப்பு, தனி வெளியீடாக 1981 இல் வெளியிடப்பட்டுள்ளது.

'தமிழ்ச் சங்கம்' பற்றி திரு. வா. குலாம் காதிறு நாவலரும், 'பாரத காலமும் தமிழரும்' பற்றி திரு. மு. இராகவைய்யங்காரும், 'சைவாதீனமுந் தமிழும்' பற்றி திரு. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளையும், 'குதிரை பற்றிய ஆராய்ச்சி' குறித்து திரு. சே. ரா. சுப்பிரமணிய கவிராயரும். 'நமது பூர்வ காலக் கப்பற்றொழில்' குறித்து 'ஒற்ற'னும், 'இலங்கைத் தமிழரசர்' குறித்துச் சுன்னாகம் அ. குமாரசாமிப் பிள்ளையும், 'யானை மலைக் காடர்' பற்றி திரு. சோமசுந்தர தேசிகரும், ''விநோத ரச மஞ்சரி'' பற்றி திரு. அ. குமாரசாமிப் பிள்ளையும், 'தமிழ் இயற்கை மொழி' என்பது பற்றி திரு. மாகறல் கார்த்திகேய முதலியாரும், 'தொல்காப்பிய ஆராய்ச்சி' பற்றி 'பெயர் விழையா'னும், '2000 ஆண்டுகட்கு முன்பிருந்த தமிழ் நாட்டெல்லை'

பற்றி சுவாமி ஞானப் பிரகாசரும், 'பண்டைக் கேரளத்தில் கூத்தும் இசையும்' பற்றி திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை யும், 'வட மொழியில் தமிழ்ச் சொற்கள்' பற்றி திரு. அ. சிதம்பரநாதச் செட்டியாரும், 'சாக்கைக் கூத்து' பற்றி திரு. மா. இராச மாணிக்கனாரும் எழுதியுள்ளவை குறிப் பிடத்தக்கனவாகும்.

''ஞான சாகரம்'' (1902) : இதுவே பின்னர் 'அறிவுக் கடல்' எனத் தனித் தமிழ்ப் பெயர் சூட்டப்பட்டது! ஆசிரியர் நாகை. வேதாசலம் பிள்ளை எனும் மறை மலை யடிகளாவர். சித்திரை முதல் பங்குனி வரை ஒரு மலராகக் கொண்டு வெளியிடப்பட்ட மாத இதழாகும். ஆண்டுக் கட்டணம் ரூ. 1 ஆக இருந்தது சில ஆண்டுகளுக்குள் ரூ. 3 ஆக உயர்த்தப்பட்டது. இறுதி ஆண்டுகளில் ரூ. 4 ஆக விலை வைக்கப்பட்டது.

மாதந்தோறும் வெளியான 'அறிவுக்கடல்' இதழ்கள் ஆண்டுகள் செல்லச் செல்ல இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையும், மூன்று மாதங்களுக்கு ஒரு முறையும் வெளிவரலா யிற்று. சில ஆண்டுகள் நின்றும் பின் தொடர்ந்தும் இடை யிட்டும் ஏறக்குறைய அடிகளின் வாழ்நாட்காலம் முழுவதும் நடைபெற்று வந்துள்ளது.

'அறிவுக் கடலில்' —உலகச் செய்திகளோ விளம்பரங் களோ வெளியிடப்படவில்லை! இதில் அடிகளாரின் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும், கதைகளும் மட்டுமே வெளி வந்துள்ளன.

இதற்கு - வட இந்தியா 'இலங்கை, மலாய் நாடு' பீஜித் தீவு, தென்னாப்பிரிக்கா, பர்மா முதலிய நாடுகளிலும் தமிழகத்திலும் இதனை விரும்பிவரவேற்ற கையொப்பக் காரர்கள் பரவி இருந்தனர்!

இவ்விதழின் எண்ணிக்கை தொடக்கத்தில் சில நூறாக வும், இடையில் பல நூறாகவும், இறுதிக் காலத்தில் இரு

நூற்றுக்கு உட்பட்டதாகவும் இருந்தது. எனினும் 'அறிவுக் கடல்' வெளிவந்து கொண்டிருந்தது!

மறைமலையடிகளார், தமக்குச் சொந்தமாகத் திருமுருகன் அச்சுக்கூடம் ஒன்றை வைத்திருந்தார். அதில் தம் மகன்களையும் அச்சுக்கோக்க பயிற்றுவித்தார்.

மேலும் மறைமலையடிகளால், "The Oriental Mystic Myna" எனும் ஆங்கில மாத இதழ் 1908 இல் தொடங்கி நடத்தப்பட்டு வந்தது. "The Ocean of Wisdom" என்ற பெயரில் 1935-ல் மற்றொரு ஆங்கில மாத இதழும் வெளியிடப்பட்டது. இவை சில ஆண்டுகள் வரை நடைபெற்றன. இவைகளுக்கு ஐரோப்பிய அமெரிக்க நாடுகளிலும் நல்ல வரவேற்பு இருந்தது; தமிழர் வாழும் பகுதிகளிலும் கையொப்பக்காரர்கள் இருந்தனர்.

'ஞான சாகரம்' முதலில் தனது பெயருக்குத் தகுந்தாற் போல் பதும்ம்—1, இதழ்—1 என்று வெளிவந்தது. பின்னர் 1923 இல் 'அறிவுக்கடலாக'ப் பெயர் மாற்றப்பட்டபின்பு திருமலர், இதழ் என்று வெளிவரலாயிற்று.

இதில், மக்கள் நூறாண்டு உயிர் வாழ்தல் எப்படி?—யோக நித்திரை—சிவஞான போத ஆராய்ச்சி—மனித வசியம்—மாணிக்க வாசகர் வரலாறு போன்ற மறைமலையடிகளின் நூல்களுக்கு வேண்டிய கட்டுரைகளும், அவரது சொற்பொழிவுகளுமே 'அறிவுக் கடலில்' தொடர்ந்து வெளிவந்தன. அவரது கொள்கையை வலியுறுத்தவே இம் மாத இதழ் நடத்தப்பட்டது.

"உழைப்பும் விடாமுயற்சியும் உடைய அறிவாளிகள் சிலர் ஆங்காங்கே தோன்றுவதனாலேயே மக்கள் வாழ்க்கையானது மேன்மேல் அறிவும் இன்பமுந் தருந்தகையதாய் நடைபெறுகின்றது" என்று மறைமலையடிகள் தமது அறிவுக் கடல் (1923) இதழில் கூறியுள்ளார்.

''ஆனந்த போதினி'' (1915) இதன் பதிப்பாளர் நா. முனிசாமி முதலியார்; ஆசிரியர் ஆரணி குப்புசாமி முதலியார். 1915 ஜூலையில் இம் மாத இதழைத் தொடங்கிவைத்தவர் கரபத்திர சுவாமிகள்.

தமிழ்ச் கல்வியின் வளர்ச்சியையும், நாட்டின் நன்மை யைக் கருதியும் இலௌகீக ஆன்மார்த்த ஞானங்களைப் போதிக்கவும், சிறுவர் பெண்கள் ஆகியோருக்கு நல்லறிவைக் கொளுத்தி நன்னடக்கையைப் போதிக்கக்கூடிய சிறப்பான செய்திகளையும், சிறுகதைகளையும், புது நாவல்களையும் வெளியிட்டு வந்த இதழாகும்.

இது 'ஆனந்தத்தையடையும் நெறியைப் போதிக்கும் சுவடி' ஆனந்தம் எட்டாகும். அவை: 'விடையானந்தம், வாசனானந்தம், பிரம்மானந்தம், ஆன்மானந்தம், முக்கியானந்தம், நிஜானந்தம், அத்துவிதானந்தம், வித்யானந்தம், ஞானந்தம்' என விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

''முற்காலத்தில் சுத்தத் தமிழாகவே வழங்கி வந்தார் களென்பது நூற்களால் விளங்குகிறது. வடமொழி எழுத்துக் களாகிய ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ முதலியவற்றை யுபயோகப் படுத்துவதும் தமிழுக்குக் குற்றமென்று கருதப்பட்டது.''— 'ஆனந்த போதினி' தொகுதி—1 பக். 15.

'ஆனந்த போதினி' முற்காலத்தில் சிறந்து விளங்கிய இலக்கிய மாத இதழாகும். இதற்கு திரு. ஆரணி குப்புசாமி முதலியார் ஆசிரியராக இருந்தார். இவர் தமிழையும் தத்துவத்தையும் நன்கு அறிந்தவர். தமிழில் 'நாவல்' வடிவம் எப்படியிருக்கும் என்று தமிழர் அறியாத காலத்தே, ஆங்கில நாவல்களை அழகுறமொழி பெயர்த்துக் கொடுத்து அதன் வடிவத்தையும் போக்கையும் நன்கறியச் செய்த பெருமை ஆரணியாரையே சாரும்! ஆங்கில நாவல்களை மொழி பெயர்க்கும் போதும் தழுவி எழுதும் போதும் நல்ல தமிழ் நடையிலே அவற்றை வெளிப்படுத்தியவர். வாயில் நுழை

யாத ஆங்கிலப் பெயர்களைத் தவிர்த்து. தமிழ் மக்களுக்கு தெரிந்த பெயர்களையே 'நாவல்'களில் நடமாட விட்டவர். ஆரணி குப்புசாமி முதலியார் ''கைவல்ய நவநீதம்'' என்னும் அத்வைத நூலுக்கு நல்ல உரையெழுதி வெளியிட்டுள்ளார். பல ஆங்கில நாவல்களைச் சுவை குன்றாமல் மொழி பெயர்த்துக் கொடுத்துள்ளார். தமிழில் நாவல் இலக்கியம் பரவ அடியெடுத்துக் கொடுத்தவர்களில் ஆரணியாரே முதன்மை யிடம் பெற்றுள்ளார். அவர் திடீரென்று மறைவுற்றபோது 'ஆனந்தபோதினி' அலுவலகம் அரை நாள் விடுமுறை கொடுத்து மூடப்பட்டது! 'ஆனந்த போதினி'யில் வித்யா இன்பத்தைப் பெருகச் செய்வதற்கான அமிர்த ஊற்றுகள் எப்போதும் மலிந்து போகும். விசேஷமாய் அனுபவ ஞானம் மேலோங்கி ஆனந்தங் கொள்ளச் செய்யும். அறிவிற்கு உணவான விஷயங்களும், தேச நலத்திற்கான நல்லுரைகளும் நிறைந்து ததும்பி மகிழ்வையூட்டும்'' - என்று திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு புகழ்ந்து கூறியுள்ளார்.

'ஆனந்த போதினி'யில் ரா. பி. சேதுப்பிள்ளை போன்ற தமிழறிஞர்கள் கட்டுரைகள் எழுதிச் சிறப்பித்துள்ளனர்; செம்பூர் ஆறுமுகஞ் சேர்வை, நாரண துரைக் கண்ணன் போன்றோர் ஆசிரியராக இருந்துள்ளனர். பொன்விழா நடைபெற இருக்கும் போது 'ஆனந்த போதினி' நிறுத்தப் பட்டது வருந்தற்குரியது. 'ஆனந்த போதினி' இதழ் மறைந்து விட்டாலும், 'ஆனந்த போதினி' பெயரில் பஞ்சாங்கம் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியாகி வந்துள்ளது!

''நவசக்தி'' (1921): ஆசிரியர் திரு. வி. கல்யாண சுந்தர முதலியார். இது சென்னை இராயப்பேட்டையிலிருந்து வெளியான மாத இதழ். இராயல் அளவினது.

இதில் (சிலம்பு—12, பரல்—29 1932 செப்டம்பர் இதழில்) திருமால் அருள்வேட்டல், சமரச சன்மார்க்கம் போதம், சிவநெறி விளக்கம், சுந்தர சுலோசனா, தமிழர்

கட்கு வேண்டுகோள். அரும் உலோகங்கள், மெய்யின்பத் துறைகள், இடியேறு போன்ற பகுதிகள் வெளியாயின.

''நவசக்தி'' பத்து வயது வரை பிறை என வளர்ந்து வந்தாள். அதன் பதினொராம் ஆண்டிலும் பன்னிரண்டாம் ஆண்டிலும் குழப்பம் ஏற்பட்டது. உப்புச் சத்தியாக்கிரகத் தின் போது 'நவசக்தி'க்கு ஈடுகாணம் கேட்கப்பட்டது. அது காரணமாக 'நவசக்தி' ஆறு மாதம் நிறுத்தப்பட்டது. பின்னர் மூன்று மாதம் வரை கஷ்ட நஷ்டங்கள் காரணமாக நிறுத்தப்பட்டது. அதன் பின்னர்தான் அது மாத இதழாக மாற்றப்பட்டது. எனத் திரு. வி. க. வே எழுதியுள்ளார்;

'நவசக்தி'சிலம்பு—20, பரல்—1,1941 சனவரிமுதல்டிம்மி 1×8 அளவாகியது. திருமதி இராதாம்பாளிடம் திரு. வி. க 'நவசக்தி'யை நடத்த அனுமதி கொடுத்தார். அடுத்து சக்தி தாச் சுப்பிரமணியம் அதற்கு ஆசிரியரானார். 'சிறுகதை எழுதுவது எப்படி?' என்பது பற்றி 'நவசக்தி'யில்(1944) எஸ். சுப்பிரமணியம் எம். ஏ. என்பவர் தொடர்ந்து எழுதி வந்தார். பின்னர் 'நவசக்தி' நிறுத்தப்பட்டுவிட்டது.

தொழிலாளர் கொடுத்த நன்கொடையை வைத்து சாது அச்சகம் காணப்பட்டது; 'நவசக்தி' தொடங்கப்பட்டது. திரு. வி.க.வின் பல நூல்கள் 'நவசக்தி'யில்தான் தொடர்ந்து எழுதப்பட்டன.

தமிழ் இதழியல் உலகிலும், அரசியல் உலகிலும் 'நவசக்தி' ஆற்றிலுள்ள பணி குறிப்பிடத்தகுந்ததாகும். ''ஊன்றிச் சிந்திக்க சிந்திக்க இடைக்கால இந்து மதமே இந்தியாவின் சுயராஜ்ய இழப்புக்குச் சிறந்த காரணம் என்பது புலனாகும். இந்து மதம் அடிமைக் குழியில் வீழ்ந்தமையால் இந்தியாவும் அடிமைக் குழியில் வீழலா யிற்று! அடிமைக் குழியில் வீழ்ந்த இந்தியா மீண்டும் அதினின்று எழ வேண்டுமானால் அஃது எம் முயற்சியில் தலைப்படுதல் வேண்டும்? தன்னை அடிமைப்படுத்திய சாதி, பெண்ணடிமை, தீண்டாமை முதலியவற்றைக்களையும்

முயற்சியில் அது தலைப்படுதல் வேண்டும்.'' என்று 'நவசக்தி'யின் இடியேறு பகுதியில் திரு. வி. க. குறித்திருப்பதை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும்!

''ஒற்றுமை''(1922): ஆசிரியர்-பி. வி. கண்ணன். இவர் இதன் சொந்தக்காரருமாயிருந்தார். சென்னை சைதாப்பேட்டையிலிருந்து வெளி வந்த மாத இதழ். கிரௌன் 1 × 16 அளவினது. இதற்கு எம். இ. வீரபாகு பிள்ளை பி. ஏ. 1924இல் ஆசிரியரானார். இது சிறப்புற நடைபெற்றது! 'ஒற்றுமை அலுவலகம்' என்ற பெயரில் நூல் வெளியீட்டகம் ஒன்று தொடர்ந்து நடைபெற்று வந்தது.

''புவன நண்பன்'' (1922): இது சென்னை சிந்தாதிரிப்பேட்டையிலிருந்து வெளியான மாத இதழ். இதில் முக்கிய சமாசாரக் குறிப்புகள், விகடங்கள், நாவல்கள் தொடர்ந்து வெளியிடப்பட்டன. ஆண்டுக்கு 12 அணா.

''தமிழ்ப் பொழில்''(1925): ஆசிரியர்-ரா.வேங்கடாசலம் பிள்ளை. தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் மாத வெளியீடாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டுவருகிறது. துணர்-1, மலர்-1. டிம்மி 1 × 8 அளவினது.

''தமிழ் வளர்ச்சியும் தமிழர் மேம்பாடும் பற்றிய அருமைக் கட்டுரைகளையே தன்னகத்து கொண்டு வரும். தமிழ்மொழி வரலாறு, தமிழர் வரலாறு, தமிழ்ச் சொல்லாக்கம், தமிழ் நூலாராய்ச்சி, பழந்தமிழ் நூல் வெளியீடு, அரிய நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்பு, தமிழ்த் தனிச் செய்யுட்கள் வெளியீடு, தமிழ் நூன் மதிப்புரை, தமிழ்ச் சங்க நிகழ்ச்சிகள் முதலாய எண்ணில் பல வழியானவையும், சிறந்த கட்டுரைகள் ஆங்கிலம், ஆரியம், தமிழ் மொழிகளில் வல்லார் பலராற் கற்றாரேயன்றிக் கற்பார்க்கும் பயனுறத்தக்க நெறியில் எழுதப் பெறும்'' என்று இதன் நோக்கங்கள் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளன.

இவ்விதழ் கால் நூற்றாண்டு விழா, அரை நூற்றாண்டு விழாக்களைக் கொண்டாடியும், சிறந்த நூல்களை வெளியிட்டும், தொடர்ந்து வெளியாகி வருகிறது. இதிலிருந்து வெளியான கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்து, கரந்தைத் தமிழ்ச் சங்கக் கட்டுரைகள் தொகுப்பென வெளியிடப் பட்டுள்ளன. தொடக்கத்தில் இதன் தனிப்படி விலை 4 அணா. ஆண்டுக் கட்டணம் ரூ. 2.

திரு. தி. வி. சதாசிவ பண்டாரத்தாரின் ''முதலாம் குலோத்துங்கச் சோழன்'' 'தமிழ் பொழி'லில்தான் தொடர்ச்சியாக வெளியாயிற்று. அவரது ''பாண்டியர் வரலாறு''ம் இவ்விதழில்தான் வெளிவந்தது.

மதுரை எரியுண்டது கி. பி. 144இல் என்பதும், கண்ணகிக்குக் கோயில் எடுத்தது கி. பி. 149இல் என்பதும் நிலைபெறுகின்றன என்று கணியன் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை 'பொழி'லில் எழுதிய கட்டுரை ஒன்றில் அறுதி யிட்டுக் கூறியுள்ளார்.

''தினசரன்'' (1924) : ஆசிரியர்—இராகவாச்சாரியார் இது சென்னைத் திருவல்லிக்கேணியிலிருந்து படங்களுடன் வெளியாகிய மாத இதழ். தனிப்படி 9 அணா. ஆண்டுக்கு ரூ. 5/- இதில், ''வடநாட்டில் பாடலிபுத்திரம் முதலிய நகரங்களில் சிலவற்றில் பூமியின் கீழ்த் தோண்டிப் பரிசோதிப்பது போலவே, நம் தமிழ் நாட்டிலும் சோதித்துப் பார்க்க இடமிருக்கிறது'' என்று காங்கிரசை ஆதரித்த இவ் விதழில் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது நினைந்து பார்க்கத் தக்கதாகும்!

''பால பாரதி'' (1924) : ஆசிரியர்-வ. வே. சு. ஐயர். இது சேரன்மாதேவி எனும் இடத்திலிருந்து வெளியாகிய இதழாகும். தனிப்படி 10 அணா; ஆண்டுக்கு ரூ. 5. இதில் பாரசீக சூபி சாதியின் அனுபவ மொழிகளையும், அரவிந்தரின் யோக சாதனைகளையும், மராட்டி மொழி

யிலிருந்து அசோகன் கதையையும் மொழி பெயர்த்து வெளி யிடப்பட்டது. திரு. வ. வே. சு. ஐயருக்குப் பலமொழிகள் தெரியும். அரசியலில் தீவிரக் கருத்தும், சமூகத்தில் வைதீகக் கருத்தும் கொண்டிருந்தவர். திருக்குறளை ஆங்கிலத்தில் அழகாக மொழி பெயர்த்தவர். நல்ல சிறு கதைகளை எழுதி யவர். தமிழில் எழுதும் போது தமிழ் மரபை மீறி அளவுக்கு மீறிய வட சொற்களைப் பயன்படுத்தியவர். ''பெரும்பாலும் நடைமுறையிலில்லாத 'வைத்யுதம்' போன்ற வடமொழி களைச் சேர்க்காமல் சாதாரணமான நடைமுறையில் இருக்கும் சொற்களையே பயன்படுத்தியிருந்தால், தமிழ் மக்கள் பலருக்கும் அறிய சுலபமாயிருக்கும் என்பதை ஆசிரியர் கவனிப்பாராக'' என்று 'தினகரன்'—1925 சனவரி இதழில் மதிப்புரையில் குறித்திருக்கிறது!

''செந்தமிழ்ச் செல்வி'' (1923): இது சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தால் சென்னையில் தொடங்கப்பட்ட இலக்கிய மாத இதழாகும். தொடக்க காலத்தில் இதற்கு இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்களாக இருந்தவர்கள்: மணி. திருநாவுக்கரசு முதலியார், பா. வே. மாணிக்க நாயக்கர், கா. சுப்பிரமணிய பிள்ளை, ச. சச்சிதானந்தம் பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், அ. சிதம்பரனார், மா. வே. நெல்லையப்ப பிள்ளை, மு. கதிரேச செட்டியார் ஆகிய பெரும் புலவர்களாவர். இதற்குப் பதிப்பாசிரியராக இருந்தவர் திரு. வ. சுப்பையா பிள்ளை. அச்சிட்டோர்— சி. முனுசாமி முதலியார்&சன்ஸ். தொகுதிக்குச் சிலம்பு என்றும் இதழுக்குப் பரல் என்றும் பெயர் கொடுக்கப்பட்டது.

'செந்தமிழ்ச் செல்வி'யின் முதலில் பரலில் தலையங்கம் 'நமது பத்திரிகை' என்றே குறிக்கப்பட்டுள்ளது. டிம்மி 1×8 அளவில் கடந்த 60 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிடப் பட்டு வருகிறது.

'செல்வி'யின் தொகுதிகள் நல்ல தாளில் அச்சிடப்பட்டு, ஒவ்வொரு ஆண்டிற்கும் தனித்தொடர் எண் தரப்பட்டு வரு

கின்றன. 1944 இல் வெள்ளைத் தாளில் 'செல்வி' இதழை அச்சிடக்கூடாது என்று அரசு ஆணையிட்டபோது, மட்டத் தாளில் வெளியிட விரும்பாமல் 1947 வரை மூன்றாண்டுகள் பதிப்பிக்காமலே பதிப்பாளர் நிறுத்திவைத்தனர்.

தமிழின் மேன்மையை நாடும் எந்தச் சிறப்பு நிகழ்ச்சிகள், இயக்கங்கள் நடை பெற்றாலும், அவற்றின் நாள் கிழமை ஆண்டு முதலிய விவரங்களுடன் செல்வியில் பதிவு செய்யப் பட்டுவிடும் வழக்கத்தைத் தொடர்ந்துமேற்கொண்டுள்ளனர் 'செல்வி'யின் பதிப்பாளர்கள்.

'செல்வி' கடந்த அறுபது ஆண்டுகளில் ஏறக்குறைய 40,000 பக்கங்களில் கட்டுரைகள், ஆராய்ச்சிகள், சுவை யூட்டும் செய்திகள், நிகழ்ச்சிகள் ஆகியன அடங்கி தமிழ் மணம் பரப்பி வருகின்றது! ஒரு 'செல்வி' இதழில் முற்கால நான்கணாவில் தமிழ் இடம் பெறாததைக் கண்டு வருந்தி, அவ்வாறு இடம்பெறச் செய்வது நியாயமானது என்று கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது! தமிழறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கரின் அறிவியல் பூர்வமான ஆங்கிலக் கட்டுரைகள், திரு. க. ப. சந்தோஷம் என்பவரால் தொடர்ந்து சீராக மொழி பெயர்க்கப்பட்டு வந்துள்ளது.

தமிழில் பல்வேறு துறைகளில் ஈடுபாடு கொண்டுள்ள புலமை மிக்கவர்களின் அரிய கட்டுரைகள், தட்டாமல் 'செல்வி'யில் வெளியிடப்பட்டு வருகின்றன. 'செல்வி'யின் தொகுதிகளை ஒரு முறை புரட்டிப்பார்த்தாலும், அதில் அடங்கியுள்ள பொருளுறையின் 'கனம்' நன்கு புலப்படாமல் போகாது! முதற் பரலின் இணைப்பாக 'இந்துமத அறநிலைய பாதுகாப்பு மசோதா'வை 16 பக்கங்கள் அப்படியே தமிழில் 'செல்வி'யில் வெளியிடப்பட்டுள்ளது குறிக்கத் தகுந்த தாகும்.

''பஞ்சாமிர்தம்'' (1924): ஆசிரியர்—அ. மாதவையா. மாத இதழ். டிம்மி 1×8 அளவினது. தலைப்பில் குடம்

அதன் முனையில் இலைகளின் மேல்—உண்மை, அறிவு, அன்பு, ஒற்றுமை, உழைப்பு எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. 90 பக்கங்கள்; 18 படங்களுடன் கூடியது.

''உண்மை, அன்பு, அறிவு, ஒற்றுமை, உழைப்பு என்னும் ஐந்தையும் கலந்ததாகும் இப் 'பஞ்சாமிர்தம்'. நாடெங்கும் ஆங்கு ஆங்கு முளைத்தெழும் தேசிய உணர்ச்சிப் பயிருக்கு இப்பத்திரிகை மூலமாய் ஊக்க உரமிட்டு, அறிவு நீர் பாய்ச்சி, அவ்வுணர்ச்சியைத் தழைத்தோங்கச் செய்ய முயல்வது முக்கியம்'' என்று இவ்விதழின் நோக்கம் குறிக்கப்பட்டுள்ளது.

முதல் எழுத்து சித்திர வேலைப்பாடுடன் கூடியிருந்தது. நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், 'பாரதியார் தமிழ்ப் புலமை'யைப் பற்றி முதலில் இவ்விதழில்தான் எழுதினார்.

சாக்கரதீஸ், அரசியல், குட்டிக் கதை, சர்வ சமய சமரச தர்சனி, கவிதை, கூட்டுறவு இயக்கம், மொழி பெயர்ப்பு, மதிப்புரை, பல துறைப் பொறுக்கு மணிகள், தொடர்கதை முதலியன இவ்விதழில் இடம் பெற்றிருந்தன.

'திருக்குறளில் கண்ட குடியரசு' பற்றி, எச். ஏ. பாப்புலி பாதிரியார் இதில் எழுதியுள்ளார். 'காந்தி புராணத்'தைப் பற்றி காந்தியடி யாரேனும் தமிழுலகேனும் உவக்கும் நூல் இதுவாகாது' என்று திரு. வே. நாராயணையர் இதில் மதிப்புரையில் குறித்திருக்கிறார்.

சேரன்மாதேவி குருகுலப் போராட்டத்தைக் குறித்து பட்டும் படாதுமாக 1925இல் திரு. மாதவையா 'பஞ்சாமிர்தத்'தில் எழுதியிருக்கிறார்.

''ஏல விவசாயி'' (1927): ஆசிரியர்—ரா. நாராயண சாமி. இது திருவாங்கூர் ஏல விவசாயிகள் சங்கத்திலிருந்து வெளி வந்த மாத இதழ். இது உத்தமபாளையத் (மதுரை மாவட்டம்) திலிருந்து வெளியிடப்பட்டது.

இதில் ஏல விவசாய சங்கங்களின் தீர்மானங்களும் அறிக்கைகளும் வெளியிடப்பட்டன. மேலும், தேவி குளம் வட்டாரத்தில் தமிழையும் நீதிமன்ற மொழிகளில் ஒன்றாக ஏற்படுத்தும்படி போராடுவதும், திருவாங்கூர் வரலாற்றை வெளியிடுவதும் இதன் நோக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளது.

இது நாட்டுப்பற்று, மொழிப்பற்று, சமயம், ஆசார சீர்திருத்தம், வாழ்க்கை வரலாறுகள், விவசாயம், கலை, ஆராய்ச்சி மேடை போன்ற தலைப்புகளைக் கொண்டிருந்தது.

''பாரதி'' (1930): ஆசிரியர் ரா. நாராயணசாமி. இதுவும் உத்தம பாளையத்திலிருந்து வெளியிடப்பட்ட மாத இதழாகும். இப்'பாரதி' இதழின் ஆசிரியர் 30-7-1930 இல் 107 ஆவது பிரிவின்படி கைது செய்யப்பட்டார். ஏழரை மாதம் வரை சிறைவைக்கப்பட்டிருந்தார். 1930 நவம்பரில் ''நவீனபாரதி'' வெளிவந்தது. இதற்குத் திரு. ரா. சுப்பிரமணியம் ஆசிரியரானார்.

''திருவிதாங்கூர் மேற்கு மலைத் தொடர்ச்சியில் ஏல மலைப் பிராந்தியத்தில் வாழும் மலைக் குடிகளில்—மன்னான், முதுவான், ஊராளி, பனியன், பண்டாரம் என ஐந்து முக்கிய வகுப்பினர்களுண்டு...

பாண்டி நாட்டில் படித்த ஒரு சிலர்க்கு மட்டும் கோவலன் சரிதை தெரிந்திருக்க, மன்னான் சாதியில் சிறு பிள்ளை முதற்கொண்டு கோவலன் பாட்டு படிப்பது கொண்டும், உருவம் பேச்சு நடையுடை பாவனைகளைக் கொண்டும், பாண்டி நாட்டிலிருந்தே இவண் (சேர நாட்டிற்கு) வந்திருக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்ளலாம்''—'பாரதி'-(1933—ஜூன், ஜூலை).

''அங்கி (சட்டை), சேலைக் கந்தை (துணி), பாறு (ஓடுகிறது), முகம்நோக்கு (கண்ணாடி), பெட்டகம் (பெட்டி)

சந்தம் (அழகு) கூரை (வீடு) என்பன போன்ற சொற்கள் அவர்களிடையே வழங்கப்படுகின்றன.

ஒவ்வொரு குடி நாட்டுக்கும் பூசாரி, காணிக்காரன் வலிய இளந்தாரி, இளவட்டம், தண்டல்காரன் என்று தேர்ந் தெடுக்கப்பட்ட ஐந்து முக்கிய குடிநாட்டுப் பொறுப்பாளி களுண்டு—ஷை" பக். 99.

''15 ஆண்டு கழியவும் ஒருவன் 'இளவட்ட' மென்று அழைக்கப்படுகிறான். அவன் பெண்ணைக் கூட்டவும் 'இளந் தாரி' யாகின்றான். வயது 40 ஆக அவன் 'குடியானவ'னா கிறான். 15-க்குள்ளான சிறார்கள் 'குஞ்சாளை' யென்று அழைக்கப்படுகின்றனர். அவர்களும் 40 வயதுக்கு மேல் போனவர்களும் பெண்களும் எந்தப் பொதுக் கடினமான வேலைக்கும் அழைக்கப்படுகிறார்களில்லை!''—ஷை. இதழ் ஷை பக்கம்.

இம்மலைவாழ் மக்களிடையே வழங்கும் சொற்களும், வயதிற்குத் தகுந்த் பெயர் சூட்டப்பட்டு அழைப்பதும், வயதான பிறகு கடின வேலைகள் தரப்படாமல் இருப்பதும் நாம் இன்று படித்தறிந்து இன்புறத்தக்கதாக உள்ளது.

''ஆனந்த விகடன்'' (1926) : ஆசிரியர் - பூதூர் வைத்திய நாதையர்; பதிப்பாளர் - இ. கோவிந்தராஜுலு நாயுடு, சென்னை; மாத இதழ். குலை- 1, காய் - 1.

''விகடம் என்றால் எத்தன்மையாளரும் சந்தோஷப் படுவார்கள். விகடம் என்றால் நாடக மேடைகளில் கோமாளிகள் பேசும் கூற்றை யொத்ததல்ல. விகடம் என்பது அறிவாளிகள், மன்னர்கள், மகான்கள் முதலிய யாவரும் மெச்சத்தக்கதாயிருத்தல் வேண்டும். விகடம் பேசுபவர் நன்றாய் வாசித்தவர்களாய் இருத்தல் வேண்டும்'' என்று ஆசிரியர் விகடம் என்பதற்கு வரையறை கூறுகிறார்.

''எழுத்தறிவித்தவன் எமனாகும்!

கல்விக்கழகு கைநாட்டுப் போடல்!

செல்வர்க்கழகு செருக்குக் கொள்ளல்!'' என்று இதில் விகடமாகச் சொற்றொடர்கள் தரப்பட்டுள்ளன!

விகடம், பாட்டு, கதை, கல்வி, தொழில், ஞானம் முதலியவை கொண்டு முதலில் வெளியிடப்பட்டு வந்தது. பின்னர் திரு. எஸ். எஸ். வாசன் 'ஆனந்த விகடன்' என்ற இதழை எழுத்தொன்றுக்கு ரூ. 20 பேசி, மொத்தத் தொகை கொடுத்து, வாங்கிக் கொண்டார். 1928 பிப்ரவரி முதல் தாமே இதற்கு ஆசிரியராகி நடத்திக் கொண்டு வந்தார். தாம் விற்பனை செய்து கொண்டு வந்த தொழிலுக்கு ஏற்ற சாதனமாக 'ஆனந்த விகட'னை அவர் பயன்படுத்திக் கொண்டார்! அப்போது ஓர் இதழின் விலை இரண்டணா ஆண்டுக்கு ரூ. 1.

தலையங்கம், கவிதை, காலத்தின் கோலம், விவசாயம், மாணவர் பகுதி, சுகாதாரம், பெண் மக்கட் பகுதி, விகடன் பேச்சு, நாவல் பகுதி (இந்திரகுமாரி) ஆகியன கொண்டு, 'விகடன்' புதிய ஏற்பாட்டில் வெளியாகியது.

''சுகத்தையும் சுதந்திரத்தையும் வேறுபடுத்த முடியாது; சுகத்திலே சுதந்திரத்தைக் காண வேண்டும். சுதந்திரத்திலே சுகத்தை அனுபவிக்க வேண்டும். சுகத்துக்கு அடிப்படை சுதந்திரம். சுதந்திரத்தின் முடிவு சுகம். சுகமும் சுதந்திரமும் இரட்டைப் பிறவிகள். பிரித்தால் இரண்டும் மாண்டு போகும்'' என்று திரு. வ. ரா. ('ஆனந்த விகடன்'—தொகுதி—3, பகுதி—3, பக்கம் 94) சுகத்தையும் சுதந்திரத்தையும் பின்னிப் பின்னி எழுதியுள்ளார்!

'சொற்புதுர்' (புதிர்க்குப் பதிலாக)—1928 பிப்ரவரி முதலே ஆ. வி. யில் தொடங்கப்பட்டது. 'ஏட்டிக்குப் போட்டி' என்ற கட்டுரையைத் திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி

(கல்கி) மேற்படி ஆண்டின் ஆகஸ்டு 16இல் ஆ. வி. யில்எழுதி யுள்ளார். இக் கட்டுரையே அவருக்குப் புகழ்த் தேடித் தந்தது; ஆ. வி. யில் அவரைத் தொடர்பு கொள்ளச் செய்து ஆசிரியராகத் துணை புரிந்தது!

'விகடன்' தொடங்கி 10 மாதத்திற்குள் விளம்பரங்கள் நீக்கி 64 பக்கங்கள் கொண்டு ஆ. வி. செல்வாக்கைப் பெற லாயிற்று. 'ஆனந்த விகடன்' ஆண்டு மலரை நான்கணா விலைக்கு முதன் முதலாக வெளியிட்டனர். ஆனந்த விகடன் தீபாவளி மலர் 1932 முதல் வெளியிடப்பட்டு வருகிறது!

'ஆனந்த விகடன்' தலைப்பில் உச்சிக்குடுமியுள்ள உருவ மும், 'எல்லோரும் இன்புற்றிருப்பதன்றி வேறொன்று மறியேன் பராபரமே' என்ற தாயுமானவர் வாக்குக் கொண்டும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றது.

'ஆனந்த விகடன்' அலுவலகம் முதலில் தங்கசாலையில் இருந்தது. பின்னர் பிராட்வேவிற்கு மாறியது; அடுத்து, ஆழ்வார்பேட்டைக்குச் சென்றது; பின்னர் மலைச்சாலையில் 'இந்து அலுவலகம்' இருந்த இடத்திற்கு வந்தது; இப்போது அண்ணாசாலையில் உள்ள சொந்தக் கட்டிடத்திற்குக் குடியேறியுள்ளது.

'ஆனந்த விகட'னுக்குக் 'கல்கியும்', 'துமில'னும் 'தேவ' னும், 'சாவி'யும், 'மணிய'னும் ஆசிரியர்களாகப் பொறுப் பேற்று வளர்த்து வந்துள்ளனர். அது 'அம்மாமி' நடையைப் பயன்படுத்துவதைப் படிப்படையாகக் குறைத்துக் கொண்டு, எல்லா வகுப்பினரும் புரிந்து கொள்ளக் கூடிய பொது நடையில் அதில் இப்போது எழுதப்பட்டு வருகிறது.

கருத்துப்படம் வெளியிடுவதும், நகைச்சுவை துணுக்கு களை அள்ளி வீசுவதும், சுவையாக எழுதிச் சிந்திக்க வைப்பதும், 'ஆனந்தவிகட'னின் தொழிலாக மாறிவிட்டது

'ஆனந்த விகடன்' இதற்கு முன்பும் ஈடுகானம் (ஜாமீன்) கட்டியுள்ளது! ''சென்னை அரசாங்கத்தார் தயவு கூர்ந்து 'ஆனந்த விகடன்' அச்சாபீஸ் நடத்துவதற்காக அவசர சட்டத்தின்படி ஆயிரம் ரூபாய் ஜாமீன் கோரியிருக்கிறார்கள். சில காலம் ஜாமீன் கட்டாததால் 'விகடன்' நிறுத்தி வைக்கப் பட்டிருந்தது. (1930 ஜூன் மீ 7-மாலை-5, மணி 5) வரை இதற்குப் பின்னர் 1930 ஸு செப்டம்பர் மீ இதழ் (மாலை - 5, மணி - 6, 8) வெளி வந்துள்ளது.

1930ஆம் ஆண்டின் புதிய அவசர அச்சுச் சட்டப்படி விகடனிடம் ரூ 1,000 ஈடுகானம் கோரப்பட்டது. பிறகு, ஈடுகானம் கட்டி மேற்படி செப்டம்பர் மாத முதல் 'விகடன்' வெளிவரத் தொடங்கியது.

சில கருத்துப் படங்கள் (கார்ட்டூன்) 'வீக்லி ஏரால்டு' வி லிருந்து 'ஆனந்த விகட'னில் எடுத்துப் போடப்பட்டுள்ளன. ஆனந்த விகடனில், 'ஆடல் பாட'லையும் 'அப்பளாக் கச்சேரி' யையும், 'அரசியல் சரடை'யும் விரும்பிப் படித்தவர்கள் உண்டு. கல்கியின் 'கள்வனும் காதலியும்', 'தியாக பூமி'யும் போன்ற நவீனங்கள் தொடர்கதைகளாக 'விகட'னில் வந்தவையேயாகும். மேலும், அவரது பல சிறு கதைகளும், பயணக் கட்டுரைகளும், இசைக் கச்சேரிகளின் திறனாய்வு களும்கூட ஆ. வி. யில் முதலில் வெளி வந்தவைகளே ஆகும். இதே போல் தேவன், சாவி, மணியன் பேரில் வெளியான நூல்களும் முதலில் ஆ.வி.யில் வெளியிடப்பட்டவையே! நாடோடியின் நகைச் சுவை கட்டுரைகளும், எஸ்.வி.வி.யின் வாழ்க்கை அனுபவ சித்தரிப்புகளும், டி. கே. சி. யின் ராமாயண சித்திரக் காட்சிகளும், பி. ஸ்ரீ. யின் சைவ, வைணவ இலக்கியக் கட்டுரைகளும் ஆ. வி. யில் முதலில் மலர்ந்தவையே ஆகும்.

'ஆனந்த விகட'னில் திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) ஆசிரியராக இருந்தபோது, தனிப்பட்டோர் பங்கு கொள்ளும் அறப்போரில் கலந்து கொள்ள அனுமதி கேட்டார். தேசிய வாதியும் முதலாளியுமான திரு. எஸ். எஸ். வாசன் அதற்கு

சம்மதிக்கவில்லை! 'கல்கி' துணிந்து சிறை சென்றார்; 6மாத கடுங்காவல் தண்டனை பெற்று, ஆ.வி.யிலிருந்து பிரிந்து 'கல்கி' இதழைத் தொடங்கி நடத்தினார்.

'ஆனந்த விகடன்' 29-3-87 இல் வெளியிடப்பட்ட அட்டைப்பட கேலிச் சித்திரம், தமிழக அமைச்சர்களையும் சட்டமன்ற உறுப்பினர்களையும் கீழ்த் தரமாகச் சித்தரித்தது என்று தமிழகச் சட்டமன்றத் தலைவர் தீர்மானித்து, ஆ.வி ஆசிரியரைச் சிறைத் தண்டனை அனுபவிக்கும்படி தீர்ப்பளித் தார். அதன்படி ஆ. வி. ஆசிரியர் திரு. பாலசுப்பிரமணியம் மூன்று மாத கடுங்காவல் தண்டனையை ஏற்றுச் சிறையிலிருந் தார். இக்கொடுமையான தீர்ப்பையும் தண்டனையையும் எதிர்த்து இந்திய இதழுலகமே கொதித்து எழுந்து கண்டித் தது! அரசியல் தலைவர்கள் கட்சி வேறுபாடின்றி தமது கண்டனத்தைத் தெரிவித்தனர். மூன்று மாத கடுங் காவல் தண்டனை மூன்று நாட்களுக்குள் தவிடு பொடியாகி விட்டது! முன்னாள் ஆ. வி. ஆசிரியர் திரு. எஸ்.எஸ். வாசன் சிறைபடாத குறையை, அவரது மகனான திரு. பாலசுப்பிர மணியம், தண்டனையை —மூன்று கறுப்பு நாட்களை —சிறை யில் அனுபவித்ததன் மூலம் போக்கி விட்டார்!

''ஆனந்த குணபோதினி'' (1926): ஆசிரியர்— எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு. வெளியிட்டவர்: தி. இராஜ கோபால் முதலியார். மாத இதழ். டிம்மி 1×8 அளவினது. சென்னையிலிருந்து வெளியாகியது.

அறிவை விளக்கி உற்சாகத்தைத் தந்துவந்த மாத இதழ். ''நமது செந்தமிழ் நாட்டில் பத்திரிகைகளே, இல்லாத ஆரம்ப காலத்தில் 'ஜநவிநோதினி', 'தினவர்த்தமானி' முதலிய பத்திரிகைகள் தோன்றி நம்மவர்க்கு எவ்வளவோ நன்மையைச்செய்திருக்கின்றன'' என 'ஆனந்தகுணபோதினி, கமலம்-1 இதழ்-1இல் (1926ஏப்ரல்) எழுதப்பட்டுள்ளது.

'தானே நூல் எழுதப் பழகும் வழி' போன்ற கட்டுரை களும், சிறு மணித்திரள், பழமொழிக் குறிப்புகள், 'பரமசிவம்

படியளக்கிற கொள்ளை' விகடப் பிரதாபன், பெண்கள் பக்கம், வாழ்க்கை வரலாறு (எமிலிஸோலா), விநோதம், சென்ற மாதம், பத்திரிகா சாரம், நாநா விஷயக் குறிப்புகள் ஆகியன இவ்விதழில் இடம் பெற்றிருந்தன.

''ஸ்ரீமான் எஸ். ஜி. இராமநுஜலு நாயுடு பத்திரிகைத் தொழிலில் நீண்ட அனுபவம் பெற்றவர்'' என்று''லோகோபகாரி'' இதழில் குறிக்கப்பட்டுள்ளது.

''தமிழ் நாட்டிலே ஒரு பிறவி ஆசிரியனைக் காண வேண்டுமானால் அவர் திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடேயாகும். இவரது எழுதுகோல் அதியற்புதமான தொன்றாகும். முத்துப் போன்ற எழுத்துக்களையும், வீரஞ் செறிந்த சொற்களையும், சுவைபொருந்திய நடையையும், இனிமைநிறைந்த தமிழையும் சொரியும் சித்திரக்கோல் திரு. இராமநுஜலு ஒருவர்க்கே உண்டு. உலகானுபவத்தை—தமிழ் இலக்கியத் தேனை—அன்பின் ரசம் சொட்டும் அழகிய எழுத்தை—காதற் சுவை கொண்ட கன்னல் மொழிகளைக் காண வேண்டுமானால் திரு. நாயுடுவால் ஆக்கப்பட்ட நூல்களில் காணலாம்'' என்று ''குடியரசு'' இதழில் திரு.எஸ்.ஜி. இராமநுஜலு நாயுடுவின் எழுத்தைப் பற்றித் திறனாய்வு செய்யப்பட்டுள்ளது.

'சென்று போன நாட்கள்' என்ற தொடர் கட்டுரையைத் திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, 'ஆனந்த குண போதினி' (மலர்—1, இதழ்—2 1926 மே 14) முதல் எழுதியுள்ளார். இத் தொடர் கட்டுரை முற்கால இதழாசிரியர்களின் குண நலன்களையும் அவர் தம் எழுத்தாற்றலையும் அறிய பெரிதும் உதவக் கூடியதாக உள்ளது. இவர் திருவரங்கத்திலிருந்து ''பிரஜாநுகூலன்'' எனும் இதழையும் நடத்தியுள்ளார்.

1. 'திருச்சி நேசன்'' (1902): ஆசிரியர் மருதூர் எம். டி. சுப்பிரமணிய பிள்ளை. இது மாதமிரு முறை இதழ். இதன் நடை கம்பீரமாக இருந்தது. ஆண்டார் தெரு,

தெப்பக்குளம், திருச்சியிலிருந்து வெளியாகியது. ஆண்டு ரூ. 3. "தமிழ் நாட்டில் தமிழ் பேசும் தாய் வயிற்றில் பிறந்த ஒருவர், தமிழ்ப் படித்தால் அகௌரவமெனக் கருதுவது அன்னோரின் மனோபாவம் எவ்வளவு கீழ் நோக்கிச் சென்றிருக்கிறதென்பதையே விளக்குகிறது. ஐயோ! எந்த நாட்டிலும் இத்தகைய பரிதாப நிலை இருக்காது." என்று 1902-லே சுட்டப்பட்டுள்ளது.

11. "திருச்சி நேயன்" (1926): ஆசிரியர்கள்—பார்த்தசாரதி ஸகன்&ஏ.ஆர்.இராஜகோபாலன். இது வார இதழ். திருச்சி.

"கலைமகள்" (1936) : இது தோன்றும் போது நிர்வாக ஆசிரியராக இருந்தவர் திரு. டி. எஸ். இராமச் சந்திர ஐயர். கௌரவ ஆசிரியர்கள்: திருவாளர்கள் எஸ். அனவிரத நாயகம் பிள்ளை, டி. கே. சிதம்பரநாத முதலியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. என். அப்புசாமி ஐயர், மு. இராகவையங்கார், கே. வி. கிருஷ்ணசாமி ஐயர். அழகான அச்சு, கலைப் பண்பு நிறைந்த வடிவம் ஆகிய வற்றில் சிறந்து வெளிவந்த "திரிவேணி" என்ற ஆங்கில காலாண்டு இதழை அடியொற்றி 'கலைமகள்' இதழைத் தொடங்கினர்.

இலக்கியம், நற்கலை, சாஸ்திரம், சரித்திரம் மாதர் பகுதி, சிறுவர் பகுதி, மதிப்புரை, குறிப்பும் திரட்டும் என்ற பல பகுதிகளை அமைக்க வேண்டுமென்று திட்டமிட்டு, மொத்தம் 22 'விஷயங்கள்' தாங்கி முதல் இதழ் உருவா யிற்று. பளபளப்பான வெள்ளைத் தாளில் 108 பக்கங் களில் படங்களுடன் இராயல் அளவில் ஆறணா விலையில் புத்தகம் போல் வெளியிடப்பட்டது; ஆண்டுக் கட்டணம் ரூ. நான்கு. 1944 முதல் பத்திரிகைத் தாளிலே அச்சிடலா னார்கள். 1943 முதல் இதழின் விலை எட்டணாவாயிற்று.

'கலைமகள்' ஒவ்வொரு ஆண்டிலும் ஆறு மாதத்திற்கு ஒரு தொகுதியாக இரண்டு தொகுதிகளைத் தொடர்ந்து

பக்கமிட்டு வெளியிடப்பட்டு வருகிறது. முதல் 12 ஆண்டுகள் வரையில் 'கலைமகள்' இழப்பிலே நடத்தப்பட்டு வந்தது. பிறகு தான் மெல்ல மெல்ல வருவாயைத் தரத்தக்கதாக மாறியது.

1936ஆம் ஆண்டில் சிறுகதைகளுடன் ''விஷவிருக்ஷம்'' என்னும் வங்க மொழி பெயர்ப்புத் தொடர்கதையும் வெளியிடப்பட்டது. தொடர்கதைகளும், சிறுகதைகளும் 'கலைமக'ளில் மிகுதியாகி, 'கதைமகளாக' மதிக்கப்பட்டது.

சிறுகதைக்கும் தொடர்கதைக்கும் பரிசு தரும் திட்டமும் மேற்கொள்ளப்பட்டது. எங்கள் ஊர், எங்கள் தொழில், புதுமைப் பெண், முதல் வேலை, கதையின் கதை, இரட்டை மணிமாலை, இரட்டைக் கதைகள், கிழமைக் கதைகள் போன்ற புதிய முயற்சிகளும் தொடங்கப்பட்டன.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் 'கலைமக'ளுக்கு உற்ற உதவியாக இருந்தார். அவரது உரைநடைப் படைப்புகள் 'கலைமக'ளில் தொடர்ந்து வெளிவந்தன. அவர் கண்ட கருத்துகளும், கேட்ட செய்திகளும், அனுபவித்த அனுபவங்களும், பழகிய மனிதர்களும், பெற்ற பேறுகளும்'கண்டதும் கேட்டதும்' ஆக,'நினைவு மஞ்சரி' ஆக பிற்காலத்தில் நூல் வடிவம் பெற்றன.

''பாட்டுக்கொரு புலவன் பாரதியடா'' என்ற புகழ் பெற்ற பாடல், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை எழுதியது, 'கலைமகள்' 1936 சனவரி இதழில் வெளியானது. சிறுகதைகளைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை திரு. சு. வையாபுரிப் பிள்ளை தொடக்கத்தில் ஏற்றிருந்தார், ஆராய்ச்சிக் கட்டுரைகளும் எழுதினார். 'கலைமக'ளுக்குத் தொடக்கத்திலிருந்து இன்று வரை திரு. கி. வா. ஜகன்னாதனே பொறுப்பாசிரியராக இருந்து வருகிறார். திரு. செல்லம் ஐயர், திரு. கணபதி ஐயர் போன்றோர் துணையாசிரியர்களாகப் பணி புரிந்துள்ளனர். ஓவியர் சங்கரும் இங்கு பணியாற்றியவரே!

''தமிழ் நாடு'' (1927) : ஆசிரியர்—பி. வரதராஜுலு நாயுடு. இது முதலில் சேலத்திலிருந்து வார இதழாகத் தொடங்கப்பட்டது. பின்னர் சென்னைக்கு மாறுதலாகியது. அளவு 56×43 செ. மீ. 8 பக்கங்கள். தனி இதழ் விலை ஓரணா.

இது நாட்டு விடுதலையை நோக்கமாகக் கொண்டு உழைத்த இதழ். 'தமிழ் நாடு' —நாளேடாக வளர்ச்சிப் பெற்ற பின்னர் உலகச் செய்திகளையும், வெளிநாட்டு அரசியல் தலைவர்களின் பேச்சு செயல் முதலியவைகளையும், நாட்டு மக்கள் நன்கு உணர்ந்து கொள்ளும் வகையில் வெளியிட்டு வந்தது. தமிழ் மக்கள் விரும்பிய செய்திகளும் இதில் வெளியிடப்பட்டன. இவ்விதழ் வெளிவரத் தொடங்கிய பின்னர், 'சுதேசமித்திர'னின் விற்பனை சிறிது குறையலாயிற்று!

'தமிழ் நாடு' இதழில் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் போன்றவர் துணையாசிரியராக இருந்தனர். திரு. ம. பொ. சி அப்போது 'தமிழ் நாடு' அச்சகத்தில் அச்சுக் கோப்பவராகப் பணி புரிந்தார்.

'பத்திரிகைகளின் கடமை' என்ற தலையங்கம் 'தமிழ் நாடு' இதழின் வாரப் பதிப்பு (10-4-1931, பக்கம் 12) இல் காணப்படும் முக்கிய பகுதி:

''பத்திராதிபர்கள் பொறுப்பு வெகு கஷ்டமானது. பத்திராதிபர்களுக்கு அளவற்ற ஆண்மை வேண்டும். அதற்குத் தக்க அடக்கமும் வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டும். உற்றார் உறவினர் தாட்சண்யங்களைப் பொருட்படுத்தலாகாது. ஜனங்களின் தவறுகளை ஆணித் தரமாக எடுத்துக்காட்ட வேண்டும். அவர்களுடைய ஆத்திரத்தைக் கண்டு அஞ்சலாகாது. ஈசுவர சேவையை விடத் தேச சேவை உயர்ந்த தென்பதே நமது அபிப்பிராயம்!

நெஞ்சில் பேத புத்தியும் கையில் தேசீயக் கொடியும் பிடித்த பத்திராதிபர்களின் சேவை, கட்கத்தில் கன்னக் கோலும் கையில் ஜபமாலையும் வைத்தவர் செய்யும் பக்தியைப் போன்றதாகும்!''

திரு. வரதராஜுலு நாயுடு காங்கிரஸ் கட்சியை ஆதரித்து வரும் வரையில் 'தமிழ் நாடு' செல்வாக்குடன் திகழ்ந்தது. அவர் கட்சி மாறிய பின்பு அதன் வளர்ச்சி தடைபட்டது, பின்னர் நிறுத்தப்பட்டுவிட்டது.

*1918* இல் மதுரையில் 'ஆர்வி மில்', 'கோரல் மில்' ஆகியவற்றில் வேலை நிறுத்தம் நடைபெற்ற போது, வைகை ஆற்றங்கரையில் டாக்டர் நாயுடு, வேலை நிறுத்தத்தை ஆதரித்துப் பேசினார்; தமது இதழில் எழுதினார். இதற்காகத் தாய் மொழிச் சட்ட 3-ம் பிரிவின்படி நாயுடுவுக்குத் தண்டனை அளிக்கப்பட்டது. திரு. வரதராஜுலு நாயுடுவின் சார்பில் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் வாதாடினார். 'தமிழ் நாடு' இதழைத் தொடர்ந்து நடத்தி வந்த போது திரு. நாயுடு பெருந்துன்பத்திற்கு உள்ளானார். முதலாளி தொழிலாளி தகராறு முற்றியது; சரியாகச் சம்பளம் தரவில்லை என்று!

'தமிழ் நாடு' இதழில் அக்காலத்து முறைபடி ஆங்கிலத்தில் தலைப்பு தரப்பட்டிருக்கும்; எளிய தமிழ் நடை கையாளப்பட்டு வந்தது. திரு. நாயுடு சட்ட பிடிப்புக்கு உள்ளாகமலே மிகவும் விழிப்பாகவும் நாசூக்காகவும் எழுதுவார்; பேசுவார்! தமிழ் நாடு அலுவலகம் சென்னையில் எர்ர பாலு செட்டித் தெரு முனையில், பிராட்வேயில் தாம்ஸன் கோ. பக்கத்தில் இருந்தது.

''கலாநிலையம்'' (*1928*): ஆசிரியர்—ஏ. ஆர். சேஷாசலம். இது சென்னை புரசைவாக்கத்திலிருந்து வியாழன் தோறும் வெளி வந்த வார இதழ். இது 'பூல்ஸ்காப்' அளவினது. ஆண்டு ரூ. 7.5.

''தமிழ் இலக்கிய இலக்கணங்களில் மிக்க தேர்ச்சி பெற்ற அறிஞர் பற்பலர் இந்த நாட்டில் பலவிடங்களில் இருக்கின்றனர். அவர்களுள் ஒருவருக்கு ஒருவர் தொடர் பின்றி, அவரவர் ஆய்ந்துணர்ந்த அரும் பொருள்கள் மற்றவர்க்கு எட்டாமல் போக நேர்வது இக்காலத் தமிழின் நிலைக்கு உள்ள ஒரு பெரும் குறை.

சுவைப் பொருளை உண்போர் விருந்தோடு உண்ண வேண்டுவர்.

கவிகளில் அவரவர் கண்ட நயமும், பயனும் கூறுவோர் கேட்போர் இருவருக்கும் இன்பம் அளிக்கும் தன்மையன. ஆதலால், அனையவர் அனைவரும் தம்முள் அளவளாவி மகிழ்வதற்கு இப்பத்திரிகை புதியதோர் தூதுமாய் உலவும்.

இப்பத்திரிகையில் 'தமிழ்ப் பாடம்' என்னும் தலைப்பின் கீழ் வாரந்தோறும் பாடங்கள் ஓதி வருவோம். இந்த முறையில் தொடர்ச்சியாய்ச் சிறிது கவனத்தோடும் படித்து வருபவர் எவர்க்கும் இரண்டொரு வருடங்களில் 'கம்பராமாயணம்', 'சிந்தாமணி' போன்ற நூல்களும் எளிதில் பொருள் விளங்காமற் போகா என்பது நிச்சயம்'' என்று மிகத் தெளிவாகத் தமிழ் இன்பத்தைத் துய்க்க அன்பு அழைப்பு விடுத்துள்ளது 'கலா நிலைய' இதழ்.

இவ்வன்பு அழைப்பை ஏற்றுப் பல்லோர் இவ்விதழை விரும்பி வாங்கித் தொடர்ச்சியாகப் படித்துச் சுவைத்து இன்புற்று, 'கலாநிலைய' இதழ்களைப் பேணிக் காத்துத் தமிழில் தேர்ச்சி பெற்றவர்களாக மாறினர்! தமிழ் இலக்கியப் பாடம் சொல்லவும் திறன் பெற்றனர் என்பதையும் நன்றி யுடன் குறிப்பிட வேண்டும்.

'கலா நிலைய' இதழில் 'கலித் தொகை'யைப் பற்றி யாரும் வெளியிடாத முன்னரே, தொடர்ந்து மூலமும்

பொருளும் கொண்டு வெளியிடப்பட்டு வந்துள்ளது என்பது சிறப்பாகக் குறிக்கத் தகுந்ததாகும்.

'கலாநிலைய' இதழில்—அகப்பொருள் வரலாறு, சேக்கிழாரும் கண்ணப்பரும், கம்பராமாயணம், காந்திமதி (தொடர்கதை), தமிழ்ப்பாடம், மொழிபெயர்ப்பு, வர்த்தமானம் முதலியவை வெளியாகியுள்ளன. 'கலா நிலையம்' சிறந்த இலக்கிய இதழாகத் திகழ்ந்தது.

''காந்தி'' (1931) : ஆசிரியர்-தெ. ச. சொக்கலிங்கம், இதில், சிறந்த ஆராய்ச்சியாளரது கட்டுரைகளும், நெஞ்சை யள்ளும் உருக்கமான சின்னஞ் சிறு கதைகளும், சிறந்த ஆசிரியக் குறிப்புகளும் எளியநடையில் சுவையாகச் சொல்லப் பட்டு வெளியாகியது. இது மாத இரு முறை இதழ். ஷூ ரூ. 2. 50. தனிப்படி 2 அணா. 'காந்தி' அலுவலகம் சென்னையில் இருந்தது. 'காந்தி' இதழ், வெள்ளையர் ஆட்சிக்கு எதிராக இயங்கியது.

''மணிக்கொடி'' (1937) : இவ்வார இதழ், சென்னை செம்புதாஸ் தெருவிலிருந்து, திருவாளர்கள் கே. சீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம், வ. ரா., அ. நா. சிவராமன் ஆகியோரின் பெருமுயற்சியால் நடத்தப் பெற்றது. புதிய முறையில் புதிது புதிதான துறைகளில், புதிய சுவைகளுடன் இதில் கதை கட்டுரை நாடகங்கள் ஆகியன வெளியிடப்பட்டு வந்தன.

'சுதந்திரப் பண்ணை' என்ற தலைப்பில் அரிய சங்கதிகள் வெளியாகின. ஊர் வீண் வம்புகள், குதர்க்கங்கள், வீணான செய்திகள் முதலியவைகளுக்கு இம் மறுமலர்ச்சி இதழில் இடமே கிடையாது எனக் கூறப்பட்டது. எளிய நடை, தொடக்க முதல் இறுதிவரை சங்கதிகள், குறைந்த ஆண்டுக் கட்டணம் ரூ. 3. 50. இதன் சிறப்புகளாகும். இது சில 1937 ஆம் ஆண்டு வரை நடைபெற்று நின்று போனது.

பின்னர் திரு. பி. எஸ். இராமய்யாவால் இதே பெயரில் 1950 இல் ஓர் இதழ் தொடங்கப்பட்டுச் சில காலம் வரை மிகுந்த சிரமத்துடன் நடத்தப்பட்டது. எனினும் நீடித்து நடத்த முடியவில்லை!

'மணிக் கொடி' இதழில் எழுதி வந்தவர்களில் புகழ் பெற்றவர்கள் : புதுமைப் பித்தன், கு. பா. ராஜகோபாலன், வ. ரா., சிட்டி ஆகியோராவர். சிலர் தம்மை 'மணிக் கொடிக் காலத்தவர், என்று கூறிக் கொள்வதில் பெருமை அடைகின்றனர்! 'மணிக்கொடி காலம்' என்ற தொடர் கட்டுரையை எழுதிய திரு. பி. எஸ். இராமய்யாவுக்கு சாகித்திய அகாதெமிப் பரிசு கிடைத்தது!

''பாரத மணி'' (1938) : ஆசிரியர்-கா. சீ. வேங்கட ரமணி. இது சென்னையிலிருந்து சில காலம் வரை நடத்தப் பட்ட வார இதழாகும்.

''பாரத மணி''யின்ஓசை, கடலோசைபோல, என்காதில் கனவிலும் விழுந்து கொண்டேயிருக்கிறது! என் ஆசைக்கு அளவேது? என் கனவுக்குக் காலேது? இம்மணி உலகெங்கும் கேட்க வேண்டும்! இவ்வோசை கடலோசைப் போல் பரவ வேண்டும். சாந்தமும் சக்தியும் ஒரே குடிசையில் எங்கும் குடியிருக்க வேண்டும்''—இது இவ்விதழ்ஆசிரியரின் பேரவா. இப் 'பாரத் மணி'யில், 'போகிற போக்கிலே' என்ற தலைப்பிலே ஆசிரியர் அவ்வப்போது தமது எண்ணத்தைத் தெரிவித்துள்ளார். பலர் இவ்விதழில் எழுதியுள்ளனர்.

''ஒரு தேசீய அரசாங்கத்தில் எல்லோரது உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும். எல்லோரும் ஆண்டவன் குழந்தைகள். எந்த மதத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் சரி, அயலானைக் கஷ்டத்துக் குள்ளாக்கினாலும் மதக் கொள்கைகளுக்கு விரோதம். ஆனால், சுயேட்சை என்பது எல்லா மதங்களைக் காட்டிலும் மேலானது. இந்தப் புனித மான சட்டத்தை எந்தச் சர்க்காராவது மீறினால், பொது

ஜனங்கள் அதற்குக் கீழ்ப்படிய மாட்டார்கள்'' என்று டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு, 'பாரத மணி' (2-7-1939) இதழில் தெரிவித்துள்ளார்.

''எந்த நிமிஷம் நீங்கள் எதிர்க்கட்சியே இல்லை என்று உணருகிறீர்களோ, எந்த நிமிஷம் எல்லோரும் ஒரே கட்சியில் சேர்ந்து விடுகிறீர்களோ, அந்த நிமிஷம் ஜனநாயகத்தின் வேர்களையறுத்துக் கொடுங்கோன்மையின் விதைகளைத் தெளித்தவர்களாவீர்கள். இந்தியாவில் ஜனநாயகம் நிலவ வேண்டுமென்று ஆசைப்படுபவர்கள் இந்த மாயமான ஒற்றுமையை நாடக்கூடாது. சொல்லப்போனால், பல வேறு அபிப்பிராய பேதங்களையும் வெளியிட வசதியளிக்க வேண்டும்; எல்லாப் பிரச்சனைகளையும் விவாதிக்க வேண்டும்; ஒரே ஒரு கட்சி மட்டும் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்று சர். ஆர். கே. சண்முகம் செட்டியார், 'பாரதமணி' (29-1-1939) இதழில் எச்சரிக்கை செய்திருப்பது நாம் என்றும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்பதற்கு நல்லதோர் வழிகாட்டும் கருத்தாகும்.

'பாரத மணி' இதழ் சில காலம் வரை நடைபெற்று நின்று விட்டது.

''பிரசண்ட மகாவிகடன்'' (1928) : ஆசிரியர்—வித்துவான் அமிர்த சுந்தர நாதனார். பதுமம்—1, இதழ்—1. திருச்சியிலிருந்து வெளியான விகட மாத இதழ்.

ஆசார சீர்திருத்தத்தையும் நல்லொழுக்கத்தையும் போதிக்கும் அதி ரச விகட மாத இதழ்.

''இந்து முஸ்லீம்கள் யாருமேற்கும் விகடனான்; மைந்தர் பெண்டீர் மக்களென்றும் வாழ்த்தும் விகடனான்; அரிய பெரிய விஷயமெல்லாம் அறையும் விகடனான்.''

விகடமும் விநோதமும் கேலியும் தமாஷும் நிறைந்தும் அரும் பெரும் விஷயங்களும் இதில் நிறைந்திருந்தது. இது ஒரு கட்சியையுஞ் சாராது, உலகிலுள்ள குற்றங்களையெல்லாம்

விகடமாகவும், தமாஷாகவும், கேலியாகவும் சித்திரப் படங்களுடன் வரைந்து எடுத்துக் காட்டி உலகைச் சீர்திருத்த புறப்பட்ட இதழாகும்.

''வீரகேசரி'' (1930) : ஆசிரியர்—எச். நெல்லையா. இது கொழும்புவில் 'வீரகேசரி' அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகிய நாளிதழ். அளவு 56×46 செ. மீ. பக்கங்கள் 8. தனி இதழ் 5 சதம்; ஓராண்டிற்கு ரூ. 15.

இந்திய நாட்டுச் செய்திகளையும், உள்நாட்டுச் செய்திகளையும், பிறநாட்டுச் செய்திகளையும் உடனுக்குடன் விளக்கமாகவே இதில் வெளியிடப்பட்டன.

''திருவரங்கம் பெரிய கோயில்'' (1930) : ஆசிரியர்—எஸ். பார்த்தசாரதி ஐயங்கார். மாத இதழ். ஆறு ரூ. 1. 50.

இது திருவரங்கம் பெரிய கோயிலில் நடை பெற்ற நிகழ்ச்சிகளையும், அங்குள்ள நிலைமைகளையும், திருவரங்கத்தில் ஏற்பட்ட முக்கிய சம்பவங்களையும் தனக்கே உரியதனிப் பாணியில் குறிப்பிட்டு வந்த இதழாகும்.

''ஸ்ரீரங்கத்திலுள்ள அழகான கோபுரம், மண்டபம், மதில் முதலியவற்றில் செடி முளைத்து மரமாய் வளர்ந்து தர்மகர்த்தாக்களின் ஆளுகைக்கு அறிகுறியான பச்சைக் கொடி பறந்து கொண்டிருக்கிறது!'' என்றும், ''தீண்டாதார்க்கு ஆலயத்தில் பிரவேசமில்லாததால் ஹிந்து மதம் தளரவுமில்லை! அது அனுமதிக்கப்பட்ட மாத்திரத்தில் மதம் ரக்ஷிக்கப்படப் போவதுமில்லை!'' என்றும் இவ்விதழில் கருத்துத் தெரிவிக்கப்பட்டது.

மேலும், ''வர்ணாச்சிரமம் அவசியம் வேண்டும் என்று சொன்ன காந்தி, வர்ணாச்சிரமத்தை அழிக்கக்கூடிய காரியத்தைத் தாமே அனுஷ்டித்துக் காட்டி விட்டாரென்று தைரியமாகச் சொல்லும்படி, தன் பிள்ளைக்குப் பிராமணப் பெண்ணைக் கண் வைத்திருந்து கல்யாணம் செய்து வைத்தது

மல்லாமல், அது தர்மமான விவாஹமென்றும் தீர்ப்புச் சொல்லி விட்டார்!'' என்று மேற்படி இதழில் (15-12-33) குறிக்கப்பட்டுள்ளது.

''10-12-34 காலையில் காந்தி திருவரங்கம் வந்தார். காந்தி போகும் வழியெல்லாம் ஏராளமாகக் கருப்புக் கொடிகளும், 'திரும்பிப் போ காந்தி' என்னும் பல காகிதங்களும் ஒட்டப்பட்டிருந்தன. கருப்புக் கொடிகளை அறுப்பதும், ஒட்டிய காகிதங்களைக் கிழிப்பதுமே காரியமாகக் காந்தி கட்சிக்காரர்கள் இருந்தனர்'' என்று மேற்சொன்ன இதழில் (12-12-34)காணக் கிடக்கின்றது. அன்றியும், காந்தியடிகள் போகும்போது மிளகாய்ப் பொடியும் தூவப்பட்டதாகவும் அவ் வைதீக இதழில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

1934 மே மாதத்திற்குப் பிறகு இம் மாத இதழ், மாத, இரு முறையாக்கப்பட்டது.

''தியாஜ்யம், ராகு காலம், திதி, யோகம், கரணம், நட்சத்திரம் முதலிய ஒன்றிலும் சம்பந்தப்படாத கிறிஸ்தவரான எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையென்பவர், நம்முடைய ஜோதிஷ சாஸ்திரத்தின் கரைகண்டு 2,000 வருடத்துக்குப் பஞ்சாங்கம் கணித்து நம் தேசத்துக்கும் மதத்துக்கும் மஹோபகாரம் செய்திருக்கிறார்'' என்று 'பெரிய கோயில்' இதழ் ஸஞ்சிகை-4, பத்திரிகை-4, பக்கம் 71இல் பாராட்டுத் தெரிவிக்கப்பட்டுள்ளது!

''உறையூரிலிருந்து வெளியாகும் வாரப் பத்திரிகையான 'நகரதூதன்' ஒன்றே, நகரத்துக்கேற்ற தூதனாய் விளங்குகிறது. 'முனிசிபாலிடி', 'ஜில்லா போர்டு' முதலிய அதிகாரங்களைப் பற்றிய மர்மங்களை இப்பொழுது நாம் தெரிந்து கொண்டது முற்றிலும் 'நகரதூதன்' செய்யும் உபகாரம் என்று ஒவ்வொருவரும் அறிவர். சமீபத்திலுள்ள அதிகாரிகளுக்குச் சிறிதும் தாட்சண்யப்படாமலே தவறுகளை 'நகரதூதன்' தைரியமாய்க் கண்டிக்கும் நேர்மையும் மிகவும் புகழத்

தக்கது'' என்று மேற்படி இதழில் மதிப்புரையும் செய்யப் பட்டுள்ளது.

''புலவர் உலகம்'' (1941) : ஆசிரியர்—ஜெகவீர பாண்டியன். மதுரையிலிருந்து வெளிவந்த மாத இதழ். முதல் தொகுதி, புத்தகம்-1. ஆண்டுக் கட்டணம் ரூ. 4.

''மலர்க்கு மணமும், மணிக்கு ஒளியும் போல் மனிதனுக்கு அறிவு பெருமை தருகின்றது. உயர் நிலையமான அவ்வுணர்வொளி குன்றிய பொழுது மனிதன் இரு கால் விலங்கென இழிந்து திரிகின்றான். அவன் பிறப்பும் இருப்பும் பிழையாய் ஒரு வழியுமின்றி உருவழிந்தொழிகின்றான். உள்ளொளியாகிய அறிவினையுடையான் தெள்ளியனாகித் தெய்வம் எனத் திகழ்கின்றான்'' என்று 'கம்பன் கலை நிலை' பற்றி எழுதும்போது திரு. ஜெகவீர பாண்டியனார் குறிப் பிட்டுள்ளார்.

'புலவர் உலகம்' என்ற தலைப்பின் கீழ், கம்ப ராமாயணம் எனும் அரிய பெரிய இனிய நூலின் கனிவுகளை யெல்லாம், இது பண்புற்று வருகின்றது.

கவிகள் தோறும் பொருள் கூறிக் கதைகளை விரியாது உணர்வு நலம் கனிய உள நயங்களை விளக்கிக் கலைச் சுவை களையே இந் நூல் தலைப்பெய்து வந்தது. சுருக்கமாக ஆறு காண்டங்களின் கதைக் குறிப்புத் தந்து, பின்னர் பல அதிகாரங்களாகப் பிரித்துக் கொண்டு விளக்கிச் செல்கிறது இப் புத்தகத் தொகுதி. இவ்விதழைத் தொடர்ந்து வாங்குவோர் பின்னர் எளிதாகப் புத்தகமாக்கிக் கொள்ளும் வண்ணம் தொடர் எண் தரப்பட்டது. இது பல ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்று வந்தது.

''கலைக்கதிர்'' (1948): ஆசிரியர் ஜி. ஆர். தாமோதரன். மாத இதழ். முன்பு தனிப்படி 8 அணா: ஆண்டுக்கு ரூ. 2. கோவையிலிருந்து வெளிவந்து கொண் டிருக்கிறது.

இது அழகிய தாளில் நல்ல அச்சுடன், சிறந்த அறிவுக் குணவாகும் கட்டுரைகளையும், கதைகளையும் தாங்கி வெளிவந்துக் கொண்டிருக்கிறது. விஞ்ஞானத்தின் புதிய கண்டுபிடிப்புகளையும் அறிவியல் விளக்கங்களையும் தமிழ் மக்களுக்கு நல்ல தமிழில் அறிமுகப்படுத்தி வரும் ஒரே இதழ் இதுவாகும்.

''சிறந்த வாணிபங் காரணமாய்த் தென்னாட்டின் இரு கடற்கரைகளுமே அயல்நாடுகளுடன் தொடர்பு வைத்திருந்தன. கடற்கரைப் பட்டினங்களே வழிப்போக்கர் குறிப்புகளில் இடம் பெற்றுள்ளன. ஏனெனில் வெளி நாட்டு வியாபாரிகளும் வழிப்போக்கர்களும் நாட்டிற்குள் செல்லவில்லை! அவர்கள் கரையையும் அந்தயொட்டியிருந்த பட்டினங்களையும் கண்டு சென்றனர்.

வடக்கில் நெல்லூரிலிருந்து மேற்கில் கொல்லம் (Quilon) வரையிலுள்ள பகுதியை 'மாபார்' எனவும், கொல்லத்திலிருந்து கோவா வரையிலுள்ள பகுதியை 'மலபார்' எனவும் வழங்கினர். 13ஆம் நூற்றாண்டில் தென்னாட்டில் முக்கிய துறைமுகங்கள் மோட்டுப் பள்ளி (குண்டூர் மாவட்டம்) காயல்(திருநெல்வேலி மாவட்டம்), கொல்லம்(திருவாங்கூர்), கோழிக் கோடு (மலபார் மாவட்டம்) முதலியன.

மாபார் நாட்டை ஆண்ட முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியனுக்கு (கி. பி. 1268—1361) இரு புதல்வர் இருந்தனர்.''—'கலைக்கதிர்'—மலர்-3, இதழ்-1.

''சிற்பக்கலை'' (1947): ஆசிரியர்—பூ. சீனிவாசலு நாயுடு. வெளியிட்டவர் எம். வி. டி. பத்தர். ஆந்திர மாநில சித்தூரிலிருந்து வெளிவந்த மாத இதழ். கிரௌன் 1×8 அளவினது.

''சிற்பம் தனிக்கலை போன்று தோன்றினும் அது பிற கலைகளைத் தனக்குள் அடக்கிக் கொண்டிருப்பதாகும்.

சிற்பக் கலைஞன் ஓவியக் கலைஞனாகவும், காவியக் கலைஞ னாகவும் இருக்கிறான். காவியமும் ஓவியமுமின்றிச் சிற்ப மமைவது எங்ஙனம்?...

பொதுவாக ஆ ர ா ய மி ட த் து க் குறிப்பிடத்தக்க உருவின்றிக் கிடப்பவற்றையும், உருமாறிச் சிதைந்துகிடப்பன வற்றையும், எவரும் கண்டு வியக்குமாறு எழிலார்ந்த உருவாக்கியும், ஒழுங்குப்படுத்தியும் அமைத்தலே சிற்பமாம் எனப் பொருள் கோடலே ஏற்புடைத்தாகும்.''—'சிற்பக் கலை' (1947).

'புழல் ஈக்காடு கோட்டங்கள் திருவள்ளூர் தாலூக்கா வில் அடங்கியுள்ளன; மணவூர்க் கோட்டம் திருத்தணித் தாலூக்காவில் அடங்கியுள்ளது; படுவூர் சிற்றூர் தாலூக்கா வில் இருக்கின்றது. பல்குன்றக் கோட்டம் என்பது சித்தூரே! கடிகை என்பது கடிகாசலம் என்னும் சோழ சிங்கபுரமாம்''— என்று (Imperial Gazette of India, vol. II page 1, North Arcot District) என்பதை மேற்கோள் காட்டி இவ்விதழில் தகவல் தரப்பட்டுள்ளது.

''குடிநூல்'' (1940) : ஆசிரியர் கோவை. அ. அய்யா முத்து. கட்டு—4, சிட்டம்—2. காந்திநகர், திருப்பூரிலிருந்து வெளிவந்த கதர் இதழ். 48 பக்கங்கள். கிரெளன் 1×8 அளவினது.

இதில் அறன் வலியுறுத்தல், சர்க்கா சாஸ்திரம், கண்டறியாதன கண்டேன், சில கண்டனங்களுக்குப் பதில், கதரின் சுய தேவைத் திட்டம், சர்க்காசங்கத் தொண்டர்கள், நூற்பதின் தத்துவம், சேவா கிராமக் குறிப்புகள், நமக்கு வந்த கடிதங்கள், இந்தியக் கிராமங்கள் பண்ட விற்பனையும் பொருளாதார நிலைமையும் போன்ற பகுதிகள் வெளி வந்துள்ளன.

''காந்தியடிகளின் போதனைகளின் இலை மறைவு காய் போல மறைந்திருந்து, சிந்தித்துத் தேடினார்க்கேயல்லாது,

மற்றொருவருக்குக் கிட்டாத வேதாந்தப் பொருளை விளம்பி விளக்க எத்தனித்தார் அவர் (திரு. வி. க.)...

இருபது வருடங்களுக்கு முன்னர் 38 வயதுடன் கம்பீர மான தொனியுடன் நகைச்சுவை நிரம்பிய நடையுடன் பேசிய கலியாண சுந்தரனார் எங்கே? அவரது பிரசங்கத்தை ஆவலுடன் கேட்டு அவரது சுவை ததும்பும் செந்தமிழ் நடையைப் படித்து வந்த ஜனங்கள் எங்கே''—என்று கோவை அய்யாமுத்து திரு. வி. க. வை பற்றி மேற்கண்ட இதழில் புகழ்ந்து எழுதியுள்ளார்.

''கல்கி'' (1941): ஆசிரியர்— ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி). இது முதலில் எழுமூரிலிருந்து 1-8-1941 முதல் வார இதழாக வெளிவரத் தொடங்கியது. பின்னர் கீழ்ப்பாக்கத்திற்கும், தற்போது கிண்டிக்கும் மாறியுள்ளது. முன்பு தனிப்படி விலை 2 அணா.

அரசியல், இலக்கியம், கதைகள், கட்டுரைகள், நட்சத்திர மண்டலம், பாப்பா மலர், பல சரக்கு, படங்கள்- ஆகிய பல்வேறு பகுதிகளைக் கொண்டு 'கல்கி' வெளியாகியது.

திரு.டி.கே.சிதம்பரநாதரின் 'கம்பர் தரும் காட்சி', 'கல்கி' யின் முதல் இதழிலேயே வெளிவரலாயிற்று. 'அஹிம்சையா அரசியலா?' என்று 'கல்கி' எழுதிய தலையங்கம் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் போன்றவர்களால் மிகவும் கண்டிக்கப்பட்டுள்ளது. திரு. சி. இராஜகோபாலாச்சாரியாரின் 'கிரிப்ஸ் ஆதரவு திட்டம்' தோல்வியுற்றதைக் குறித்து, 'கல்கி' யில் (16-5-1942) 'வட நாட்டுத் தலைமை' என்று தலையங்கம் தீட்டப்பட்டுள்ளது.

'கல்கி'' தமது அரசியல் தலைவராகக் கருதிய சி. ஆரை ஆதரிக்க வேண்டி 22-5-1942 முதல் 'கல்கி' இதழை வார இரு முறையாக ஆக்கினார். அது நன்கு விற்பனையாக

வேண்டி 'மகுடபதி' எனும் தொடர்கதையை அதில் எழுதத் தொடங்கினார். அதன் தனிப்படி அரையணா. இது **14-8-1942** முதல் **21** இதழ்கள் வந்ததும் நிறுத்தப்பட்டு விட்டது.

'ஆனந்த விகட'னுக்கும் 'கல்கி'க்கும் கருத்துப் போர் ஏற்பட்டபோது, ''பத்து வருஷத்து முன்னால் விகடன் அபஸ்மார விளம்பரங்களைத் தாங்கிய'கேட்லாக்' பத்திரிகை யாக இருந்தான்'' என்று கேலியாக எழுதினார்!

''கல்கி பத்திரிகையின் ஆசிரியர் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டு இருபது வருஷம் ஆகிறது. இந்த இருபது வருஷ காலத்தில் நாமாக முதலில் வேறொரு பத்திரிகையோ எழுத்தாளரையோ தாக்கியது கிடையாது. மற்றவர்கள் தாக்கினால் சில சமயம் பதில் சொல்வதுண்டு. அப்படித் தாக்குவோர் கௌரவமுள்ளவர்கள் என்று எண்ணினால் தான் பதில் சொல்வோம். வெறும் குப்பைகளையும் வசைத் தாள்களையும் பொருட்படுத்துவது கிடையாது'' என்று கல்கி (16-6-42) தம் இதழில் எழுதியுள்ளார்.

'சின்ன தலையும் பெரிய பதவியும்' என்று தலைப்பிட்டுக் 'கல்கி' எழுதியது, தனிப்பட்ட தலைவரைக் கேவலப்படுத்துவதாகக் கருதிப் பலர் கண்டனக் கணை களைத் தொடுத்தனர்.

இளமை முதலே கதைப்பற்றும் இசைப்பற்றும் கொண்டவர் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி). தமிழ் இசைக்கு ஆதரவு தந்ததும், எதிரிகளின் நல்ல செயல்களைப் பாராட்டி யதும், அவர்தம் திறமைகளைச் சந்தர்ப்பம் ஏற்படும்போது சுட்டிக் காட்டிப் போற்றியதும், முன்னுக்கு வரவேண்டியவர் களை ஊக்குவித்ததும் அவரது அரிய பண்புகளாகும். தொடர் கதைகள் மூலம் வாசகர் வட்டத்தைப் பெருக்கியதும் 'கல்கி'யின் தனித் திறமையாகும்.

"''தினமணி' இவ்வளவு உயர்ந்த மதிப்பை அடைவதற்குக் காரணமாயிருந்தவர் ஸ்ரீ. டி. எஸ். சொக்கலிங்கம் தான் என்று சொல்ல வேண்டியதில்லை! 'தினமணி'யின் துரித வளர்ச்சிக்குக் காரணமே ஸ்ரீ சொக்கலிங்கத்தின் பேனா முனைதான்! 'தினமணி' என்றால் சொக்கலிங்கம், சொக்க லிங்கம் என்றால் 'தினமணி' என்று தான் தமிழ் மக்கள் கருதி வந்தார்கள். திடீரென்று 'தினமணி'யிலிருந்து சொக்க லிங்கம் விலகிக் கொண்டார்.'' என்று 'கல்கி'யில் புகழ்ந்து எழுதப்பட்டுள்ளது.

'கல்கி'யில் 'தமிழ் வளர்ந்த கதை' என்ற தொடர் கட்டுரையைத் திரு. பி. ஸ்ரீ. ஆசார்யா, 20-3-1942 முதல் தொடர்ந்து எழுதி வந்தார்.

தமிழ்த் திரைப்படங்களில் 'எத்தனை அடி வேண்டும்?' என்ற கட்டுரையைக் 'கல்கி' 1-7-47இல் திரு. எஸ். எஸ். வாசனுக்கு எதிராக எழுதி வந்தார். 'பட முதலாளிகள் சிலர் தங்களுடைய மட்டத் தன்மையைத் தமிழ் மக்களின் மேலே ஏற்றுகிறார்கள். ஏற்றி, தமிழ் மக்கள் மட்டப் படத்தை விரும்புகிறார்கள் என்று பழி சுமத்துகிறார்கள்' என்று 'கல்கி' வாதாடினார். 14,000 அடிக்குள் படத்தை முடிக்க வேண்டும் என்றார். அப்போதுதான் படப்போக்கும் கதை விறுவிறுப்பும் கொண்டதாக விளங்கும் என வலியுறுத்தினார்.

இதற்கு மறுப்பாகத் திரு. புதுமைப் பித்தன் 'பத்தாயிரத் தில் பரமபதம்' என்று 'தினமணி'யில் 'ரசமட்டம்' என்ற பெயரில் பதில் தந்துள்ளார். கல்கி கிருஷ்ணமூர்த்தி யின் நண்பர் திரு. சதாசிவம், 'பக்த மீரா' எனும் திரைப் படம் எடுத்த போது, அதை 14,000 அடிகளுக்கு மேல் படம் பிடிக்க வேண்டியதாயிற்று!

''கல்கி''யின் முதல் தீபாவளி மலர் 1942இல் வெளி யாயிற்று.

''தாங்கள் அடிக்கடி தங்கள் பத்திரிகையில் தமிழர்கள் என்றும், தமிழ் மக்கள் என்றும் குறிப்பிடுவது யாரைக்

குறித்து? பிராமணரல்லாதவர்களைத் தான் என்று சிலர் நினைக்கிறார்கள். அதற்குக் காரணம் தாங்கள் தமிழ் இசையை ஆதரித்து எழுதியும் ஆதரித்துப் பேசி வருவது தான். தமிழ் இசை இயக்கம் பிராமணரல்லாதவர்களுடைய இயக்கம் என்பது அவர்கள் கருத்து. ஆகையால், 'கல்கி' பத்திரிகை பிராமணர்களுக்கு விரோதமான பத்திரிகை என்று நினைக்கிறார்கள். இதற்குத் தக்க பதிலை எழுதி அவர்களுடைய சந்தேகத்தைத் தீர்ப்பீர்கள் என நம்பு கிறேன்''—எனத் திருச்சி வி. முத்துக் கிருஷ்ண ஐயர் 12-7-43இல் 'கல்கி'க்குக் கடிதம் எழுதினார். இதற்கு விளக்கமான பதிலைத் திரு.ரா. கிருஷ்ண மூர்த்தி 'கல்கி'யில் தந்தார். அது அவரது 'சங்கீத யோகத்'தில் இடம் பெற்றுள்ளது.

''தமிழ் நேசன்'': மலேயாவில் 10-9-1924இல் திரு. சி. நரசிம்ம ஐயங்காரால், வார இதழாகத் தோற்று விக்கப்பட்டது. அப்போது இதன் ஆசிரியராக இருந்த திரு. சி. நரசிம்மஐயங்கார், தமது தலையங்கத்தில் எழுதி யிருப்பது: ''இம் மலாய் நாட்டில் தோன்றி மறைந்த ஏனைய பத்திரிகைகளைப் போலல்லாது இப்பத்திரிகையை நிர்விக்ன சாச்விதமாயும் நடத்த வேண்டுமென்று எண்ணியே யாம் எமது சொந்தப் பொறுப்பில் இப் பத்திரிகையை ஆரம்பித்திருக்கிறோம்.''

இவருக்குப் பின் 'தமிழ் நேச'னை இவரது துணைவியார் லட்சுமி அம்மாள் கண்ணுங் கருத்துமாக இதனைக் காத்து வந்தார். அடுத்து இதற்குத் திரு. பார்த்தசாரதி ஆசிரியராக வந்தார். பின்னர் திருவாளர்கள் ஆதி. நாகப்பன், ரா. வேங்கட ராஜுலு, கு. அழகிரிசாமி, கே. சி. அருண் முருகு சுப்பிரமணியன் ஆகியோர் ஆசிரியர்களாக வந்து திறம்பட நடத்தினர்.

'தமிழ் நேசன்' வார இதழாகத் தொடங்கப்பட்ட போது அதன் விற்பனை 1,200 படிகள். 20-2-1937இல்

நாளேடாக மாறிய பின்னர் 1964 இல் ஞாயிற்றுக் கிழமை களில் 25,000 படிகளும், மற்ற நாட்களில் 18,000 படிகளும் விற்பனையாகியுள்ளன என்று 'தமிழ் நேசன்' நாற்பதாண்டு நினைவு மலரில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிங்கப்பூர் உட்பட மலேசியா முழுவதிலும் எல்லா நகரங்களிலும் எல்லா ஊர் களிலும் 'தமிழ் நேசன்' இதழே மற்ற தமிழ் இதழ்களைக் காட்டிலும் முதலிடம் வகித்தது 4 பக்கங்கள் கொண்டு, 10 காசு விலையில்!

மலாயா இந்தியர்களின், குறிப்பாகத் தமிழ்த் தோட்டத் தொழிலாளர்களின் குரலாகத் 'தமிழ் நேச'ன் முதலில் தமிழிலும் அதற்குத் துணையாகப் பின்னர் ஆங்கிலத்திலும் தொடங்கப்பட்டது. இரண்டாவது உலகப் போரின்போது ஜப்பானால் மலாயா பிடிக்கப்பட்டது. அப்போது மலாயா, முழுவதிலும் எல்லா இதழ்களும் நிறுத்தப்பட்டன. ஆனால், 'தமிழ் நேசன்' மட்டும் 1942 சனவரி 20ஆம் நாள் வரை நிற்காமல் நடைபெற்று வந்தது! பின்னர் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் தலைமையில் இயங்கிய இந்திய சுதந்திர சங்க ஆதரவில் 'தமிழ் நேசன்' நடத்தப் பெற்றது.

'தமிழ் நேசன்', உள்நாட்டு வெளிநாட்டுச் செய்தி களைப் படப் பொலிவுடன் ஆங்கில இதழ்களுக்கு ஈடாக அன்றாடம் வெளியிட்டு மக்களின் பாராட்டைப் பெற்றது. இலக்கியம், தத்துவம், மாதர் பகுதி, சிறுவர் பகுதி, விஞ்ஞானம், மருத்தும் போன்ற துறைகளில் புலமை பெற்றவர்களைக் கொண்டு எழுதச் செய்து தரமான கட்டுரைகளைத் 'தமிழ் நேசன்' வெளியிட்டு வந்தது. வயதால் மூத்தது 'சுதேச மித்திரன்'; அதற்கிளையது 'தமிழ் நேசன்' என்று திரு. கே. நரசிம்ம ஐயங்கார் தமது நண்பர்களிடம் பெருமையாய்ச் சொல்வாராம்!

''சக்தி'' (1940) : ஆசிரியர் - திரு. அ. கிருஷ்ணமூர்த்தி; வெளியிட்டவர் திரு. வை. கோவிந்தன். சென்னையிலிருந்து வெளியிடப்பட்ட மாத இதழ். விலை 4 அணா. இது ஆங்கில

இதழான ''டைம்ஸ்'' இதழ்மாதிரியில், சுற்றும் சிவப்பு விளிம்பு இட்ட முகப்புப் படமுடன், நல்லதாளில் அழகான வடிவில் சிறப்பாக வெளியிடப்பட்டது. இதில் சுத்தானந்த பாரதியாரின் 'பாரத சக்தி மகா காவியம்' முதலில் தொடர்ந்து வெளியிடப்பட்டது. நல்ல அறிஞர்களின் கட்டுரைகளும் வெளியாயின. பின்னர் இது டிம்மி $1 \times 8$ அளவில் டாக்டர் உ. வே. சாமி நாதையர், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. போன்றவரின் படங்களைமூவண்ணத்தில் முகப்புப் பக்கத்தில் அச்சிட்டு வெளியாகியது. திருவாளர்கள் தி. ஜ. ரங்கநாதன். சுப. நாராயணன், ரகுநாதன் முதலியோர் இதற்கு ஆசிரியர்களாக இருந்துள்ளனர். திரு. மு. அருணாசலத்தின் கட்டுரைகள் இதில் வெளியாகிய பின்னரே நூல் வடிவம் பெற்றன. நல்ல அச்சிலும் அழகான வடிவமைப்பில் 'சக்தி' இதழ் பல ஆண்டுகள் வெளியிடப்பட்டு, தமிழ் இதழ் உலகில் தனக்கெனத் தனி இடத்தைப் பெற்றது. இதனை வெளியிட்ட சக்திக் காரியாலயத்தினரும் தமிழ் நூல் வெளியீட்டில் தனிச்சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தனர்.

''அறிவுச் சுடர்'' (1950) : ஆசிரியர்— ந. சுப்பு ரெட்டியார். இது துறையூர் ஜமீந்தார் உயர்நிலைப்பள்ளியின் சார்பில் வெளியிடப்பட்டது. இராயல் அளவினது. இதில் அறிவைத் துலக்கமடையச் செய்யக்கூடிய பல கட்டுரைகள் வெளியிடப்பட்டன. திரு. சுப்புரெட்டியார், தமிழையும் விஞ்ஞானத்தையும் நன்கு அறிந்தவர். பள்ளிக்கூடம், கல்லூரி, பல்கலைக் கழகங்களில் பணியாற்றியவர். இவ்விதழில், வெளியான சில விளக்கங்கள் பொருத்தமாகத் தரப்பட்டுள்ளன.

'புரவு வரி'— என்போர் அரசிறை நீங்கிய ஊர்களின்றும் வரும் பிற வரிகளுக்குக் கணக்கு வைப்பவர்கள்.

'வரிப் புத்தகம்'— என்போர் அரசனுக்கு ஒவ்வொரு ஊரிலிருந்து வரும் காணிக்கடனாகிய அரசிறைக்குக் கணக்கு வைப்பவர்கள்.

'பட்டோலைப் பெருமாள்'— நாள்தோறும் நடக்க வேண்டிய நிகழ்ச்சிகளை, நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதி வைப்பவர்கள்.

'விடையதிகாரி'— கிராம சபைகளிலிருந்தும் பிற அதிகாரிகளிடமிருந்தும் வரும் ஓலைகளைப் படித்துப் பார்த்து, அவற்றிற்குத் தக்கவாறு விடையெழுதி அனுப்புபவர்கள்.

'திருவாய்க் கேள்வி', 'திரு மந்திர ஓலை' — இவர்களுக்குத் தலைவர் 'திருமந்திர வோலை நாயகர்' என்று சொல்லப்படுவார்.

சும்மை+ அடு= சும்மாடு. சுமையை அடுத்திருப்பது என்பது இதன் பொருளாகும்.

இருள்+ஆட்சி=இது ள்—ட் ஆகத் திரிந்து 'இருவாட்சி' என்று ஆகியுள்ளது. 'நள்ளிருள் நாறி' என்று செய்யுளில் பயின்று வந்துள்ளது. ('அறிவுச் சுடர்'—மலர் - 2.)

''குமரி மலர்'' - (1944) : ஆசிரியர் —ஏ. கே. செட்டியார். முதலில் மாதம் ஒரு புத்தகமாக வெளிவந்தது. பின்னர் மாதந்தோறும் பல நல்ல கட்டுரைகளையும், பல நூல்களில் இருந்து தொகுக்கப்பட்ட அறிவுரைகளையும், பல இதழ்களில் இருந்து வெளியான நல்ல தகவல்களையும் வெளியிட்டு வந்தது. இதற்குத் திரு. வெ. சாமிநாத சர்மாவும் சில காலம் பதிப்பாசிரியராக இருந்துள்ளார். உலகம் சுற்றிய தமிழரான திரு. செட்டியார் அடக்கத்திற்குப் பேர்போனவர்; காந்தியவாதி. காந்தியடிகளைப் பற்றி மிகவும் கடினபட்டு ஒரு விளக்கப் படத்தை எடுத்து வெளியிட்டவர். பல முறை உலகை வலம் வந்திருக்கிறார். 'குமரி மலர்' பெரிய அளவில் வெளியிட்ட ஆண்டுமலர், படங்கள் நிறைந்து கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்தது. ஆசிரியர் மறைவுடன் 'குமரி மலர்' நின்று விட்டது. 'குமரி மலர்' முதல் புத்தகத்தில் வ. ரா. வைப் பற்றித் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் எழுதியுள்ளார்.

## மாத இதழ்கள்

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1834 | தமிழ்ப் பத்திரிகை | மதராஸ் ரிலிஜியஸ் டிராக்ட் சொசைடி | சென்னை |
| 1866 | கலாவர்த்தினி | ஊ. புஷ்பரத செட்டிசீகோ | ,, |
| 1874 | ஜனவிநோதனி | ரெவ. எஸ். ஜே. சௌரியப்பா | ,, |
| 1876 | ஞானபாநு | செங்கல்வராய முதலி | ,, |
| 1886 | கலாதாரங்கிணி | இராஜகோபால் செட்டியார் | ,, |
| 1886 | ஸ்ரீலோக இரஞ்சனி | டி. நாதமுனி நாயுடு | பெல்லாரி |
| 1887 | ஸ்ரீலோக இரஞ்சனி | சி. ஐ. அப்பு முதலி | வேலூர் |
| ,, | திராவிட இரஞ்சனி | டி. வி. வெங்கட்டராஜுலு நாயுடு | திருச்சி |
| ,, | ஜனோபகாரம் | சி. சடையாண்டி செட்டியார் | சென்னை |
| ,, | விவேக போதினி (i) | எ. எஸ். இராஜு செட்டியார் | ,, |
| ,, | விவேக சுந்தரம் | எஸ். நமசிவாய செட்டியார் | ,, |
| ,, | மகாராணி | வி. கிருஷ்ணமாச்சாரியார் | ,, |
| 1892 | விவேக சிந்தாமணி | சி. வி. சுவாமிநாதய்யா | சென்னை |
| 1893 | வித்யாபாநு (i) | கே. என். ஈஸ்வரய்யா | கோவை |
| | ,, (ii) | (1909)—கந்தசாமி கவிராயர் | மதுரை |
| 1896 | ஜன மல்லோசினி | வி. பி. நாரணய்யா | சென்னை |
| 1900 | ஞானபோதினி | எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை | ,, |
| | ஞானப்பிரியன் | கே. கிருஷ்ணசாமி ஐயர் | ,, |
| 1902 | யதார்த்த பாஸ்கரன் | வி. எம். சுவாமி பி. ஏ. | ,, |
| ,, | அபிநவ பத்திரிகை | சி. ஆர். சீனிவாச அய்யங்கார் | ,, |
| ,, | ஞானசாகரம் | நா. வேதாசலம் பிள்ளை | ,, |
| ,, | சுகுண சுந்தரம் | டி. பி. விஸ்வநாத பிள்ளை | திருச்சி |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1902 | செந்தமிழ் | ரா. இராகவய்யங்கார் | மதுரை |
| 1903 | இகபர சுக சாதனி | கே. லோகநாத முதலியார் | சென்னை |
| ,, | விவேக பாநு | மு. ரா. கந்தசாமி கவிராயர் | மதுரை |
| 1904 | பிரஜாநுகூலன் | எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு | திருச்சி |
| ,, | பூலோக வியாசன் | பி. முத்துவீரன் பிள்ளை | சென்னை |
| ,, | தமிழகம் | உலகநாதம் பிள்ளை | தஞ்சாவூர் |
| 1906 | ஸ்ரீவாணி விலாசனி | டி. கே. பாலசுந்தர ஐயர் | திருவரங்கம் |
| ,, | சுபோத பரிஜாதம் | துரைசாமி ஐயர் | திருச்சி |
| 1908 | விவேக போதினி (ii) | மயிலை ஜெனரல் சப்ளைஸ் | சென்னை |
| 1909 | செந்தமிழ்ச் செல்வி (i) | கே. அருணாசல தேவர் | வேளாங்கண்ணி |
| | ,, ,, (ii) | (1923)—சைவ சித்தாந்த கழகம் | சென்னை |
| ,, | கமலாஸனி | டி. எஸ் தியாகராஜ ஞானியார் | திருவாரூர் |
| ,, | வித்யா விஹாரினி | சி. என். கிருஷ்ணசாமி ஐயர் | சென்னை |
| ,, | பூலோக வியாசன் | பி. முத்து வீர நாவலர் | ,, |
| 1910 | பூர்ண சந்திரோதயம் | பி. நாராயண ஐயர் | மதுரை |
| 1911 | செந்தமிழ்ச் செல்வம் | அமிர்தம் சுந்தரநாத பிள்ளை | திருச்சி |
| ,, | ஞான நாயகி | சி. நாராயணசாமி முதலியார் | சென்னை |
| ,, | தமிழ் | ஏ. சிவப்பிரகாசம் பிள்ளை | திண்டுக்கல் |
| 1912 | ஞான சந்திரிகா | விசாலாட்சி அம்மாள் | மயிலாப்பூர் |
| 1913 | லோக மித்திரன் | எம். கோவிந்தராஜ அய்யங்கார் | நாமக்கல் |
| ,, | சாந்த மனோல்லாஸ சபைப் பத்திரிகை | வி. ஆர் வைத்தியநாத ஐயர் | வேலியூர் |

| | | | |
|---|---|---|---|
| 1913 | கற்பகம் | ஆர். சஞ்சீவி | திருநெல்வேலி |
| ,, | செந்தமிழ்ச் சிந்தாமணி | வி. உலகநாத முதலியார் | சென்னை |
| ,, | வித்யாவதி | எஸ். எஸ். சங்கரலிங்க நாடார் | ,, |
| 1914 | ஜனாபிமானி | ஜி. ஏ. வைத்தியராமன் | சென்னை |
| 1915 | ஆனந்தபோதினி | என். முனுசாமி முதலியார் | சென்னை |
| ,, | கதா ரத்னாகாரம் | எம். ஏ. நெல்லையப்பர் | ,, |
| 1916 | ஜனோபகாரி | வி. ஆர். வைத்தியநாத ஐயர் | வேலூர் |
| ,, | திருவள்ளுவர் | கே. எஸ். சுப்பிரமணிய பிள்ளை | கோயம்புத்தூர் |
| ,, | விவேகோதயம் | எம். கோபாலகிருஷ்ணய்யர் | மதுரை |
| ,, | பாரதி | டி. கிருஷ்ணசாமி பாவலர் | சென்னை |
| ,, | கலா சிந்தாமணி | சி. எம். மாணிக்கவேலு முதலியார் | ,, |
| 1917 | கல்பதரு | கே. ஆர். கிருஷ்ணமாச்சாரியா | ,, |
| ,, | வித்யா கல்பம் | எம். ஆதிகேசவலு நாயுடு | ,, |
| ,, | தமிழர் நேசன் | அ. மாதவய்யா | சென்னை |
| ,, | தமிழ்க் களஞ்சியம் | எம். வி. ஈஸ்வர ஐயர் | ,, |
| 1918 | கதா வருஷனி | எஸ். ஏ. சுப்பராயப் பிள்ளை | தூத்துக்குடி |
| ,, | தருமசீலன் | தி. ஆதி நயினார் | சென்னை |
| 1919 | தமிழ்க் கழகப் பத்திரிகை | சென்னைக் கலைக் கழகம் | ,, |
| ,, | சந்திரிகா | எஸ். என். பாரதி | ,, |
| ,, | தாரக தூதன் | ஐ. வி. கோபாலசுவாமி ஐயர் | ,, |
| 1920 | மதிபூரணி | எம். கே. இராஜம் அய்யங்கார் | திருவள்ளூர் |
| ,, | ஒற்றுமை | வ. கே. துரைசாமி ஐயங்கார் | சென்னை |
| ,, | செந்தமிழ்க் களஞ்சியம் | மறைமலை அடிகள் | ,, |
| ,, | பாரத மாதா | ஏ. ஆர். இராஜகோபாலன் | திருச்சி |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1920 | சகலகலாவல்லி | ஆர்.எம்.வி.வி.இராமகிருஷ்ண ஐயர் | உசிலம்பட்டி |
| ,, | வித்யா போதினி | பி.சி. புன்னைவன நாதன் | மதுரை |
| 1921 | தமிழபிமானி | வா்சு தேவராவ் கெய்க்வார் | அம்பாசமுத்திரம் |
| ,, | ஜெகத் போதினி | ஆர். எஸ். முருகேச முதலியார் | கடலூர் |
| ,, | உலக ரகசியம் | சி. கே. நாராயணசாமி முதலியார் | ஈரோடு |
| ,, | இரஞ்சிதம் | கே. என். நாராயணசாமி பிள்ளை | மணப்பாறை |
| ,, | இந்தியத் தாய் | ஏ. சுந்தரானந்த பிள்ளை | திருச்சி |
| 1922 | சத்திய வாணி | எஸ். என். வேங்கடேச ஐயர் | சென்னை |
| ,, | விவேகானந்தம் | எம். சக்கரவர்த்தி | ,, |
| ,, | தட்சிண நேசன் | ஆர். சேஷன் | திருவரங்கம் |
| ,, | தேச ஊழியன் | ஆர். வி. சுப்பிரமணியம் | திருச்சி |
| ,, | சரசுவதி | ஏ. மாதவராஜு | சென்னை |
| 1923 | இரஞ்சித போதினி | வாசுதேவ ராவ் கெய்க்வார் | ,, |
| ,, | பைந்தமிழ் | ஜகதீச ஐயர் | ,, |
| ,, | ஜீவானந்த போதினி | கே. எஸ். முத்தய்யா | ,, |
| ,, | லட்சுமி | எல். முத்துக் குமாரசாமி முதலியார் | ,, |
| 1924 | ஆனந்த விஜயன் | டி. மாசிலாமணி நாடார் | பாளையங் கோட்டை |
| ,, | ஆர்ய மித்திரன் | எம். குப்புசாமி முதலியார் | சென்னை |
| ,, | பாரதி வெற்றி | எம். ஏ. வரதராஜ முதலியார் | கல்லக்குறிச்சி |
| ,, | நவரச மஞ்சரி | போருரான் செட்டியார் | சென்னை |
| ,, | தமிழரசு | எஸ். சீனிவாச அய்யங்கார் | மதுரை |

| | | | |
|---|---|---|---|
| 1924 | பஞ்சாமிர்தம் | அ. மாதவய்யா | சென்னை |
| ,, | பொக்கிஷ பரணி | ரெவ. எம். சாலமென் | ,, |
| ,, | சிந்தாமணி | வி. பாலம்மாள் | ,, |
| ,, | குணநீதி | எம். கே. பிச்சைய தேசிகமணி | திருவிடைமருதூர் |
| ,, | பால பாரதி | வ. வே. சு. ஐயர் | சேரமான்தேவி |
| ,, | செந்தமிழ்ச் செல்வி | மணி திருநாவுக்கரசு முதலியார் | சென்னை |
| ,, | கொங்குவேள் | டி. எ. முத்துசாமி கோனார் | ஈரோடு |
| ,, | செந்தமிழ்ச் சிந்தாமணி | எம். கே. ஐயராம நாயுடு | சென்னை |
| 1925 | புதுயுகம் | எஸ். வி. கனக சபை பிள்ளை | ,, |
| ,, | தினகரன் | டி. இராகவாச்சாரி | ,, |
| ,, | சன்மார்க்க பாநு | பி. சீனிவாசலு நாயுடு | இராணிப்பேட்டை |
| ,, | கொங்கு மண்டலம் | டி. ஏ. முத்துசாமி கோனார் | திருச்செங்கோடு |
| ,, | கொங்கு நாடன் | பி. ஆறுமுகம் பிள்ளை | ஈரோடு |
| ,, | மணிவாசகம் | எம். எஸ். மாணிக்கவாசகம் | சென்னை |
| ,, | தமிழர் | யு. கே. பஞ்சரத்தினம் | திருச்சி |
| ,, | தமிழ்ப் பொழில் | ரா. வெங்கடாசலம் பிள்ளை | தஞ்சாவூர் |
| ,, | தெய்வீகன் | எம். துரைசாமி நாடார் | திருச்சி |
| 1926 | நமது பரத க்ண்டம் | வி. சூரிய நாராயண சாஸ்திரி | சென்னை |
| | ஆனந்த விகடன் | எம். எஸ். வைத்திய நாத ஐயர் | ,, |
| | ஆனந்த குண போதினி | எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு | |
| | தமிழ் உலகம் | டி.வி. கோபாலய்யா | ,, |
| | [illegible]மரசம் | எம். ஏ. வரதராஜ முதலியார் | விழுப்புரம் |
| | ஆனந்த விஜயன் | எஸ். டி. பாலய்யா பிள்ளை | ஈரோடு |
| | [illegible]ருதி | வி. கே. சடகோபாச்சாரி | சென்னை |
| | [illegible]நாதனி | டி. என். நடராஜன | ,, |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1926 | அருணகிரி | எஸ். ஆர். இராமநாதன் | சென்னை |
| 1927 | காமதேனு | கே. எஸ். சுப்பிரமணிய ஐயர் | கோபி செட்டி பாளையம் |
| ,, | உதய பாரதி | பி. இராமசாமி அய்யங்கார் | திருநெல்வேலி |
| ,, | அறிவு விளக்கம் | ஏ. கிருஷ்ணசாமி பிள்ளை | உடுமலைப் பேட்டை |
| ,, | இந்தியத் தாய் | ஜி. சுப்பிரமணிய ஐயர் | திருவரங்கம் |
| ,, | மித்திரன் | ஜே. பி. ரொட்ரிக்ஸ் | தூத்துக்குடி |
| ,, | வனவாசி | எம். சி. வி. ஈஸ்வர ஐயர் | சென்னை |
| ,, | அருட்பிரகாசம் | டி. ஜி. வரதராஜன் | தில்லையாடி |
| ,, | பிராமணன் | சி. சுப்பிரமணிய நாடார் | மதுராந்தகம் |
| 1928 | தேச நேசன் | வி. என். சாமா ராவ் | சென்னை |
| ,, | இராஜேஸ்வரி | எஸ். ஜி. இராமலிங்க ஐயர் | மதுரை |
| ,, | உலக ஊழியன் | கே. நாட்டார் கோனார் | திருநெல்வேலி |
| ,, | விவேக பாநு | எஸ். கோவிந்தசாமி பிள்ளை | சென்னை |
| ,, | அமிர்தகுண போதினி | எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு | ,, |
| ,, | இந்தியன் | கே. வெங்கடராவ் | ஆதமன் கோட்டை |
| ,, | பித்தன் | கே. எம். இராமசாமி | சென்னை |
| 1929 | பாரதி | ஆர். நாராயணசாமி | உத்தமபாளையம் |
| ,, | செந்தமிழ்ப் பாநு | வி. செல்லைய்ய செட்டி | விஜயபுரம் |
| ,, | தர்மவிகாசம் | கே. எஸ். இராமசாமி ஐயர் | சென்னை |
| ,, | கலாநிதி | ஆர். வைத்தியநாத சர்மா | தெட்டகுடி |
| ,, | உண்மை விளக்கம் | பி. எம். நாச்சியப்ப நாடார் | விருதுநகர் |

| | | | |
|---|---|---|---|
| 1930 | பால வித்யா | என். வெங்கட்டராமன் | கும்பகோணம் |
| | சென்னைச் சகோதரன் | ஒய். சி. கே. பாணி | சென்னை |
| 1923 | ஜீவகாருண்யம் | எஸ். எஸ். இராமச்சந்திர கணபதி | ,, |
| 1930 | நவமணி | எஸ்.ஆர்.எம். இராமநாத முதலியார் | பல்லட்டூர் |
| | நவீன பாரதி | எஸ். சுப்பிரமணியம் | உத்தமபாளையம் |
| 1920 | நவசக்தி | திரு. வி. கல்யாண சுந்தர முதலியார் | சென்னை |
| 1931 | தேச கதா மஞ்சரி | எம். வி. கோவிந்தராஜ ஐயங்கார் | சேலம் |
| ,, | ஜீவரக்ஷகன் | கே. எஸ். மல்லிநாதன் | சென்னை |
| ,, | ஆனந்த லட்சுமி | கே. பாட்சா நாயுடு | ,, |
| ,, | கானவித்யா பிரகாசினி | வி. ஆனந்த கிருஷ்ணன் | திருவைகுண்டம் |
| ,, | லோகரஞ்சனி | என். எஸ். சீனிவாசன் | நாவல்பாக்கம் |
| ,, | தமிழகம் | ஏ. கே. சந்திரசேகரன் | சென்னை |
| 1932 | இந்திய ஒளி | கே. ஏ. ஏ. ஹமீது சாகிபு | திருச்சி |
| ,, | கலைமகள் | டி. எஸ். இராமச் சந்திர ஐயர் | சென்னை |
| ,, | புலவர் | டாக்டர் பி. முகைதீன் | ,, |
| ,, | பாரத ஜோதி | டி. சி. நாராயணசாமி | ,, |
| ,, | சன்மார்க்கன் | சி. சுவாமி சிவநேசம் | பழனி |
| ,, | விநோதன் | பி. கோபாலசாமி நாயுடு | சென்னை |
| 1929 | தமிழரசு | டாக்டர் எம். மாசிலாமணி முதலியார் | ,, |
| 1933 | பிரசண்ட விகடன் | நாரண துரைக்கண்ணன் | ,, |
| ,, | சச்சிதானந்தம் | கே. ஜகதீச ஐயர் | ,, |
| ,, | தமிழ் மணம் | எஸ். ஏ. சுப்பராய பிள்ளை | துத்துக்குடி |
| ,, | உதயன பத்திரிகை | டி. டி. தாத்தாச்சார்யா | திருவாடி |
| ,, | வம்பன் | டி. இராம நாத பிள்ளை | சென்னை |
| ,, | ஆராய்ச்சி | எஸ். கே. இராமசாமி | நாகப்பட்டினம் |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1933 | ஜனானுகூலன் | எஸ். ஏ. இராமச்சந்திரன் | பாளையங்கோட்டை |
| ,, | வசந்த விகடன் | எஸ். ஜி .ராமலிங்கம் | மதுரை |
| ,, | விநோத நேசன் | வி. டி. முனுசாமி பிள்ளை | சென்னை |
| ,, | களி ராட்டை | டாக்டர் டி. வி.எஸ். சாஸ்திரி | திருச்சி |
| ,, | குமார விகடன் | டி. கே. சாமி | காஞ்சிபுரம் |
| ,, | குறும்பன் | எஸ். சுந்தரேச ஐயர் | வேலூர் |
| ,, | 'லீடர்' | கே. ஏ. அப்துல் ஹமீது | திருச்சி |
| 1934 | விகட சக்கரம் | பி. வைத்திய நாத ஐயர் | சென்னை |
| ,, | நவீனம் | சி. எம். வேதாசலம் | ,, |
| ,, | கலிகாலம் | எஸ். ஜி. இராமலிங்கம் | ,, |
| ,, | கொங்குமலர் | சி. எம். இராமசந்திர செட்டியார் | கோவை |
| ,, | நகைக் களஞ்சியம் | எஸ். ஜே. அண்ணாவியார் | மெய்ஞானபுரம் |
| ,, | ஹாஸ்யன் | வி. கே. வேணுகோபாலன் | சென்னை |
| ,, | விஸ்வபந்து | டி. எம். நடராஜன் | காரைக்குடி |
| 1935 | கேசரி | சி. நாகப்பன் | கோயம்புத்தூர் |
| ,, | ஜீவரத்தினம் | ஜி. தங்கப்பழம் | சாயர்புரம் |
| 1936 | அறிவு | ஏ. இராகவன் | சாத்தாங்குளம் |
| ,, | இந்திய வாலிபன் | திரிலோக சீதாராம் | துறையூர் |
| ,, | கற்பக சோலை | பி. சீனிவாசன் | சித்தூர் |
| ,, | சௌந்தர்ய லட்சுமி | ஆர். பார்த்தசாரதி | சென்னை |
| ,, | அன்னை பாரத தேவி | டி. வி. பாண்டுரங்கம் | உறையூர் |
| 1937 | தனலட்சுமி | வி. கே. நீலகண்டய்யா | விளாத்தி குளம் |

Registered No. M-520. வருட சந்தா ரூபா 2.

# CHAKRAVARTINI.

A TAMIL MONTHLY DEVOTED MAINLY TO THE ELEVATION OF INDIAN LADIES

# சக்ரவர்த்தினி.

தமிழ் நாட்டு மாதர்களின் அபிவிருத்தியே நோக்கமாக வெளியிடப்படும் மாதாந்தரப் பத்திரிகை.

Vol. II. } Madras. August, 1906. { No. 1.

தொகுதி. II. } சென்னை 1906௵ ஆகஸ்டு மீ { : பகுதி. 1.

CONTENTS.

PAGE.



அட்டவணை.

பக்கம்.



P. Vaidyanathier, Proprietor.

C. Subramania Bharati, Editor.



THE IRISH PRESS,—MADRAS

பாரதியாரை ஆசிரியராகக் கொண்ட மாத இதழ் (1906-ஆகஸ்டு)

| | | | |
|---|---|---|---|
| 1930 | சித்தன் | சி. பி. சாமி | பழனி |
| 1934 | தமிழ்த் தாய் | இ. மு. சுப்பிரமணிய பிள்ளை | திருநெல்வேலி |
| 1935 | ஆனந்தக் கூத்தன் | ஆர். சுந்தரம் | திருச்சி |
| ,, | இளந் தமிழன் | பி. விருத்தகிரி | விழுப்புரம் |
| ,, | தாயகம் | எஸ். அருணாசலம் | துறையூர் |
| 1937 | காலச் சந்திரன் | எஸ். இ. எம். மௌலானா | ,, |
| ,, | பாரத பக்தன் | எஸ். ஏ. சுப்பராய பிள்ளை | தூத்துக்குடி |
| ,, | ஆசிய ஜோதி | பி. வி. ஐயராம சாஸ்திரி | திருச்சி |
| ,, | வசீகரன் | எஸ். கிருஷ்ணமூர்த்தி | சிதம்பரம் |
| 1938 | நவயுவன் | எம். எம். புகாரி | கிவாளூர் |
| ,, | ஹனுமான் | சங்கு சுப்பிரமணியம் | சென்னை |
| ,, | மானிட இன்பம் | கே. வெங்கட்டராவ் | சேலம் |
| ,, | வானொலி | விக்டர் பரஞ்சோதி | சென்னை |
| ,, | லோகோபகாரி | பரலி. சு. நெல்லையப்பர் | ,, |
| 1940 | அற்புதன் | ஏ. வி. நாயுடு | ஆரணி |
| ,, | சக்தி | வை. கோவிந்தன் | சென்னை |
| 1941 | காவேரி | என். ஆர். இராமாநுஜம் | கும்பகோணம் |
| ,, | ஜனசேவை | ஆர். கிருஷ்ணமூர்த்தி | சென்னை |
| 1942 | யுத்த சஞ்சிகை | டி. ஏ. வி. நாதன் | ,, |
| ,, | ஸ்ரீவேங்கட கிருபா | எஸ். சந்தான கோபாலகிருஷ்ணன் | திருப்பாதிரிப் புலியூர் |
| ,, | இளங்கதிர் | பி. சுப்பையா | பாளையங்கோட்டை |
| 1943 | கலைமலர் | பிலிப். சி. சலக்காப் | ,, |
| 1944 | இராஜேஸ்வரி | கே. சீனிவாசன் | ,, |
| ,, | வைகாசி மலர் | என். இராமசாமி | விருதுநகர் |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1935 | தியாகி | இராம சடகோபன் | சென்னை |
| 1940 | பாரத ஜோதி | எஸ். ஆர். வெங்கடேசுவரன் | கோவை |
| 1943 | வசந்தம் | ஆர். திருஞான சம்பந்தம் | ,, |
| 1944 | உதயம் | எஸ். ஆர். சாரங்கன் | ,, |
| 1945 | தமிழ் பிரபஞ்சம் | என். சி. நரசிம்மாச்சாரி | சென்னை |
| ,, | ஸ்ரீபாரதி | எம். எஸ். ராஜன் | ,, |
| ,, | மிராசுதார் | வி. ராமமூர்த்தி | மாயவரம் |
| 1947 | தமிழணங்கு | அ. மு. சிவஞானம் | வாணியம்பாடி |
| ,, | அழகு | ந. அறிவழகன் | சென்னை |
| ,, | இளைஞன் | கே. ஏ. அப்துல் ரஷீத் | ஈரோடு |
| ,, | பாரி ஜாதம் | வி. எஸ். இராமகிருஷ்ணன் | சென்னை |
| ,, | பாசரசு | எம். எஸ். பாசு | ,, |
| ,, | சென்னை ஜூனியர் | திருமதி திரில்பி கில்பர்ட்டு | ,, |
| ,, | தமிழகம் | எம். எஸ். சஞ்சீவிராஜ் | திருச்சி |
| ,, | தமிழ்க்கலை | அ. மு. பரமசிவானந்தம் | சென்னை |
| ,, | தமிழ் முரசு | ம. பொ. சிவஞானம் | ,, |
| ,, | தமிழ்த் தென்றல் | வி. வி. இராமசாமி | விருதுநகர் |
| ,, | வள்ளுவர் | கே. விஸ்வலிங்க நாயனார் | சென்னை |
| ,, | தேச சேவை | பிட்சுசாமி | கோவை |
| ,, | இணக்கம் | எம். ஏ. துரையரங்கசாமி பிள்ளை | சென்னை |
| ,, | மாதமணி | டி. சி. இராமசாமி | கோவை |
| ,, | மாறநாடு | பிரான்சிஸ் ரோஸஸ் | திருநெல்வேலி |

| | | | |
|---|---|---|---|
| 1947 | விருந்து | த.நா. குமாரசாமி | சென்னை |
| ,, | முல்லை | பாரதிதாசன் | ,, |
| ,, | சிற்பி | இ. ஜெர்வாஸ் | ,, |
| ,, | திருக்குறள் ஆட்சி | ஆர். கே. அரங்கசாமி | இராசிபுரம் |
| ,, | வீரமுரசு | வி. நடராஜன் | சென்னை |
| ,, | தமிழ் மழை | எஸ். எம். முனுசாமி | ,, |
| ,, | தென்றல் | ''குயிலன்'' | ,, |
| ,, | நாடோடி | நாடோடி வெங்கட்டராமன் | ,, |
| ,, | விசுவ ஜோதி | வி. இராஜேஸ்வரன் | ,, |
| 1948 | தமிழ் மகள் | கே. எஸ். இராமய்யா | ,, |
| ,, | கல்பலதா | எஸ். சேதுராம சர்மா | கும்பகோணம் |
| ,, | மஞ்சரி | தி. ஜ. ர. பொறுப்பாசிரியர் | சென்னை |
| ,, | அசோகா | வி. சுப்பிரமணியம் | ,, |
| ,, | பாபுஜி | ஜி. சதாசிவம் | ,, |
| ,, | புது வாழ்வு | க. அன்பழகன் | ,, |
| ,, | சுதந்திர தேவி | கோரக் வி. நடராஜன் | ,, |
| ,, | தேனீ | எம். வி. வெங்கட்டராம் | கும்பகோணம் |
| ,, | கலைக்கதிர் | ஜி. ஆர். தாமோதரன் | கோயம்புத்தூர் |
| 1949 | ஜனசேவை | ஆர். கிருஷ்ணமூர்த்தி | சென்னை |
| ,, | ஸ்ரீவாஸவ கன்னிகா | எஸ். பெருமாள் செட்டியார் | ,, |
| ,, | அமிர்த வசனி | எஸ். முத்துசாமி | ,, |
| ,, | கலைக் களஞ்சியம் | ஏ. சண்முகவேலன் | ,, |
| ,, | மகிழ்ச்சி | என். சதானந்தம் | விருதுநகர் |
| ,, | ஜோதி நிதி | டி. எஸ். சர்மா | ஈரோடு |
| ,, | மோகினி | பி. சீதாராமய்யா | சென்னை |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
| --- | --- | --- | --- |
| 1946 | பொன்னி | முருகு சுப்பிரமணியன் | புதுக்கோட்டை |
| ,, | இணைக்கம் | வி. நடேச பிள்ளை | சென்னை |
| 1949 | ஆனந்தோதயம் | பி. எம். கண்ணன் | ,, |
| ,, | தமிழர் நாடு | கி. ஆ. பெ. விசுவநாதம் | திருச்சி |
| ,, | மானசீகம் | பி. சோமசுந்தரம் | கோவை |
| ,, | அமுத சுரபி | டி. கே. சாமி | சென்னை |
| ,, | அருட்பெருஞ் ஜோதி | எம். இராஜ மாணிக்கம் | ,, |
| ,, | செம்பிறை | வி. எஸ். இஸ்மாயில் | ,, |
| 1950 | பார்வதி | வி. நமசிவாயம் | ,, |
| ,, | ரதி | ஓய். வி. ராவ் | ,, |
| ,, | ஆயர் விடுதலை | எஸ். கே. தாஸ் | தூத்துக்குடி |
| ,, | மணிக்கொடி (ii) | பி. எஸ். இராமய்யா | சென்னை |
| ,, | நவநீதம் | ஆர். எஸ். கிருஷ்ணசாமி | ,, |
| ,, | மஞ்ஜூஷா | கி. சாம்பசிவராவ் | சென்னை |
| ,, | நீர் வீழ்ச்சி | வி. ஞான தேசிகன் | ராஜபாளையம் |
| ,, | வாழ்க்கை | என். பாலசுந்தரம் | சென்னை |
|  | வைப்பாறு | பி. ராஜாமணி | சாத்தூர் |
|  | அருணன் | எல். அருணாசலம் | காரைக்குடி |
|  | கலைஞன் | சி. எஸ். ஐயராமன் | சிதம்பரம் |
|  | முத்தம் | பி. எல். பழனியப்பன் | நேமம்பட்டி |
|  | தமிழரசி | பி. வி. சந்திர சேகரன் | மதாக்கின் |
| 1951 | அஞ்சலி | பி. சுந்தரம் | சென்னை |

| | | | |
|---|---|---|---|
| 1935 | சிவாஜி | டி. என். இராமசந்திரன் | திருச்சி |
| 1942 | தமிழன் | சி. பா. ஆதித்தனார் | சென்னை |
| 1943 | வசந்தம் | ஆர். திருஞான சம்பந்தம் | கோவை |
| ,, | குமரிமலர் | ஏ. கே. செட்டியார் | சென்னை |
| ,, | வெண்மதி | டி. எஸ். இராஜலட்சுமியம்மாள் | ,, |
| 1944 | முன்னோடி | ரெவ. ஹோர்மன்ட் | சேலம் |
| 1946 | ரம்பா | ஆர். ரங்க ராஜன் | சென்னை |
| ,, | சேவா | என். சீனிவாச ராகவன் | ,, |
| ,, | சூர்யா | வி. சுந்தரராஜன் | நாகப்பட்டினம் |
| ,, | பொற்குவியல் | எம். ஏ. தனபாக்கியம் | கும்பகோணம் |
| ,, | புயல் | டி. எஸ். எஸ். மணி | சென்னை |
| 1947 | சர்வோதயம் | என். இராமசாமி | வீரபாண்டி (திருப்பூர்) |
| ,, | சிரஞ்சீவி | டி. சம்பந்தம் | சென்னை |
| 1950 | தேன்கூடு | கே. பி. எம் தர்மன் | மதுரை |
| ,, | தமிழ் இளைஞன் | ஆர் தர்மன் | திருப்பாதிரிப் புலியூர் |
| 1951 | நாட்டிய மாலா | எஸ். எஸ். சர்மா | சென்னை |
| 1953 | குடும்பக்கலை | கே. வெங்கட்ட ராவ் | ,, |
| | உமா | ஜி. உமாபதி | ,, |
| ,, | இன்பக்கலை | டி. டி. சொக்கலிங்கம் | ,, |
| ,, | கெரோபெட் செய்தி | கே. எஸ். பரமேசுவரன் | ,, |
| 1954 | தாரகை | எச். மகமத் | காட்டுமன்னார் கோயில் |
| ,, | திரட்டு | இ. பாலசுப்பிரமணியம் | சென்னை |
| ,, | சந்திரிகை | டி. எச். ராவ் | ,, |
| 1966 | முப்பால் ஒளி | கா. அப்பாத்துரை | ,, |
| 1983 | வாழுந் தமிழகம் | பழனி பெரியசாமி | அமெரிக்கா |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1947 | குருகுலம் | என். பி. தணிகையரசு | வாலாஜாபாத் |
| 1951 | அஞ்சல் | என். முத்துக்குமாரசாமி | பேராவூரணி |
| 1952 | உலகம் | ஆர். தயாநிதி | திருச்சி |
| 1953 | தட்சிண மித்திரன் | எல். டி. மதுரம் | மதுரை |
| ,, | விஜயா | டி. கிருஷ்ணசாமி | சென்னை |
| 1954 | அரசன் | ஏ. எம். பாட்சா | நெம்மாரா (கேரளா) |
| ,, | மனிதன் | வி. கோவிந்தன் (விந்தன்) | சென்னை |
| ,, | சாந்தி | சிதம்பர ரகுநாதன் | திருநெல்வேலி |
| ,, | தமிழன் | ரெங்கசாமி (மாஜினி) | மதுரை |
| ,, | திருவிடம் | ஜி. கேசவன் | சென்னை |
| 1955 | அரன் | வி. வி. முருகேச பாகவதர் | ,, |
| ,, | அசரீரீ | கே. என். இராமசாமி | அம்மாபேட்டை |
| ,, | தரங்கி | வேதிகுண்டு | திண்டுக்கல் |
| ,, | சங்கொலி | மயிலை பி. சீனிவாசன் | சென்னை |
| ,, | விநோதன் | ஆர். ரங்க நாயகியம்மாள் | ,, |
| ,, | கலாவல்லி | பி. எம். கண்ணன் | ,, |
| ,, | கமலம் | என். வி. கனக சபை | ,, |
| ,, | கன்னித்தமிழ் | எல். சேஷாத்திரி | கும்பகோணம் |
| 1948 | முஸ்லீம் முரசு | என். பி. ரமீசா | சென்னை |
| ,, | மணிவிளக்கு | ஏ. கே. ஏ. அப்துல் சமத் | ,, |
| ,, | பாரதி | ரா. பத்மனாபன் | ,, |
| 1957 | தீபம் | நா. பார்த்தசாரதி | ,, |

| | | | |
|---|---|---|---|
| 1957 | தமிழன் குரல் | எஸ்.கே.டி.சௌந்தரபாண்டியன் | கோவில்பட்டி |
| 1959 | படைப்பு | ஆர். வி. பதி | சென்னை |
| ,, | சிவகாசி முரசு | எஸ். எஸ். வி. குருசாமி | சிவகாசி |
| ,, | கலை வேந்தன் | எஸ். எஸ். நாதன் | சென்னை |
| ,, | அமைச்சன் | கண. இராமநாதன் | ,, |
| 1961 | பேச்சு மேடை | காந்தி தாசன் | கோவை |
| 1962 | அரவிந்தம் | அரவிந்தம் | சென்னை |
| ,, | அன்பொலி | யோகி ராஜ வேதகிரி | ,, |
| ,, | கைவிளக்கு | பூதை. சொ. அண்ணாமலை | பூதப்பாண்டி |
| 1965 | கணையாழி | கி. கஸ்தூரி ரங்கன் | புது டெல்லி |
| ,, | கலாவல்லி | காண்டீபன் | சென்னை |
| ,, | கற்பணை | ஆர். பாலகிருஷ்ணன் | கல்கத்தா |
| | கதிர் | ப. புகழேந்தி | சென்னை |
| ,, | உலகம் | காஞ்சி அமிழ்தன் | ,, |
| 1966 | பூஞ்சோலை | தி. மு. முகம்மது அலி | காரைக்கால் |
| ,, | இராவணன் | எம். எஸ். இளஞ்சேரன் | பந்தநல்லூர் |
| ,, | அறிவாலயம் | சி. குலசேகரன் | சென்னை |
| 1967 | சிந்தனைக் களஞ்சியம் | சிந்தனைவாணர் | ,, |
| ,, | இளைஞர் உலகம் | கே. எஸ். ராஜன் | ஈரோடு |
| ,, | பூ | என். அம்மையப்பர் | கோவை |
| ,, | புதிய தலைமுறை | எ. புவனேசுவரி | ,, |
| ,, | குமரிக் கடல் | பி. ஆர். லாட்டா | நாதர் கோவில் |
| ,, | மல்லிகை | சேதரசு | இராமநாதபுரம் |
| 1967 | கபிலர் | வே, கபிலன் | சென்னை |
| ,, | வானளில் | சிரஞ்சீவி | தேவகோட்டை |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1967 | பாரதிதாசன் குயில் | சு. மன்னர் மன்னன் | புதுவை |
| 1970 | அன்னை நிலம் | க. ர. நல்ல சிவம் | ஈரோடு |
| ,, | மனம் | சேர சச்சிதாநந்தம் | சேலம் |
| ,, | செம்மலர் | கே. முத்தையா | மதுரை |
| 1971 | பிறைசூடி | எஸ். சந்திரசேகரன் | திருவிதாங்கோடு |
| ,, | மாலா | எஸ். எஸ். சர்மா | சென்னை |
| ,, | கடுகு | திருவை சி. ஐயப்பன் | நாகர் கோவில் |
| 1972 | தேன் மழை | வள்ளுவன் கிளாரன்சு மேத்தா | சென்னை |
| ,, | தேன் துளி | எஸ். லட்சுமி | ,, |
| ,, | இளந் தமிழன் | நா. ரா. நாச்சியப்பன் | ,, |
| 1973 | வாய்மை | எம். அப்துல் சத்தார் | திருச்சி |
| ,, | ஜெயந்தி | நெ. சி. சாம்பமூர்த்தி | சென்னை |
| ,, | ஏப்ரல் | கஜேந்திர பாஸ்கரன் | பாண்டிச்சேரி |
| 1974 | தஞ்சை அமுதம் | ந. தருமலிங்கம் | தஞ்சாவூர் |
| ,, | உலக நாடகம் | எஸ். டி. சுந்தரம் | சென்னை |
| ,, | முகில் | இளஞ் செழியன் | ,, |
| ,, | ஒன்றே முக்கால் பக்கம் | சுப நாராயணன் | ,, |
| ,, | அஞ்சாமை | எம். சி. அசுமல்லா | மரவக் குறிச்சி |
| ,, | பனித்துளிகள் | இ. பா. சரசு | பரமக்குடி |
| 1975 | தோகை | ஆற்றலரசு | சேலம் |
| ,, | சங்கொலி | சோலை இருசன் | ,, |
| ,, | விடியல் | கே.எம். வேணுகோபாலன் | சென்னை |

## மாதமிருமுறை

| | | | |
|---|---|---|---|
| 1841 | உதய தாரகை | ஹென்றி மார்ட்டின் | மானிப்பாய் (இலங்கை) |
| ,, | ஜனசிநேகன் | கிறிஸ்தவ சமயத்தினர் | சென்னை |
| 1842 | அரோரா | அமெரிக்கன் மிசனரி | ,, |
| 1876 | கத்தோலிக்க பாதுகாவலன் | பிலிப்பையா | இலங்கை |
| 1883 | சுகுண போதினி | இ. பாலசுந்தர முதலியார் | சென்னை |
| 1887 | மகாராணி | வி. கிருஷ்ணமாச்சாரி | ,, |
| 1888 | இந்து நேசன் | | பினாங்கு |
| 1889 | இந்து சாதனம் | நல்லூர் த. கைலாசப் பிள்ளை | யாழ்ப்பாணம் |
| 1902 | திருச்சி நேசன் | எம். டி. சுப்பிரமணிய பிள்ளை | திருச்சி |
| 1915 | வர்த்த மித்திரன் | கே. நடேச ஐயர் | தஞ்சை |
| 1926 | அபிநவமகயாவதி | எம். எஸ். ஏ. அப்துல் காதர் சாகிபு | சேலம் |
| 1931 | காந்தி | தெ.ச. சொக்கலிங்கம் | சென்னை |
| 1933 | விசித்திரன் | ஏ. கே. சந்திரசேகரன் | சென்னை |
| 1934 | பெரிய கோயில் | எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் | திருவரங்கம் |
| ,, | சகோதரன் | வி. ஜி. தாஸ் | சாயர்புரம் |
| 1936 | பாரத கேசரி | எல். ஏ. கபூர் | திருச்சி |
| 1938 | மணிக்கொடி | கே. சீனிவாசன் | சென்னை |
| 1940 | காமதேனு | ஆர். எஸ். பதி | ,, |
| ,, | மாலதி | வீர. சிதம்பரம் | ,, |
| 1941 | கல்கி | ரா. கிருஷ்ணமூர்த்தி | ,, |
| 1942 | தென்னாடு | டாக்டர் ஈ. சுப்பிரமணியம் | ஆம்பூர் |
| 1943 | கலாமோகினி | வி. ஆர். இராஜகோபாலன் | திருச்சி |
| 1950 | அனல் | ஆர். ஞானமாணிக்கம் | ,, |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1943 | வீரசக்தி | கோ. நீ. அண்ணாமலை | கோவை |
| ,, | ஆராய்ச்சி மணி | கே. கே. சாமி | திருச்சி |
| ,, | ஜெய் பாரத் | சந்தான கிருஷ்ணன் | சென்னை |
| ,, | நீதி | வி. எஸ். இராமசாமி | குகலூர் |

## வார இதழ்கள்

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1877 | கத்தோலிக்க பாதுகாவலன் | கத்தோலிக்க சமய வெளியீடு | இலங்கை |
| 1832 | தினவர்த்தமானி | ரெவ. பெர்சிவல் பாதிரி | சென்னை |
| 1882 | சுதேச மித்திரன் | ஜி. சுப்பிரமணிய ஐயர் | ,, |
| 1889 | உதயபாநு | பெ. காத்திகேய பிள்ளை | இலங்கை |
| 1910 | திருநாள் நேசன் | ஏ. பெஹல்பெர்க்கு | தரங்கம்பாடி |
| 1912 | பாலிய சஞ்சாரி | திருமதி. டி. ஆலன் | வேலச்சேரி |
| 1916 | சைபுல் இஸ்லாம் | மௌலவி அகமத்சயித் | சென்னை |
| 1919 | இந்திய மித்திரன் | ஜி. ஏ. வைத்தியராமன் | ,, |
| ,, | இந்திய தேசாந்திரி | டி. கே. சுவாமிநாதன் | ,, |
| 1920 | சமரச போதினி | இ. சூரியநாராயண ஐயர் | தஞ்சாவூர் |
| 1921 | சுகோதயம் | வி. என். ரங்கசாமி அய்யங்கார் | ஆரணி |
| 1927 | நவநீதம் | எம். எம். புகாரி | சிங்கப்பூர் |
| 1928 | கலா நிலையம் | ஈ. குமரய்யா | சென்னை |
| 1931 | புண்ணியபூமி | பி. எம். துரைசாமி ஆச்சாரி | ,, |
| ,, | விடுதலை | வி. எம். சாமிநாதன் | திருச்சி |

| | | | |
|---|---|---|---|
| 1901 | இந்து நேசன் | எல். அனந்தய்யர் | சென்னை |
| 1929 | சுதேச மித்திரன் | சி. ஆர். சீனிவாசன் | ,, |
| 1932 | "தென்னாலிராமன்" | எஸ். கே. கணபதி ஐயர் | ,, |
| 1933 | விஜய கேசரி | டி. எஸ். சுந்தரம் பிள்ளை | திருச்சி |
| ,, | இந்தியத் தாய் | ஆர். ஆனந்த ராவ் | தர்மபுரி |
| ,, | நாரதர் | எஸ். எஸ். வாசன் | சென்னை |
| 1935 | சிவாஜி | டி. சிவஞானம் | திருச்சி |
| ,, | லோகசக்தி | எம். கே. திருவேங்கடம் | சென்னை |
| 1936 | தேவஸ்தான பத்திரிகை | எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் | திருச்சி |
| 1938 | நம் நாடு | பி. கோபாலரத்தினம் | சென்னை |
| ,, | பாரத் நாடு | டி. கே. ஜகன்னாதாச்சாரியார் | ,, |
| ,, | நாடோடி | எம் எஸ். விசுவநாதன் | ,, |
| 1939 | பாரத தேவி | வி. ராமசாமி | ,, |
| ,, | பாரத மணி | கா. சீ. வேங்கட்டரமணி | ,, |
| ,, | ஜனசேவை | கே. பி. திருவேங்கடம் | ,, |
| 1940 | சங்க நாதம் | ஆர். கிருஷ்ணசாமி | ,, |
| 1942 | மதுரை முரசு | எஸ். பி. ஆதித்தன் | மதுரை |
| ,, | தமிழன் | சி. பா. ஆதித்தன் | ,, |
| ,, | திராவிட நாடு | சி. என் அண்ணாதுரை | காஞ்சீபுரம் |
| 1945 | புது உலகம் | டி. ஆர். நடராஜன் | சென்னை |
| ,, | தமிழ் உலகம் | வி எஸ். வெங்கட்டராமன் | ,, |
| 1946 | தமிழ் ஹரிஜன் | திரிகூட சுந்தரம் பிள்ளை | ,, |
| 1947 | வெள்ளிமணி | எம். எஸ். விசுவநாதன் | சென்னை |
| ,, | ஜனதா | வி. ஆர். இராதாகிருஷ்ணன் | ,, |
| ,, | காமகோடி | பி. வி. ரங்காச்சாரியார் | கும்பகோணம் |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1946 | காண்டீபம் | எஸ். எஸ். மாரிசாமி | சென்னை |
| 1948 | ஆஸாத் | மௌலானா அப்துல் ஹகீம் | கும்பகோணம் |
| ,, | நந்தினி | ஏ. குப்புசாமி | திருச்சி |
| 1949 | மான் | கலைவாணன் | சென்னை |
| ,, | அரும்பு | இ. எல்லப்பன் | கோவை |
| ,, | ஈரோட்டு வாசி | எஸ். பி. சண்முக வேலாயுதம் | ஈரோடு |
| ,, | உடுமலை பீரங்கி | பி. ரங்க நாதன் | சென்னை |
| ,, | பேனா முனை | ஏ. அருணாசலம் | ,, |
| ,, | நெல்லைச் செய்தி | என். சோமயாஜுலு | திருநெல்வேலி |
| 1950 | அமிர்த சஞ்சீவி | இராம. நாச்சியப்பன் | காரைக்குடி |
| ,, | ஜனமணி | வி. பி. கோபாலகிருஷ்ணன் | சென்னை |
| ,, | சங்கநாதம் | பி. ஆர் சாமி நாதன் | சிவகங்கை |
| ,, | தியாக பூமி | எம். முத்துவேலு | சென்னை |
| ,, | தூண்டுகோல் | எம். ஆர் இராதா | ,, |
| ,, | அறப்போர் | ஆர். வீரமுத்து | கும்பகோணம் |
| ,, | ஆர்ய தர்மம் | ஏ. கோபால தேசிகாச்சாரியார் | ,, |
| ,, | சாணக்யா | வி. ஆர். சந்தானம் | சென்னை |
| ,, | செட்டி நாடு | பாலகவி. இராமநாதன்செட்டியார் | காரைக்குடி |
| 1950 | குடியாட்சி | பி. அண்ணாமலை | சென்னை |
| ,, | முழக்கம் | எஸ். பாலு | மதுரை |
| ,, | முல்லைக்கொடி | இளவழகனார் | மாம்பாக்கம் |
| ,, | நீதிக் களஞ்சியம் | ஜி. எம். இரத்தினம் | சென்னை |

| | | | |
|---|---|---|---|
| 1927 | ஹநுமான் | ஜே. எஸ். வாசன் | சென்னை |
| 1887 | உலக நேசன் | | பினாங்கு |
| 1950 | பொய்யா மொழி | எம். பாஸ்கர நாயர் | ஜலகண்ட சோழபுரம் |
| ,, | இடி | பண்டிட். ஜெயிலானி விஷாரல் | தாராபுரம் |
| 1951 | முன்னேற்ற முரசு | பி. ராமசாமி | சென்னை |
| ,, | பொள்ளாச்சிவாசி | பி. எஸ்.வேலுசாமி | பொள்ளாச்சி |
| ,, | மதுரை மலர் | கே. பழனியப்பன் | மதுரை |
| ,, | குறள் மலர் | திறக்குறள் முனுசாமி | திருச்சி |
| ,, | பிரம்படி | எம். எம். ஜாமில் | சென்னை |
| ,, | மக்கள் மன்றம் | கே. ஆறுமுகம் | ,, |
| ,, | போராட்டம் | எம். என். இராஜமாணிக்கம் | திருவத்திபுரம் |
| ,, | விடிவெள்ளி | விஜய பாஸ்கரன் | சென்னை |
| ,, | மந்திரி | பழ. வ. பழனியப்பன் | சேலம் |
| 1952 | மக்கள் தூதன் | ஆர். என். கண்ணபிரான் | ,, |
| ,, | பேரிகை | எஸ். எஸ். மாரிசாமி | சென்னை |
| ,, | இமயம் | ,, | ,, |
| 1953 | தினமணி கதிர் | ஏ. என். சிவராமன் | ,, |
| 1954 | யதார்த்த வசனி | ஹேமாவதி கோல்பத் | கும்பகோணம் |
| | சைபுல் இஸ்லாம் | புதன்கிழமை தோறும் வெளியாகியது | பர்மா |
| 1954 | புதுயுகம் | ஆர். ராமநாதன் | சென்னை |
| ,, | தம்பி | தில்லை வில்லாளன் | சிதம்பரம் |
| ,, | வாரச் செய்தி | டி, என். நாராயணன் | காரைக்குடி |
| ,, | கலை மன்றம் | பால்வண்ணன் | சென்னை |
| ,, | தென்றல் | கண்ணதாசன் | ,, |
| 1951 | மறுமலர்ச்சி | ஏ. எம். யூசுப் | திருச்சி |
| 1954 | புத்துயிர் | எஸ். என். நரசிம்மராஜு | சேலம் |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் (அ) வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| 1929 | இந்திய மித்திரன் | பி. வேணுகோபால் நாயுடு | ஈப்போ |
| 1949 | இனமணி | த. வ. மு. மகாலிங்கம் | ,, |
| 1954 | திரும்பிப் பார் | எஸ். வேலன் | சென்னை |
| ,, | வழிகாட்டி | டி. ராகவன் | ,, |
| ,, | விஜய | என். சோமயாஜுலு | திருநெல்வேலி |
| 1955 | காந்தி | வி. பி. கோபால கிருஷ்ணன் | சென்னை |
| ,, | சங்கப் பலகை | சின்ன அண்ணாமலை | ,, |
| ,, | சண்முகா | எஸ். என். கிருஷ்ணமூர்த்தி | மதுரை |
| ,, | தமிழ் முழக்கம் | கா. மு. ஷெரிப் | சென்னை |
| ,, | தியாக பூமி | ஓ. கே. வைத்தியநாதன் | ,, |
| ,, | விக்டரி | | மதுரை |
| ,, | பிரங்கி பதுமை | எஸ். எஸ். குப்புராஜு | திண்டுக்கல் |
| ,, | டைஜஸ்ட் | பி. கே. நாகசாமி | மதுரை |
| 1957 | எழுச்சி | வி. கே. சுப்பிரமணியம் | பினாங்கு |
| 1959 | காவலன் | கே. அண்ணாமலை | சுங்கைசிட்புட் |
| 1946 | சக்தி | கே. ராதா | பினாங்கு |
| 1951 | சங்கமணி | தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் | கோலாலம்பூர் |
| | சமத்துவன் | சின்னத்தம்பி | ,, |
| 1936 | சமுதாய ஊழியன் | ஆர். இராம நாதன் | ,, |
| 1947 | சிறம்பான் செய்தி | ராம. சின்னையா | சிறம்பான் |
| 1965 | கண்ணோட்டம் | கல்ச்சார அமைச்சு | சிங்கப்பூர் |

| | | | |
|---|---|---|---|
| 1915 | மகா யுத்த சமாசார பத்திரிகை | | கோலாலம்பூர் |
| 1933 | தேச நேசன் | ஹமீது தனஞ்சியம் | பினாங்கு |
| ,, | நவநீதம் | எம். எம். புகாரி | சிங்கப்பூர் |
| 1934 | ஜனவர்த்தமானி | எம் எஸ். மணியம் | பினாங்கு |
| 1937 | தேசாபிமானி | எம். ஜெகதாசன் | ,, |
| ,, | தொழிலாளி | ரெ. சீனிவாசன் | கோலாலம்பூர் |
| 1941 | ஜெயமணி | சா. சுப்பிரமணியம் | ,, |
| | ஜேய்ஹிந்த் | ஆதி. நாகப்பன் | பினாங்கு |
| 1943 | சிறம்பான் கெஜட் | ராம சின்னையா | சிறம்பான் |
| 1946 | பாட்டாளி முரசு | வீரசேனன் | சிங்கப்பூர் |
| ,, | மலாயா வர்த்தமானி | எஸ். பிச்சைப்பிள்ளை | கோலாலம்பூர் |
| 1963 | செங்கதிர் | ஆர். இரத்தினவேலு | ,, |
| 1964 | தேச பக்தன் | டி. எஸ். கனகசுந்தரம் | பினாங்கு |
| 1965 | மலைநாடு | வி. மீனாட்சி சுந்தரம் | சுங்கைசிப்புட் |

## வார இரு முறை இதழ்

| | | | |
|---|---|---|---|
| 1946 | உரிமை | எம். மணியம் | ஈப்போ |
| ,, | தேஜோபிமானி | எஸ். அம்பலவாணப்பிள்ளை | பேராக் |
| 1948 | செந்தமிழ்ச் செல்வி | எஸ். முத்துசாமி | பினாங்கு |
| 1950 | மறைத்தமிழன் | பவுல் ஞானமுத்து | உசிலம்பட்டி |
| ,, | காந்தி நாடு | கே. பி. திருவேங்கடம் | கோவை |
| 1951 | குமுதம் | எஸ். ஏ. பி. அண்ணாமலை | சென்னை |
| ,, | மாதர் முன்னனி | ஆர். சிவானந்தம் | கரூர் |

| ஆண்டு | பெயர் | இதழாசிரியர் வெளியீட்டாளர் | இடம் |
|---|---|---|---|
| ,, | தாய் நாடு | எம். மோராய்ஸ் | மதுரை |
| ,, | ஜிங்லி | பி. வி. பார்த்தசாரதி | சென்னை |
| ,, | ஞாயிறு | ஏ. கே. வேலன் | கரந்தை |
| 1952 | துஞ்சை மணி | எஸ். கணபதி | கும்பகோணம் |
| ,, | கிளர்ச்சி | ஆர். எஸ். தங்கப்பழம் | திருமங்கலம் |
| ,, | சௌராஸ்டிரமணி | பி. ஆர். கோவிந்தசாமி | கும்பகோணம் |
| 1953 | சமரன் | ஏ. எஸ். எம். இஸ்மத் பாட்சா | ,, |
| ,, | சுதந்திரம் | என். இ. ரகுநாதன் | சென்னை |
| ,, | காங்கிரஸ் செய்தி | என். ரங்கநாதன் | விழுப்புரம் |
| 1954 | வழித்துணை | வி. திருவேங்கட ஐயங்கார் | சென்னை |
| ,, | இளைஞன் | பி. கே. நடராஜன் | விருதுநகர் |
| ,, | முயற்சி | திருக்கண்ணன் | மதுரை |
| ,, | கேரள முரசு | கே. ஏ. சையத் மகமத் | வண்டிப் பெரியார் |
| ,, | மகா ஜனம் | பி. ஆர். முத்துசாமி | மதுரை |
| ,, | நம்மூர் | ஹாஜி. ஜி. சாகிப்பு | ஆத்தூர் |
| 1955 | கண்ணகி | சக்தி மோகன் | மதுரை |
| 1960 | செம்பிறை | வி. எஸ். இஸ்மாயில் ஜின்னா | சிங்கப்பூர் |
| 1963 | அன்னை | ஏழுமலை | கோலாலம்பூர் |
| 1964 | மலையரசு | செல்லையா ரத்தினம் | |
| 1965 | தொண்டன் | கே. ஒய். அமரன் | கோலாலம்பீர் |
| 1966 | உரிமை | சா. க. சாமி | சிங்கப்பூர் |
| 1967 | வானொலி | இரா, சிவபெருமாள் | சிங்கப்பூர் |

# 9. சமய இதழ்கள்

உலகில் மாந்தன் தொடக்கத்தில் இடி மின்னல், காற்று, நெருப்பு முதலியவற்றைக் கண்டு பயந்தான்; நடுங்கினான். இயற்கையில் ஏற்படும் இவ்விளைவுகளுக்குக் காரணம் அறியாமல், தன்னை மீறிய சக்தியால், அற்புதத்தால்தான் அவை நிகழ்கின்றன என்று மாந்தன் முதலில் நம்பினான்! ஆகவே, நீரை நெருப்பை காற்றை விசும்பைத் தன்னைவிட அதிக ஆற்றல் மிக்கதாக அவன் உணர்ந்தான். நிலம், நீர், காற்று, தீ, விசும்பு என்னும் ஐம்பூதச் சேர்க்கையால் உருவானதுதான் இவ்வுலகம் என்பதை அவன் விளங்கிக் கொண்டதே பிற்காலத்தில்தான்!

உலகம் தோன்றிய நாள் முதல் இயற்கையை வழி பட்டும், கடவுள் உண்டு என்ற கொள்கையை ஏற்றும், அதற்கு எதிராகக் கடவுள் இல்லையென்ற கருத்தை வலியுறுத்தியும் வரும் மக்கள் கூட்டம், அவரவர் கொள்கையை நிலை நிறுத்தி வாதப் போராட்டங்களை ஞாலமெங்கும் நெடுகத் தொடர்ந்து நடத்தி வருகின்றது.

வேதம் என்றும் உள்ளது. அது கடவுள் அருள்பெற்றவர் களால் உணரப்பட்டும் உணர்த்தப்பட்டும் வழிகாட்டப் பட்டும் வருகிறது என்றும், கடவுளும் மறையும் என்றும் உள்ளன என்றும், அவை 'அநாதி' என்றும் வேதத்தைப் பின்பற்றுவோர் வலியுறுத்திச் சொல்லி வருகின்றனர்! கண்ணால் காண முடியாததையும் உணர முடியாததையும் இருக்கின்றது என்று சொல்வது அறிவுக்கு ஏற்றதன்று என்று கடவுளை நம்பாத நாத்திகர் கூறி வருகின்றனர். இப்படியாக ஆத்திக-நாத்திகக் கருத்துப் போர் உலகம் அறிவு பெற்ற நாள் முதல் தொடர் போராட்டமாக ஓயாமல் நடைபெற்று வருகின்றது!

இந்தியத் துணைக் கண்டத்தில் வேதத்தை ஒப்புக் கொண்டு, அதே சமயத்தில் கடவுள் இல்லையென்று வாதிப் போர் கூட்டமும் அனுமதிக்கப்பட்டு வந்துள்ளதை தத்துவ வரலாற்றின் மூலம் அறிந்து கொள்ளலாம். இப்படிப் பட்டவர்களை அகச் சமய வாதிகளாக—அவர்கள் நாத்திகக் கொள்கையை மேற் கொண்டிருந்தாலும் — ஏற்றுக் கொண்டுள்ளனர்! ஆனால், வேதத்தை அடியோடு ஏற்காத சமண பௌத்த சமயத்தினர் - புறச்சமய வாதிகளாக கருதப்பட்டு வருகிறார்கள்!

**1. கிறிஸ்தவம் :** இயேசு கிறிஸ்து யூத இனத்தைச் சேர்ந்தவர். சாதாரண மக்கள் பேசிய 'அரமேய்க்' மொழியில் பேசியவர்; இவர் நூலறிவு இல்லாதவர். என்றாலும் ஒழுக்கத் தவறு என்னும் கறையில்லாதவர். மானிடராகப் பிறந்த இவருடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுவன விவிலிய (Bible) நூலிலுள்ள நான்கு சுவிசேஷங்களும் அபோஸ்தலர் நடவடிக்கைகளும் ஆகும்.

'கடவுள் மனுக்குலத்தின் தந்தை; மக்கள் எல்லாரும் அவருடைய பிள்ளைகள்' என்பது கிறிஸ்தவத்தின் முதல் அடிப்படைக் கொள்கை. அன்பால் மனிதன் கடவுளோடு ஒற்றுமைப் படுகிறான் என்பது கிறிஸ்தவ சமய சாரமாகும்.

இயேசு கிறிஸ்து தமது கொள்கைகளைக் கூறிவந்ததாலும், அவர் தம் காலத்தில் நிலவிய அட்டூழியங்களை எடுத்துக்கூறி கண்டித்ததாலும், பல தொல்லைகளுக்கு உட்பட வேண்டியவரானார். பல இடங்களுக்கு அலைந்து திரிய வேண்டியவரானார், கடைசியில், சிலுவையில் ஏற்றப்பட்டு உயிர் துறந்தார்.

கிறிஸ்தவ மதத்திலிருந்து கி. பி. 1054 இரேக்க கத்தோலிக்கர் என்ற பிரிவும், ரோமன் கத்தோலிக்கர் என்ற மற்றொரு பிரிவும் ஏற்பட்டன. 16 ஆம் நூற்றாண்டில் உண்டான சமயச் சீர்திருத்த இயக்கங் காரணமாகப் புராடெஸ்டண்டு (Protestant) என்றொரு பிரிவும் உண்டாயிற்று. இப்பிரிவினர் பின்பு பல சிறுசிறு பிரிவுகளாகப் பிரிந்து தொண்டு புரிந்து வருகின்றனர்.

கிறிஸ்தவர்களுக்குத் தங்களது சமயத்தைப் பரப்புவதற்காக வேண்டியே இதழ்களைத் தமிழ்மொழியில் துவக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அவர்கள் கத்தோலிக்கப் பிரிவினராலும் சீர்திருத்தப் பிரிவினராலும் பல வழிகளில் பல முறைகளில் வெவ்வேறு துறைகளில் இதழ்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. அவற்றைப் பற்றி கிடைக்கக் கூடிய விவரங்களைக் கொண்டு ஒவ்வொன்றாக அறியலாம்.

**சேலம் புகடால நரசிம்மலு நாயுடு** (1854 - 1922): இவர் ஈரோட்டில் பிறந்தவர். பள்ளியில் தமிழ் தெலுங்கு ஆகிய மொழிகளைக் கற்றார். இவருடைய தமிழாசிரியராக இருந்த திரு. அமிர்தம் பிள்ளை, 'யாப்பிலக்கண வினாவிடை' எனும் நூலைப் பதிப்பித்தவராவர்.

சே. ப. நரசிம்மலு நாயுடு சிலகாலம் ஆசிரியப் பணி புரிந்தார். இவர் **சேலம் சுதேசாபிமானி** எனும் இதழைத் தொடங்கி, மாவட்ட ஆட்சியாளரின்மீது குறை கண்டு எழுதியதால், பள்ளிப் பணியைத் துறக்க வேண்டியதாயிற்று இவர் சென்னை 'தினவர்த்தமானி' திரிசிரபுரம் 'அமிர்த வசனி', பெங்களூர் 'மனோரஞ்சனி' ஆகிய இதழ்களுக்கும் அவ்வப்பொழுது எழுதி வந்தார்.

இவர், **சுதேசாபிமானி** எனும் இதழை 1877 மார்ச் 10ஆம் நாள் துவக்கி நடத்திவந்தார். அதில் ஏழைகள்படும் துயரையும் அரசாங்க கீழ்நிலை ஊழியர்களால் ஏழைகளுக்கு இழைக்கப்படும் இன்னல்களையும், ஜமீந்தார்கள் செய்யும் கொடுமைகளையும், கிறிஸ்தவ பாதிரிமார் செய்யும் மத மாற்றங்களையும் சாடினார். நீதி மன்றங்களில் ஆங்கிலேயர்க்கு ஒரு நீதியும் 'சுதேசி'களுக்கு வேறுவகையான நீதியும் வழங்குவதைக் கண்டித்து அஞ்சா நெஞ்சத்துடன் எழுதிவந்தார்.

இவர் கோவையிலிருந்து கொண்டே 'சேலம் சுதேசாபிமானி'க்கு எழுதியுள்ளார். பின்னர், கோயம்புத்தூர் கலாநிதி அச்சகத்தை நிறுவி, **'கோயம்பத்தூர்அபிமானி** (The Coimbatore Patriot) எனும் இதழைத் தொடங்கினார். இதே அச்சகத்திலிருந்து **கோயம்பத்தூர் கலாநிதி** (The Coimbatore Crecent) எனும் இதழும் வெளியிடப்பட்டது. இவர் திருவரங்கம் சென்று வசித்தபோது, **ஸ்ரீரங்க ஸ்தல பூஷணி** என்ற இதழையும் நடத்தினார். இவர் மேற்சொன்ன இதழ்கள் மூலமாகவும் சொற்பொழிவுகள் மூலமாகவும் நாட்டுப் பற்றை வளர்த்து வந்தார்.

இவர் சேலத்திலிருந்தபோது 'பிரம்ம ஞானசபை'யைச் சார்ந்து 'பிரம்மவாசக சாலை'யையும் 'பிரம்ம சமாஜ சபைஸ்ய'யும் நிறுவினார்.

C. S. W. நூற்பு ஆலை ஏற்படுவதற்கும், போத்தனூரில் சர்க்கரை ஆலை நிறுவவும் இவரே மூலமனிதராக இருந்துள்ளார். 'விக்டோரியா டவுன் ஹாலை' ரூ. 10,000 செலவில் இவரே கட்டுவித்து, அதனைக் கோவை ஆட்சித் தலைவரிடம் ஒப்படைத்துவிட்டார்!

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கம், சமுதாய சீர்திருத்த அமைப்பு போன்றவற்றுள் முக்கிய இடம் பெற்றிருந்தார். தியாசாபிகல் சபை சென்னைக்குவர திரு. நாயுடவர்களும் பெரிதும் காரணமாயிருந்திருக்கிறார்!

இவரது பல்வகைத் தொண்டுகளைப் பாராட்டி 'இராவ் பகதூர்' விருது வழங்க ஆங்கில அரசாங்கம் முன்வந்தபோது, அதனை ஏற்றுக்கொள்ள திரு. நாயுடு மறுத்து விட்டார்!

இவர் 94 நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். இவர் 1900 இல், 'விவசாயத்'தைப் பற்றி இரண்டு பாகங்களாக எழுதிய நூல், சுமார் 1000 பக்கங்களைக் கொண்டு வெளியிடப்பட்டது!

இவர், தாம் பணியாற்றிய பள்ளிகள் பற்றியும், பெண் விடுதலை குறித்தும் தனிப்பாடல்களைப் பாடியுள்ளார். ஒரு நூற்றாண்டிற்கு முன்னரே இதழியல் தொழிலைக் கோவைக்குக் கொண்டுவந்த பெருமை இவரையே சாரும்!

இவர் எழுதிய ''தக்ஷிண இந்திய சரித்திரம்'' 1919 இல் அச்சாகியது. இவர் 21-1-1922 இல் இயற்கை எய்தினார்.

தாம் அறிந்த இதழ்களைப் பற்றி முதன் முதலில் பக்டாலு நரசிம்மலு நாயுடு, மதுரைத் தமிழ்ச் சங்க விழாவில் பேசிய பேச்சு, அவரது தட்சிண இந்திய சரித்திரத்தில் குறிக்கப் பட்டுள்ளது. தமிழ் இதழ்களைப் பற்றி முதன் முதலில் தகவல்தந்து பேசியவர் மேற்படி நாயுடு அவர்களே ஆவர்.

**ஜி. சுப்பிரமணிய ஐயர் (1875 -1916):** இவர் திருவையாற்றில் பிறந்தவர். சென்னை நார்மல்பள்ளி (தற்போதைய ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி) யிலும், பின்னர் பச்சையப்பன் கல்லூரியிலும் படித்து பி. ஏ. பட்டம் பெற்றவர். பின்னர் திருவல்லிக்கேணி 'ஆங்கிலோ-வெர்னாகுலர்' பள்ளி (தற்போதைய இந்து உயர்நிலைப்பள்ளி) தலைமையாசிரியராகப் பொறுப்பேற்றுத் திறமையாக நடத்தினார்.

சென்னையில் பொது மக்கள் கருத்தை உருவாக்க வேண்டி, 1850 இல் காஜுலு லட்சுமி நரசு செட்டியாரால் தோற்றுவிக்கப்பட்ட சென்னை சுதேசிய சங்கத் (The Madras Native Association) திற்கு, திரு. சுப்பிரமணிய ஐயரும் உறுதுணையாக இருந்தார். இது 'காங்கிரஸ்' தோன்றுவதற்கு முன்பு தேசீய இயக்கமாகத் திகழ்ந்ததாகும்! திரு. லட்சுமி நரசு அவர்கள் 'கிரசென்டு (The Cresent) எனும் ஆங்கில வார இதழை மிகுந்த பொருள் செலவிட்டு ஊக்கமுடன் நடத்தி வந்தார். இதற்காக அவர் தம் சொந்தப் பொருளையெல்லாம் இழந்து தியாக சீலராயும், பொதுமக்கள் மேன்மையை நாடிப் போராடிய போராட்ட வீரராகவும், முன்னோடியாகவும் விளங்கினார். திரு. சுப்பிரமணிய ஐயரும் மேற்கண்ட வழியைப் பின்பற்றித் தீவிர மிக்கவராகத் தொண்டாற்றினார்.

20-2-1878 இல் திருவாளர்கள் ஜி. சுப்பிரமணிய ஐயரும், முடும்பை வீரராகவாச்சாரியாரும் சேர்ந்து', தங்கசாலைத் தெருவிலிருந்த ஸ்ரீநிதி அச்சகத்தில் **இந்து** எனும் ஆங்கில வார இதழைத் தொடங்கி அச்சிட்டு நடத்த முற்பட்டனர். அப்போது 80 படிகளே அச்சடிக்கப்பட்டன! நாளடைவில் 'இந்து' வார மும்முறையாக வளர்ச்சியுற்று நாளேடாக மாறியது! திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர் 'இந்து' வின் ஆசிரியராக இருந்து கொண்டே அரசியல் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு, அரசியல் கூட்டங்களில் ஆங்கிலத்திலும் தமிழிலும் பேசி வந்தார். இவர்தான் முதன் முதலாக **சுய அரசாட்சி வினாவிடை** என்னும் நூலைத் தமிழில் எழுதி

அச்சிட்டு இலவசமாக வழங்கியவராவர்! இதனைத் தமிழில் முகிழ்த்த 'முதல் அரசியல் அரிச்சுவடி' என்று குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது.

தமிழ் மக்கள் அரசியலில் விழிப்புணர்வுப் பெறவும், ஆட்சியில் ஏற்படும் அவலங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தினால், 1882 இல் **சுதேசமித்திரன்** எனும் பெயரில் ஒருவார இதழைத் துவக்கி நடத்தினார். இதுவே தமிழில் வெளிவந்த முழுமையான முதல் அரசியல் வார இதழாகும். பின்னர். இது வார இருமுறை, மும்முறை என்று படிப்படியாக வளர்ந்து 1889 இல் நாளேடாகி மாறியது.

நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் இன்னவை என்று உணராத அக்காலத்திலே, திரு. சுப்பிரமணிய ஐயர் 'சுதேசமித்தர'னைத் தொடங்கி 20 ஆண்டுக் காலம்வரை அதற்கு ஆசிரியரர்க இருந்து அயராது பாடுபட்டது மிகவும் துணிவான செயலாகவே கருதப்படவேண்டும்.

'சுதேசமித்திர'னில் சி. வி. சாமிநாத ஐயர், குருமலை சுந்தரம்பிள்ளை, வரகவி. சுப்பிரமணிய பாரதி, பாரதியார் ஆகியோர் துணையாசிரியர்களாகப்பணிபுரிந்துள்ளனர்.

அரசியலில் முழு ஈடுபாடும், சமூக சீர்திருத்தத்தில் உண்மையான நாட்டமும் கொண்டு பாடுபட்டவர். திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர் ஆவர். இவர் மீனாட்சி யம்மையை மணந்தார். இவர்களுக்குச் சிவப்பிரியை என்னும் பெண்பிறந்தாள்; வளர்ந்தாள். திருமணமாகி இளமையிலேயே விதவையாகிவிட்டாள்! 1889இல் பம்பாயில் நடைபெற்ற தேசியகாங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொள்ள சென்றபோது, உடன் தமது மகளை அழைத்துப்போய், அங்கு அவளைத் தென்னாட்டு வைதீகப் பார்ப்பன பிள்ளையாண்டானுக்கு மறுமணம் செய்து வைத்தார்! மாதவதாஸ் ரகுநாததாஸ் என்னும் விதவை மறுமண இயக்க வீரர் தலைமையில்தான்

இது நடைபெற்றது. மணமக்கள் நீண்ட நாள் வாழவில்லை! ஐயரின் மனைவியும் இறந்து போயினாள்.

சென்னை இந்து ஆசார சீர்திருத்த சங்கம், திருவல்லிக் கேணியிலுள்ள பெரிய தெருவில் திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர் இருந்த வீட்டிலேயே தொடங்கப்பட்டது. இது தற்போது டி.யு.சி.எஸ் தலைமை அலுவலகம் இருக்கும் இடமாகும். அச்சங்கத்தின் ஐந்தாம் ஆண்டு விழாக்கூட்டத்தில் 1896இல் ஜி. சுப்பிரமணிய ஐயர், ஆங்கிலத்தில் ஆற்றிய சொற்பொழி வின் ஒரு பகுதியின் தமிழாக்கம் கீழே தரப்படுகிறது: ''கிறிஸ் துவ நாடுகளில் சர்ச்சு என்கிற சக்திவாய்ந்த அமைப்பைப் போன்று நம்மிடையே ஒன்றுமில்லை. நமது மாடாதிபதிக ளும், புரோகிதர்களும் ஊழல் மலிந்து அறியாமையிலும் மூட நம்பிக்கைகளிலும் மூழ்கியிருக்கிறார்கள். அவர்களிடம் ஏதா வது இருக்கிறதென்றால், ஆரோக்கியமான-பகுத்தறிவுள்ள- சீர்திருத்தத்திற்குக் கடும் எதிர்ப்பைக் காட்டும் சக்தி ஒன்று தான்!''

திருவல்லிக்கேணியில் 'ஆரியன் உயர் நிலைப் பள்ளி'யை நிறுவி, அதில் முஸ்லீம்களையும் தீண்டாதாரரையும் திரு. சுப்பிரமணிய ஐயர் பரந்த உள்ளத்துடன் சேர்த்துக் கொண்டு ஆசிரியராக இருந்து சிறக்கப் பணியாற்றியுள்ளார்.

'சுதேசமித்திரன்' வெள்ளிவிழா 17-1-1908 இல் விருதை சிவஞான யோகி தலைமையில் கொண்டாடப்பட்ட போது, அதன் உதவியாசிரியராக இருந்த திரு. குருமலை சுந்தரம் பிள்ளை, ஜி. சுப்பிரமணியம் பிள்ளை சரித்திரம் எனும் நூலை எழுதி வெளியிட்டார். அதில், ''ஆசார சீர் திருத்தம், இராஜாங்க சீர்திருத்தம் இரண்டிலுமுழைத்த நமது ஐயர், அதிகப் பெயரையும் அதிக பொதுஜன மதிப்பை யும் பெற்றிருக்க வேண்டியது நியாயமாயிருந்தும், அவருக்கு இராஜாங்க சம்பந்தமாய்க் கிடைத்த நற்பெயரும் கூட அவரு டைய ஆசார சீர்திருத்தச் செயல்களால் மழுக்கமடைந்து விட்டது; இதுவே சென்னைப் பெரிய மனிதர்கள், நமது ஐயர்

மீது காட்டிய வெறுப்பிற்கும் காரணமாயிருக்கலாம்!'' என்று குறிப்பிட்டுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

இனி, திரு. ஐயர் கூறிப்போயிருக்கும் கருத்து ஒன்று, இன்று மிகவும் சிந்தித்துச் செயலாக்கத் தக்கதாக உள்ளது! ''ஐரோப்பாவில் சில காலம் இரண்டாம் போப்பாண்டவரை நியமித்தது போல், சுவாமி விவேகானந்தர் அல்லது அவர் போன்ற ஓர் ஆன்மீக வீரரைச் சீர்திருத்த சங்கராச்சாரியாக, சீர்திருத்தவாதிகள் நியமிக்க முடியுமா?'' என்று வினவியுள்ளார். இதற்குக் காலம் என்ன பதில் கூறப்போகிறது? இத்தகைய ஜி. சுப்பிரமணி ஐயரின் சீர்திருத்த வேட்கையைத் தணிக்காமல், அந்நாளில் அவரது இனத்தவர் எதிர்த்துப் பிரசாரம் செய்துள்ளது போல், அவருக்குக் கிடைத்த உதாசினங்கள்தான் வெகுமதிகளாக, நன்றிக் கடன்களாக இருக்கப் போகின்றனவா? அல்லது மனம் மாறி பரந்த உள்ளத்தைக் காட்டப்போகின்றனவா? பொறுத்திருந்து பார்ப்போம்!

'இந்து'வையும் 'சுதேசமித்திர'னையும் திரு. சுப்பிரமணிய ஐயர் தொடங்கி வைத்ததன் மூலம், அரசியல் விழிப்புணர்வையும், அரசாங்கத்தில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தையும் படித்தவர் முதல் பாமரர் வரை உண்டாக்கி விட்டார். இந்நாட்டில் பெரும்பான்மையான மக்கள் கல்வியறிவு பெறாமலும் மூடத்தனத்தில் மூழ்கி இருப்பதிலிருந்தும் அவர்களை மீட்க ஊர் தோறும் சென்று, தம் தாய்மொழியில் பேசி, அவர்தம் அறிவைத் துலங்கச் செய்தார். இந்தியா முழுவதிலும் உள்ள கல்விமான்களுக்கு இடையேயும், அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றவர்களுக்கு இடையேயும் அடலேறுபோன்று அவர் விளங்கினார். தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் நடத்திய அறப்போருக்கு ஆதரவாகவும், அவருக்கு உற்ற உதவியாக நின்று பாடுபட்ட தமிழர் தம் நிலைமையையும் 'சுதேசமித்திரன்' வாயிலாகப் பெருத்த ஒத்துழைப்புக் கொடுத்தார். 12 ஆண்டுகளாகத் தென்னாப்பிரிக்க அறப்போரைக் குறித்துத்

தொடர்ந்து 80 தலையங்கங்கள் எழுதியுள்ளார்! திரு. ஜி. சுப்பிரமணியரைக் குற்றாலத்தில் போலீசார் கைது செய்தனர். தாம் தொடங்கி நடத்தி வந்த இதழ்களைப் பிறர்க்கு விற்று விட வேண்டிய நிலைக்கு அவர் உள்ளானார்.

தொழுநோய் பிடித்திருந்த காரணத்தினால் சுப்பிரமணிய சிவாவுக்குத் தங்க இடம் கொடுக்க பிறர் அஞ்சிய போது, ஜி. சுப்பிரமணிய ஐயர், தாம் வாழ்ந்த வீட்டின் வாசல் அறையைத் தந்து ஆதரித்தார்! இப்படிப்பட்ட பெருந்தகைக்குப் பெருநோய் வந்து அவதியுற்ற போது, 1915இல் காந்தியடிகள் இவர் இருந்த இடத்திற்கே வந்து, உடல் நலம் பேணி, ஐயரின் தொழுநோய்ப் புண்களைத் துடைத்து ஆறுதல் அளித்தார்!

26-1-1914 இல் தமிழ் நாட்டின் இதழியல் துறையின் தந்தையாக இருந்த திரு. ஜி. சுப்பிரமணியஐயரின் 60ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது; சென்னை மகாஜன சபையில் அவரது உருவப்படம் திறந்து வைக்கப்பட்டு, பெருமை செய்யப்பட்டது, தமிழ், ஆங்கில அரசியல் இதழைத் தொண்டாகத் தொடங்கி, தொழிலாக மலர வழிவகுத்தவர் திரு. ஐயராவர். அவர் பட்டபாடும் உழைத்த உழைப்பும் அவருக்குப் பலன் தரவில்லை! அவை பிறர்க்கே பயன் அளித்தன. திரு. ஐயர் 1916 இல் இயற்கை எய்தினார். தென்னிந்திய இதழில் துறையில் முன்னோடியாக விளங்கிய திரு. ஜி. சுப்பிரமணிய ஐயரைப் பற்றி ஆங்கிலத்தில் ஒரு சிறிய நூல் ஒன்று. திரு. எஸ். ஏ. கோவிந்தராஜனால் எழுதப்பட்டு, நேஷனல் புக் டிரஸ்டினால் வெளியிடப் பட்டுள்ளது. அவர் கண்ட 'இந்து'வும், 'சுதேசமித்திர'னும் கை மாறினாலும், நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியுள்ளன. ஆனால், திரு. ஜி. சுப்பிரமணிய ஐயருக்கு நாம் சிறப்பாக நூற்றாண்டு விழாவைக் கொண்டாடவில்லையே!

ஜி. சுப்பிரமணிய ஐயரின் நோக்கத்தையும் நடையையும் அறிந்து கொள்ள கீழ்க்கண்ட பகுதி பயன்படும்: ''இங்கிலிஷ்

பாஷை யறியாத தமிழ் ஜனங்களும் சுதேச சமாசாரங்களை அறிந்து கொள்ள மார்க்கமில்லாதிருப்பதை யோசித்து, 'சுதேசமித்திரன்' பத்திரிகையை 1882 - ம் வருடம் மார்ச்சு மாதத்தில் வாராந்திரமாகத் துவக்கினேன்......

...'சுதேச மித்திரன்' பத்திரிகையை விருத்திசெய்து, தமிழ் ஜன ஸமுகத்தாரின் அறிவை வளர்ப்பதே மேன்மையென்று கருதினேன். அவ்வாறே 1889 - ம் வருஷத்தில் 'சுதேசமித்திரன்' பத்திரிகையைத் தினசரியாக்க முயன்ற சமயத்தில், அநேகர் தமிழ்ப் பத்திரிகை தினசரியாக்க நடத்துவது முடியாத காரியமென்றும், அதை ஆதரிப்பவர் ஏற்படுவது கஷ்டமென்றும் தெரிவித்தும், நான் எப்படி யானாலும் எடுத்த முயற்சி தளராத விதமாகவே தமிழர்கள் 'மித்திர'னை மிகுதியும் ஆதரிக்க ஆரம்பித்து விட்டார்கள்!''
—'சுதேசமித்திரன்', ஜனவரி 18, 1908 - பக்கம் 2-3.
ஆதாரம்: ''புண்ணியவான் காந்தி'', தொகுத்தவர் ஏ. கே. செட்டியார் (1968).

திரு. ஐயர் மறைவைக் குறித்து திரு.மாதவையா தமது ''தமிழர் நேச''னில் ஆன்றோரர் ஆற்றுப் படைத் தலைப்பில் எழுதியிருப்பது இங்குக் குறிக்கத் தகுந்ததாகும். ''இந்தியப் பத்திரிகைகள் முன்வருவதற்கும், 'சுதேசியம்' என்னும் உத்தம உணர்ச்சி முறை கிளம்பித் தழைத்ததற்கும், ஆசார சீர்திருத்தம் இப்போது உள்ள சிறிது அள்வேனும் நடைபெறு வதற்கும் மூல புருஷராயிருந்த இந்த மகான் 18-14-1916 இல் இவ்வுலக வாழ்வை நீங்கினார்.''

**சி. சுப்பிரமணிய பாரதியார் (1882-1921):** இவர் எட்டய புரத்தில் சின்னசாமி ஐயரின் மகனாய்ப் பிறந்தவர். இவரது தந்தையார் இவரை ஆங்கிலக் கல்வி பயிலும்படி வற்புறுத் தினார். தந்தை சொல் தட்டாமல் படித்தாலும், இவருக்குத் தாய் மொழியின்மீதே பற்று மிகுதியாயிற்று! இவரது இளமைக்காலத் தோழர் ச. சோமசுந்தர பாரதியுடன் சேர்ந்து கவிகள் இயற்றத் தொடங்கினார். திருநெல்வேலி இந்து கல்லூரியில் படித்தார்.

மதுரையில் சேது உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரிய ராகச் சில மாதங்களே பணி புரிந்தார். அங்குப் பணியாற்றிக் கொண்டிருந்த திரு. கோபலய்யரின் பரிந்துரையால், சென்னைக்குச் சென்று 'சுதேசமித்திரன்' நாளிதழின் துணை யாசிரியராக 1905 இல் சேர்ந்தார். ஆங்கிலச் செய்திகளைத் தமிழில் மொழிபெயர்த்தார். அவ்வப்போது கவிதைகளைப் புனைந்து வந்தார். இவரது 'தனிமை யிரக்கம்' எனும் முதற் கவிதை 1904 இல் மதுரையிலிருந்து வெளிவந்த 'விவேக பாநு'வில் வெளியாயிற்று; அது புலவர் நடையில் அமைந் திருந்தது!

இவருக்கு இயற்கையாக ஏற்பட்டிருந்த தமிழ்ப்பற்றும் தந்தை இறந்த பின்னர் காசிக்குச் சென்று படித்தபோது ஏற்பட்ட அரசியல் விழிப்புணர்ச்சியும், 'சுதேச மித்திர'னில் பணியாற்றியபோது உண்டான உலகியல் அறிவும் ஒன்று சேர்ந்து, பாரதியாரைப் புதிய மனிதராக்கின!

பாரதியருக்கு நாளடைவில் 'சுதேசமித்திர'னில் கடை பிடிக்கப்பட்ட மிதவாத போக்குப் பிடிக்க வில்லை. திலகரின் தீவிரவாத போக்கே இவருக்கு உடன்பாடாயிற்று. ஆகவே மண்டயம் சீனிவாச்சரியார் உதவியுடன் இந்தியா (1906) எனும் வார ஏட்டிற்கு ஆசிரியப் பொறுப்பேற்று நடத்த முற்பட்டார். திரு. சீனிவாசன் என்பவர் 'இந்தியா'வின் ஆசிரியர் வெளியிட்டாளராகப் பதிவு செய்யப்பட்டிருந்தார்.

பாரதியார் 'இந்தியா'வில் காரசாரமாக எழுதிவந்தார். அரசியல் விளக்க கருத்துப் படங்களை மிகுதியாக வெளியி யிடச் செய்தார். அதன் வீரமுழக்கம் சென்னையில் 1908 அக்டோபர் நவம்பர்வரை அக்காலத்தில் ஒலித்தது. பாரதி யாரின் எழுத்து எப்படியிருந்தது என்பதை 'அமிர்த குண போதினி' ஆசிரியராக இருந்த திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு எழுதியிருப்பதிலிருந்து அறிந்து கொள்வோம்: ''பாரதியாரின் 'இந்தியா' பத்திரிகை' சட்டவரம்பை மீறி நெருப்பு மழைபொழியத் தொடங்கிற்று. 'இந்தியா' பத்திரி கையின் ஆசிரியரைக் கைது செய்ய 'வராண்டும்' பிறந்தது!

போலிசார் 'இந்தியா' பத்திரிகையின் காரியாலயத்துள் பிரவேசித்துப் பாரதியாருக்கு 'வாரண்'டைக் காண்பித்தனர் தாம் ஆசிரியரல்லரென்றும், தமது பெயர் 'வாரண்'டிலில்லை யென்றும் கூறிக்கொண்டிருக்கையில், 'இந்தியா' பத்திரி கையை வெளியிடுபவரான ஸ்ரீநிவாசன் என்பவர் அங்குற்று என்ன என்றார். போலீசார் அவரே ஆசிரியராகப் பதிவு செய்யப் பெற்றவரென்று அறிந்து அவரைக் கைது செய் தனர். விசாரணைக்காலத்தில் ஸ்ரீநிவாசன் தாம் ஆசிரிய ரல்ல ரென்றும், பாரதியாரே உண்மை ஆசிரியறென்றும், தாம் ஒரு குமாஸ்தா போலவே இருந்து வந்ததாயும், தமக்கு வியாசம் எழுதச் சக்தி கிடையாதென்றும் தெரிவித்துக் கொண்டார். ஆயினும் அவருக்கு ஐந்து வருஷம் கடின காவல் சிக்ஷை விதிக்கப்பட்டது. பாரதியாருக்கும் வாரண்டு பிறந்தது! அதற்குத் தப்பிப் பாரதியார் புதுச்சேரி போய்ச் சேர்ந்தார்." - 'சென்று போன நாட்கள்' என்ற கட்டுரை, 'அமிர்தகுணபோதினி' - 1928 டிசம்பர், ப. 460. மேலும், திரு. நாயுடு மேற்படி இதழில் கூறியிருப்பதாவது: "இந்தியா பத்திரிகைக்குப் பாரதி ஆசிரியரென்று எவருமே அறியார். பாரதியாருக்குத் தமிழ் நாட்டிலிருந்த பெயர் அவ்வளவு தான்.

"தம்மை நம்பிய ஒருவரை ஆபத்தில் சிக்கவைத்து விட்டுத் தாம் தூரப்போய் விட்டமை பாரதியாரின் சரித் திரத்தில் ஒரு பெரிய கலங்கமேயாகும்!" ஷெ ப. 461. புது வையில் அடைக்கலம் ஆனபின்னர், 'இந்தியா' இதழை முன்னிலும் தீவிரமாக ஆங்கிலேய ஆட்சியின் கொடுமையை எதிர்க்க எழுதிவந்தார். அங்கும் சில காலத்திற்குள் அது நிறுத்தப்பட்டு விட்டது.

புதுவையிலிருந்து சென்னைக்குத் திரும்பிய பாரதியா ரைக் கடலூரில் போலிசார் கைதுசெய்து சிறைப்படுத்தினர். அங்கிருந்து பலரின் முயற்சியினாலும் வேண்டுதலினாலும் பாரதியார் விடுதலை செய்யப்பட்டார், பின்னர் கடையம் சென்றார்.

'சுதேசமித்திர'னில் துணையாசிரியராக இருந்தபோதே **சக்கரவர்த்தினி** எனும் தமிழ் மாத இதழின் ஆசிரியராக 1905 ஆகஸ்டு முதல் பதின்மூன்று மாதங்கள் பணியாற்றி, பெண்கள் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டார்.

புதுவையிலிருந்த போது **'கர்மயோகி'** எனும் மாத இதழை, அரவிந்திரன் ஆங்கில இதழான 'கர்மயோகின்' என்பதைத் தழுவி வெளியிட்டு வந்தார் பாரதியார். மேலும் **'விஜயா'** எனும் நாளேட்டினையும் பிறர் உதவியுடன் நடத்த முற்பட்டார். இவையெல்லாம் 1910ஆம் ஆண்டிற்குள்ளேயே பொருள்முட்டுப் பாட்டினால் மறைந்து போயின என்றாலும், புதுவையில் இவரது சிறப்பான படைப்புகள் பல எழுதி வெளியிடப்பட்டன.

'அரண்மனையில் அடைபட்டுக் கிடந்த தமிழ், மக்களின் பொது மேடைகளிலே புத்துயிர்ப்பெற்று, அவர்களுடை உள்ளக்கிளர்ச்சிகளை வெளியிடும் வலிமை வாய்ந்த கருவியாக மலர்கிறது'' என்றும் ''ஜாதிபேதங்களின் கொடுமைகளை உடனே அழித்து விடவேண்டுமென்பதை நான் முற்றிலும் ஆமோதிக்கிறேன்'' என்றும் பாரதியார் எழுதியுள்ளார்.

பாரதியாரிடத்தில் ஆவேசம் இருந்தது; துடிப்புத்தென்பட்டது; உள்ளக் கிளர்ச்சி ஓங்கியது; அதே சமயத்தில் குழந்தை உள்ளமும் குடிகொண்டிருந்தது! அவர் உலகை அறிந்து கொண்ட அளவிற்கு அவரைச் சார்ந்தவர் அறிந்தாரில்லை! அரசியலில் தீவிரக் கொள்கையும், சமூக சீர்திருத்தத்தில் ஆர்வமும், புரட்சியைப் புத்துணர்ச்சியைப் போற்றும் குணமும் அவரிடம் மிகுந்திருந்தன. அதே நேரத்தில் பாரதியாருக்குத் தமக்குரிய அடிப்படைத் தேவைகளைப் பெறவும், தம் குழந்தைகளையும் குடும்பத்தையும் பேணவும் போதிய அக்கறை இருந்ததாகவும் தெரியவில்லை! அவர் பிறரிடம் கடன் வாங்கியே நமது வாழ்க்கையை நடத்த வேண்டியிருந்தது. அவரிடம் தன்னம்பிக்கையும் தன்னடக்கமும் மிகுந்திருந்தன. அதே நேரத்தில் தமக்கு இன்று என்ன

தேண்டும், நாளை என்ன தேவை என்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாத மனிதராகவே காணப்பட்டார்! அவரது கடைசி காலத்தில் அவரை அரசியல் வாதி என்ற அளவில் சில பேரும், சீர்திருத்த வாதி என்ற அளவில் சில பேரும், அறிந்து இருந்தனரே அன்றி, அவரிடம் குடிக் கொண்டிருந்த மேலான நோக்கங்களைத் தெரிந்து கொண்டிருந்தார் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலர் தான்!

''நான் வேடிக்கையுறக் கண்டு நகைப்பதற்கே - கோத்த பொய் வேதங்களும் மதக்கொலைகளும், அரசர் தம் கூத்துக் களும்-மூத்தவர் பொய்ந்நடையும்-இளமூடர் தம் கவலையு மவள் புனைந்தாள்'' என்று 'கண்ணன் என் தாய்' பகுதி யில் பாரதியார் கூறியிருக்கிறார்!

'நந்தனைப் போல் ஒரு பார்ப்பான் - இந்த நாட்டினில் இல்லை' என்கிறார். 'சூத்திரனுக்கொரு நீதி - தண்டச் சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொருநீதி - சாத்திரம் சொல்லிடுமாயின் அது சாத்திரம் அன்று சதி' யென்று பாரதி யார் அறுதியிட்டுச் சொல்கிறார். பாரதியார் பூணூலை விட்டெறிந்தவர்; சாதி வேற்றுமையைப் பாராதவர்; பெண் ணுரிமையைப் பேணியவர்; மீனவரிடத்தும் ஈனவரிடத்தும் சரிசமமாகப் பழகியவர். அவரை, அவர் வாழ்ந்த காலத்தில் சிறந்த கவியல்ல என்ற பி. ஸ்ரீக்கள் உண்டு! அவரைச் சாதிக் கட்டுப் பாடுகளை மீறிய பார்ப்பனர் என்று ஒதுக்கிவைத் தார்கள்! அவர் ஆங்கில ஆட்சிக்கு எதிரானவர் என்று நெருங்க பயந்த சாமிநாதர்கள் உண்டு!

அவரை யானைத் தூக்கியெறிந்தபோது, ஒரு பைத் தியம் வீழ்ந்து கிடக்கிறது என்று வாளாயிருந்த திருவல்லிக் கேணி வாசிகள் உண்டு! அவர் கடைசியில் திரு ம. சிங்கார வேலர் மடியில் உயிர் நீத்தார். அவர் பிணத்திற்குப் பின்னால் சென்றவர் இருபது அல்லது முப்பது பேரே இருப்பர் என்று அவரது உண்மைத் தம்பியான பரலி. சு. நெல்லையப்பரே ஒருகட்டுரையில் குறித்துப் போயிருக்கிறார்.

பாரதியார் வறுமையால் வாடியும், போற்றாமையால் துவண்டும், அவரே தேடிக்கொண்ட தீய பழக்கமும் அவரது உயிரை ஆட்டிப்படைத்து அவரைக் குறுகிய காலத்திலே உயிரை இழக்கச் செய்து விட்டன! அவர் வாழ்ந்து வாழ்வு குறுகியது என்றாலும் அவர் படைத்துவிட்டுப் போன படைப்புகள் ஏராளம்.



அன்று பாரதியாரை ஒரு தீவிரவாதி, சாதிக் கட்டுப்பாடுகளை மீறியவர், அரசாங்க எதிரி, மரபை ஒட்டாமல் மீறி எழுதியவர் என்றெல்லாம் தூற்றிய பெருமக்கள் உண்டு. அவர் பாட்டை மேடைதோறும் பாடி உயிரூட்டியவர்களும், அவரது நூலை முதன்முதல் வெளியிட்டு அச்சிட்டவர்களும், அவர் வறுமையில் வாடியபோது உற்ற உதவி செய்தவர்களும் அவருக்கு இருக்க இடம் கொடுத்தவர்களும் இன்று அடியோடு மறக்கப்பட்டும், இருட்டடிப்பு செய்யப்பட்டும் உள்ளனர். ஆனால், அன்று தூர இருந்து வேடிக்கை பார்த்தவர்களுக்கெல்லாம், பாரதியாரும் அவரது நூல்களும் ''செத்தும் கைக்கொடுக்கும், சீதக்காதிகளா''கப் பயன்படுகின்றன! காலம் மாறினும் பாரதியின், பெரும்பான்மையான கொள்கைகள் எண்ணங்கள்-நிறைவேற்றப் படாமலே அப்படியே எழுத்தில் பதியப் பட்டுள்ளன என்பதையே காட்டுகின்றன. பாரதி நூற்றாண்டு கொண்டாடிய பின்னரும் உண்மையான பாரதியை அறிந்து-உணர்ந்து-தமிழகம் பின்பற்றுமா? உண்மைத் தமிழர்களாவது விழிப்புற்றுப் போற்றுவார்களா?

உலகிலுள்ள எந்த நாட்டிலும் முற்காலத்தில் கற்றறிந்தவர் தொகை குறைவாகவும் கல்லாதவர் தொகை மிகுந்தும் காணப்பட்டது. கற்றறிந்தவர்கள் சமுதாயத்தின் தேக்கத்தை உணர்ந்து அதைபோக்க தம்மால் இயன்ற வழிகளிலெல்லாம் பாடுபட்டுள்ளனர்!

தமிழகத்தில், முடியாட்சியாக இருந்த சங்க காலத்திலும் அரசனைக் கண்டு அஞ்சாமல், அவன் குடிமக்களுக்கு செய்ய வேண்டிய கடனை ஆற்றாவிட்டால், 'ஆற்றாமை

நின் போற்றாமையே!'' என்று கண்டித்த புலவர்கள் இருந் துள்ளனர்! புலவர்கள் நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் சமுதாயப் பற்றும் கொண்டவர்களாக விளங்கியுள்ளனர். 'கம்பராமாயணத்'தில் அயோத்தியைப் பற்றிக் கூற வந்த இடத்தில், 'காவிரி நாடன்ன கழனி ஓரீஇ' என்று தான் வாழ்ந்த பகுதியைச் சிறப்பித்து உவமையாகக் கம்பர் கூறி யுள்ளார்.

சாதியாலும், சமயத்தாலும் பிளவுண்டு அடிமைப் பட்டுக் கிடந்த நாட்டில், கற்றறிந்தவர்களே முதலில் தம் தாயக நிலைமையை உணர்ந்து விழிப்புற்று, பிறரையும் கிளர்ச்சிக் கொள்ள இப்படிச் செய்ய முன்வந்த பெருமக்களுள் ஒருவர் **பூண்டி அரங்கநாத முதலியார்** எம். ஏ. அவர்களாவர். இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் பிற துறை களிலும் வல்லுநராகத் திகழ்ந்தவர். இவர் 'தி நேடிவ் பப்ளிக் ஒப்பினியன்' எனும் இதழை ஆங்கிலத்திலும் தமிழிலும் தொடங்கி, பொதுமக்கள் நலனையும் கருத்தையும் ஆங்கி லேய ஆட்சியினர் நன்கு புரிந்து கொள்ளும் வகையில் சிறப் புற நடத்தி வந்தார். இவர் 'காஞ்சிக் கலம்பகம்' எனும் செய்யுள் நூலையும் இயற்றி அரங்கேற்றினார். இவர் போன்றே தமிழ் இதழ்களுக்குத் தொடக்க காலத்தில் தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர்களே ஆசிரியர்களாக இருந் தனர். ஆங்கிலம் மட்டும் அறிந்தவர்களாக இருந்தாலும், அவர்களுக்கும் ஓரளவாவது தமிழும் தெரிந்தது!

தமிழில் நன்கு தேர்ந்து ஆங்கிலத்தில் ஓரளவு புலமைப் பெற்றிருந்தவர்களும் தமிழ் இதழ்களின் ஆசிரியர்களாகப் பொறுப்பேற்றிருந்தனர். இப்படிப்பட்டவர்களில் சிறப் பித்துக் கூறத்தக்கவர்களைப் பற்றி அறிந்து கொள்வோம்:

**அருணாசல சதாசிவ பிள்ளை** *(1829-1896)* யாழ்ப் பாணத்து மானிப்பாயில் பிறந்தவர். கிறிஸ்வராக மாறி யதும் ஜே. ஆர். அர்னால்டு என அழைக்கப் பட்டார். இவர்

'உதயதாரகை' எனும் இதழின் ஆசிரியராக இருந்து அது நடைபெறுவதற்குப் பெரிதும் பாடுபட்டுள்ளார். இவர் எழுதியுள்ள நூல்களில் - வான சாத்திரம் (1881), பாவலர் சரித்திர தீபகம் (1886), கீர்த்தனா சங்கிரகம் (1880), இல்லற நொண்டி (1887) என்பன சிறப்பித்துச் சொல்லத் தக்கனவாகும்.

**இராமலிங்கஅடிகள்** *(1823 - 1874):* புகழ்பெற்ற சன்மார்க்க சீர்திருத்தகாரர் 'அருட்பா', 'மனுநீதி கண்ட வாசகம்' போன்ற நூல்களைப் படைத்தவர். பாரதிக்கு முன்பே எளிய நடையைக் கையாண்டவர். **சன்மார்க்க விவேக விருத்தி** எனும் இதழைத் தொடங்க திட்டமிட்டவர். இதே பெயரில் ஊரன் அடிகள் ஆசிரியராக இருந்து இதழை நடத்தி வருகிறார். **குலாம் காதிர் நாவலர்** (1833-1908):இவர் நாகூரில் பிறந்தவர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் தமிழ்க் கல்வி பயின்றவர். இவர் பல இஸ் லாமிய காவியங்களையும் சிற்றிலக்கியங்களையும் இயற்றி யுள்ளார். 'அரபுத் தமிழ் அகராதி' யைத் தொகுத்து வெளியிட்டார் இவர் பினாங்கு சென்று, **வித்யா விசாரணி** எனும் இதழுக்கு ஆசிரியப் பொறுப்பேற்று நடத்தினார்.

**சபாபதிநாவலர்** (1843-1903): இவர் யாழ்ப்பாணத்து வடகோவையில் பிறந்தவர். ஆறுமுக நாவலரின் மாணவர்- இவர் சென்னையில் நீண்ட காலம் வாழ்ந்து சைவத் தொண்டு புரிந்தவர்; 'நாவலர்' என்ற பட்டம் பெற்றவர்; **ஞானமிர்தம்** எனும் சைவ இதழை நடத்தியவர். பல நூல் களை இயற்றி வெளியிட்டுள்ளார். 'திராவிட பிரகாசிகை' (1889) என்பது இவரது கட்டுரைகளின் தொகுப்பு நூலா கும். **மயிலை சண்முகம் பிள்ளை** *(1859-1905)*: இவர் சென் னையில் பிறந்தவர். மகாவித்துவானாக விளங்கியவர். திரு. கா. நமச்சிவாய முதலியார் இவரது மாணவராவர். 'மணிமேகலை' என்னும் பௌத்த காவியத்தை முதன் முதலாக 1894இல் பதிப்பித்தவர். இவர் **வித்யா விநோதினி** (1889 - 1892) எனும் இதழை திரு. வாசுதேவ முதலி யாரின் துணையுடன் நடத்தினார். **முத்து தம்பிப் பிள்ளை** (1859-1917) யாழ்ப்பாண மானிப்பாயில் பிறந்தவர்.

பல தொழில்கள் செய்து வந்தவர். சிறந்த புலவராக இருந் தவர். 1884இல் காரை-பெறையாற்றில் **சத்தியாபிமானி** எனும் வார இதழைத் தொடங்கி நடத்தியவர். 1885இல் சென்னையில் ஆண்டர்சன் ஜுபிலி அச்சகத்தை நிறுவி காளி தாசன் வரலாற்றை வெளியிட்டவர். இவர் தொகுத்த **'அபிதானகோசம்'** 1902இல் வெளியாகியது இது இலக்கியத் தொடர்பு கொண்ட பொருள்களை மட்டும் விளக்குவது; தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் முன்னோடி நூல் இதுவாகும். இதற்குப் பின்னர்தான் ஆ. சிங்காரவேலு முதலியார் தொகுத்த 'அபிதானசிந்தாமணி' 1910இல் 1048 பக்கங் களுடன் வெளியிடப்பட்டது.

**ஜே. எம். நல்லசாமிப்பிள்ளை** (1864-1920) திருச் சியில் பிறந்தவர். பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். நீதிபதி யாகப் பணியாற்றியவர். பொதுவாகத் தமிழ்ப்பணியிலும் சிறப்பாகச் சைவசித்தாந்தத் துறையிலும் ஈடுபட்டிருந்தவர் இவர் **சித்தாந்த தீபிகை** என்னும் மாத இதழை ஆங்கிலத் திலும் தமிழிலும் சில ஆண்டுகள் வரை திறம்பட நடத்தி தந்தவர். சைவ சித்தாந்த நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து விளக்கங் கொடுத்தவர்.

**காஞ்சி நாகலிங்க முதலியார்** (1865-1950) காஞ்சிபுரத்தில் செங்குந்த மரபில் பிறந்தவர் சிறந்த புலவராகத் திகழ்ந்தவர் 1927இல்**செங்குந்தமித்திரன்** எனும் சமூகஇதழைத்தொடங்கி நடத்தி வந்தவர். 'ஆயிரம் பிறை கண்டவர்' என்று போற்றப் பட்டவர். தமிழகராதி உட்பட பல நூல்களை வெளியிட்ட வர். **இரா. இராகவையங்கார்** (1870-1946), சதாவதானி முத்துசாமி ஐயங்காரிடம் தமிழ்க் கற்று புலவரானவர். கல் வெட்டறிஞர் கோபிநாத ராவிடம் கல்விபயின்றவர். திருச்சி தேசீயப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். 1903 இல் தொடங்கப்பட்ட **செந்தமிழ்** எனும் இலக்கிய மாத இத ழின் முதல் ஆசிரியராக இருந்தவர். இவர் பல நூல்களின் ஆசிரியரும் ஆவர். **வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார்**

*1870—1903:* இவர் மதுரையிலுள்ள விளாச்சேரியில் பிறந்தவர். மதுரை மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் முறையாகத் தமிழ்ப் பயின்றவர். சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் தத்துவத்தில் பி. ஏ. பட்டம் பெற்றவர். இதே கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். தமது பெயரைத் தூயத் தமிழில் பரிதிமாற் கலைஞர் என்று முதன் முதலில் மாற்றிக் கொண்டவராவர். **ஞானபோதினி** எனும் இலக்கிய மாத இதழை இவரது நண்பர். மு. சி. பூரணலிங்கம் பிள்ளையுடன் சேர்ந்து 1890—1903 வரை நடத்தியவர். இவ்விதழில் இவர் எழுதிய பல வகையான நூல்கள் முதலில் வெளியிடப்பட்டன. இவர் எழுதியவற்றுள் 'தமிழ்மொழியின் வரலாறு', 'தனிப் பாசுரத் தொகை', 'நாடகவியல்' என்பனவற்றைச் சிறப்பித்துக் கூறலாம். நாடக நூல்கள் இல்லாக் குறையைப் போக்க இவர் தமிழில் பல இலக்கிய நாடக நூல்களை இயற்றியுள்ளார். அவற்றில் தாமும் நடித்துப் பெருமை சேர்த்துள்ளார். சதாவதானி **செய்குத்தம்பிப் பாவலர்** *(1874—1950)*: இவர் குமரிமாவட்ட கோட்டாறு என்னும் பேரூரில் நெசவாளர் குடும்பத்தில் பிறந்தவர். இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர்.

ஆயிரம் அவதானங்களைச் செய்து, தமது அரிய நினைவாற்றல் திறனைப் புலப்படுத்தியவர். இவர் **இஸ்லாம் மித்திரன், எதார்த்த வாதி** என்னும் தமிழ் இதழ்களின் ஆசிரியராக இருந்துள்ளார். பல நூல்களையும் இயற்றியுள்ளார். 'அருட்பா—மருட்பா வாதப்போரில் அருட்பா கட்சியை இவர் ஆதரித்து, பல இடங்களில் திறம்பட வாதித்து வெற்றி பெறச் செய்துள்ளார். **மு.சி. பூரணலிங்கம் பிள்ளை** *(1786—1947)* : இவர் திருநெல்வேலி மாவட்ட முந்நீர்ப்பள்ளம் என்னும் ஊரில் பிறந்தவர். பி. ஏ. எல். டி. பட்டம் பெற்றவர் ஆங்கிலமும் தமிழும் கைவரப் பெற்றவர். இலக்கிய வரலாற்றுப் பாலபாடம் இவரால் 1904இல்

வெளியிடப்பட்டது. இவர் 'ஞான போதினி' எனும் இதழின் ஆசிரியராகவும் இருந்துள்ளார். இவர் பல தமிழ், ஆங்கில நூல்களை இயற்றியுள்ளார். இவர்தான் முதன் முதலில் தமிழ் இலக்கியத்தைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதியவராவர். 'Ravana the great' எனும் நூலையும் எழுதி வெளியிட்டுள்ளார். **வேதாந்தி கோ. வடிவேலு செட்டியார் (1863-1935)** : இவர் சென்னையில் பிறந்தவர்; பலரிடம் தமிழைக் கற்றவர். சாது இரத்தின செட்டியாரிடம் வேதாந்த நூல்களை முறையாகப் பாடங்கேட்டுத் தேர்ச்சி யடைந்தவர். சென்னை இந்து தியாலாஜிகல் உயர் நிலைப் பள்ளியில் 37 ஆண்டுகள் வரை தமிழாசியராகப் பணி புரிந்தவர். திரு.வடிவேலு செட்டியார் 1911—1922 வரை **லோகோபகாரி** இதழின் ஆசிரியராகவும், **சக்கரவர்த்தினி** எனும் இதழ்க்கு 5 ஆண்டுகள் ஆசிரியராகவும், அவைகளின் உரிமையாளராகவும் விளங்கியவர். இவர் உரையாசிரியராய், பதிப்பாசிரியராய், நூலாசிரியராய், இதழாசிரியராய்த் திகழ்ந்துள்ளார். இவரது மாணவர்களில் தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரும், மெ. துரை அரங்கனாரும் குறிப்பிடத்தக்கவராவர்.

**சுவாமி ஞானப்பிரகாசர் (1875—1947)** : இவர் ஈழ நாட்டில் மாணிப்பாய் ஊரில் பிறந்தவர்; 72 மொழிகள் அறிந்தவர்! தமிழ் மொழியை உலக மொழிக் குடும்பங்கள் அனைத்துடன் ஒப்பிட்டாய்ந்து, அனைத்து மொழிகளுக்கும் தமிழே ஆதிமொழி என்று முழக்கமிட்டவர்! இவரது 'தமிழ்ச் சொற்பிறப்பகராதியே (Tamil Etymological Dictionary) ஆறு தொகுதிகளாக முதன் முதலாக வெளியிடப்பட்டுள்ளது. இவர் உயிருடன் இருக்கும்போதே இவரது அஞ்சல் தலையை வெளியிட்டு ஜெர்மனி இவரைப் பெருமைப்படுத்தியுள்ளது! தமிழ்ச் சொற்களின் தாதுக்கள் எபிரேய, மங்கோலிய மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் உள்ளன என்று கண்டு பிடித்துக் கூறியவர் ஞானப்பிரகாசரே ஆவர். இவர் **குடும்பவாசகம்** என்னும் சுத்தோ

லிக்க இதழையும் நடத்தியுள்ளார். அஷ்டாவதானம் **பூவை கலியாணசுந்தர முதலியார்** (1854—1918): இவர் சென்னையில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியவர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையுடன் பயின்றவர். சைவ சித்தாந்த சமாஜத்தின் வெளியீடான **'சித்தாந்தம்'** எனும் சைவ இதழ்க்கு ஆசிரியராக இருந்தவர்; பல நூல்களின் ஆசிரியருமாவர். **பெ. சுந்தரம்பிள்ளை** (1855—1897): இவர் திருவனந்தபுரத்தில் பிறந்தவர்; எம். ஏ. பட்டம் பெற்றவர். தமிழும் ஆங்கிலமும் தத்துவமும் நன்கு அறிந்தவர். **மனோன்மணியம்** எனும் அகவற்பாவில் அமைந்த நாடகநூலை முதன் முதலாக இயற்றி வெளியிட்டவர். அதில் 'அந்தணர் ஓம்பும் வேள்வித் தீயினும் சுதந்திரம் புனிதமானது' எனச் செப்பியுள்ளார்.

'நூற்றொகை விளக்கம்' எனும் தமிழ் நூலையும், பல ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆங்கிலத்திலும் எழுதியுள்ளார். **'பிபில்ஸ் ஒபினியன்'** எனும் ஆங்கில இதழின் ஆசிரியராகவும் இருந்தவர். **கே. என். சிவராஜ பிள்ளை**: 1879இல் நாகர் கோயிலில் பிறந்தவர். பி. ஏ. பட்டம் பெற்றவர். தமிழும் ஆங்கிலமும் நன்கு அறிந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதல் தமிழ்த் துறைத் தலைவராக இருந்தவர். 'பிபில்ஸ் ஒபினியன்' என்னும் ஆங்கில இதழ்க்கும் **நாஞ்சில் நேசன்** எனும் தமிழ் இதழுக்கும் ஆசிரியராக இருந்தவர். 'மலபார் குவார்ட்டர்லி' எனும் ஆங்கில இதழில் திருவிதாங்கூர் சமஸ்தான அரசின் ஊழலை அஞ்சாது எடுத்துரைத்து எழுதியவர். தமிழில் சில ஆராய்ச்சிகள், அகஸ்தியர் முதலிய பல நூல்களின் ஆசிரியருமாவர்.

**பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார்** (1876—1931): இவர் காவேரிப் பாக்கம் என்னும் ஊரில் பிறந்தவர். மயிலை சண்முகம் பிள்ளையிடம் முறையாகத் தமிழ்ப் பயின்றவர். இவர் தொடக்கப்பள்ளி ஆசிரியர் நிலையிலிருந்து உயர்நிலைப் பள்ளியாசிரியராகவும், கல்லூரித் தமிழ்ப் பேராசியராகவும் படிப்படியாகத் தமது அயராது

முயற்சியினாலும் திறமையினாலும் உயர்ந்துமுன்னேறியவர். கீழ் வகுப்பு முதல் பி. ஏ. பட்டம் போன்ற மேல் வகுப்பு வரை, இவர் எழுதிக் கொடுத்த நூல்கள், ஒவ்வொரு வகுப்பிற்கும் ஏற்றவாறு பொருளும் நடையும் மேலோங்கி அமைந்திருந்தன. அவை பாடநூல்களாக வைக்கப்பட்டதால், இவருக்குப் பேரும் புகழும் செல்வமும் பெருகிவரலாயின இவர் **நல்லாசிரியன்** எனும் மாத இதழை 15ஆண்டுகள் வரைபள்ளி ஆசிரியர்களின்உயர்வுக்காக வேண்டிதொடர்ந்து நடத்திவந்தார். **தமிழ்க்கடல்** எனும் இதழையும், தமிழ்க் கடல் அச்சகத்தையும் தமிழ்க் கடல் மாளிகையையும் கட்டிக் காத்து வந்தார். வறிய புலவர்களுக்கு வரையாது வழங்கிய வள்ளலுமாவார்! தமிழ்ப் புலவராவதற்கு வடமொழியும் கட்டாயத் தேவை என்ற நிலையை மாற்றிய பெருமை கா. நமச்சிவாயனாரையே சாரும்! தமிழர் திருநாளைத் தோற்றுவித்துப் போற்றிய பெருமையும் இவருக்கே உண்டு. 'ஜனவிநோதனி' என்னும் மாத இதழில் தொடர்ந்து வெளியான நல்ல கட்டுரைகளைந் தெரிந்து எடுத்து, அவைகளைத் தொகுதி தொகுதியாக இவர் வெளியிட்டுள்ளார். இவர் பல நூல்களின் பதிப்பாளராகவும், நூலாசிரியராகவும் உரையாசிரியராகவும் விளங்கியுள்ளார்.

**வ. உ. சிதம்பரம் பிள்ளை** *(1872—1936)*: இவர் ஒட்டப்பிடாரம் எனும் ஊரில் பிறந்தவர். இவரது தந்தையார் எட்டயபுர சமஸ்தான வழக்கறிஞராக இருந்தவர். இவர் தமிழும் ஆங்கிலமும் நன்கு அறிந்தவர், வழக்கறிஞராகத் தொழில் பார்த்து பொருளீட்டியவர். அரசியல் விழிப்பு பெற்று நாட்டுப் பற்றாளராகத் திகழ்ந்தவர். சுதேச கப்பல் நிறுவனத்தை நிறுவி நடத்தியதால் பெருந்தொல்லைக்கு உள்ளானவர். 'கப்பலோட்டியதமிழர்' எனப் பெயர் சூட்டப்பட்டவர். சுப்பிரமணிய சிவா, பாரதியாருடன் நெருங்கிப் பழகியவர். பல தொழிற் சங்கங்களை நிறுவி தொழிலாளர் ஏற்றத்திற்காகப் பாடுபட்டவர். ஆங்கிலேய ஆட்சி இவரடைந்து வரும் செல்வாக்கைக் கண்டு அஞ்சி,

இவர் மீது அரச நிந்தனை வழக்குத் தொடுத்து, இரு ஆயுள் தண்டனைகளை அளித்தது. என்றாலும் இவர் அஞ்சாது சிறை சென்றார். செக்கிழுத்தார்! சிறையிலிருந்தபோது கிடைத்த சிறு ஓய்வு நேரத்தையும் வீணாக்காது பல நூல் களை எழுதினார். அவற்றுள் ஒன்று 'வ. உ. சி. சுயசரிதை!' சிறை சென்ற நாட்டன்பர்களில் தன்வரலாற்றை அகவற் பாவில் எழுதியவர். வ. உ. சி. யே ஆவர்! அரசியல் வாதி யான இவர், தொல்காப்பிய இளம்பூரணர் உரையையும் பதிப்பித்துள்ளார். தம் நண்பரான பாரதியார், 'தமிழில் எழுத்துக்குறை' என்று எழுதிய கட்டுரைக்கு விவேகபாநு வில் விரிவான மறுப்புரை தந்துள்ளவர். சென்னை 'விவேக பாநு', டர்பன் 'ஞானபாநு' ஆகிய இதழ்களில் அவ்வப் போது கட்டுரைகளும் தலையங்கங்களும் எழுதியிருக்கிறார். பலமொழிகளில் இதழ்கள் கொண்டு வரவேண்டும் என்ற விரிந்ததிட்டம் ஒன்று போட்டிருந்தார். சிறைவாழ்வு அவரது எண்ணத்தை நிறைவேறாமல் செய்து விட்டது. வாரி வழங்கிய வ, உ. சி. கடைசியில் நாட்டன்பர்களின் பாரா முகத்தாலும், வறுமையாலும் வாடி உளம் நொந்தார்.

**கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் பி. ஏ.** (*1872—1929*) இவர் தமிழும் ஆங்கிலமும் கற்றவர். தமிழையும் சைவத் தையும் இரு கண்ணெனப் போறியவர் **சைவவித்யா** எனும் இதழை நடத்தியவர்; 108 சிவத்தலங்கள் சென்று வழிபாடு நடத்தியவர்சிவஸ்தல மஞ்சரியை வெளியிட்டவர்''திராவிட வேதத்திரட்டை''த் தொகுத்துக் கொடுத்தவர்.'சேக்கிழார் பிள்ளைத் தமிழைப்' பதிப்பித்தவர்; மருட்பா கட்சியைச் சேர்ந்தவர். **மறைமலையடிகள்** (*1876—1950*) : இவர் நாகப்பட்டினத்தில் பிறந்தவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி களைக் கற்றிந்த பெரும் புலவர். 'சைவசித்தாந்த சண்ட மாருத' சோமசுந்தர நாயகரிடம் சைவ சித்தாந்தத்தை முறையாகப் பாடங்கேட்டுத் தேர்ந்தவர். கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். தனித்தமிழ் இயக்கம் கண்டவர். **ஞானசாகரம்** என்னும் அறிவுக் கடல் இதழைத் தொடர்ந்து வெளியிட்டு, அதில் தமது ஆராய்ச் சிக் கட்டுரைகளையும், புதினங்கள் நாடகங்கள் ஆகிய

வற்றையும் எழுதி வெளியிட்டு, பின்னர் நூல்களாக்கிக் கொண்டவர். தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய மறைமலையடிகள்தான், முதன் முதலில் 'கோகிலாம்பாள் கடிதங்கள்' எனப் பெயரிட்டு, மடல் வாயிலாகப் புதினம் எழுதும் முறையைத் தமிழில் வெளியிட்டவராவர் 'அம்பிகாபதி அமராவதி' என்ற நாடகத்தையும், மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி? என்ற வாழ்வியல் நூலையும், 'பட்டினப் பாலை' ஆராய்ச்சி முல்லைப் பாட்டு ஆராய்ச்சி, 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' போன்ற திறனாய்வு நூல்களையும், 'சாகுந்தலம்' என்னும் மொழி பெயர்ப்பு நூலையும், 'தமிழர்மதம்', முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர் என்ற நூல்களையும் எழுதி வெளியிட்டுள்ளார். இவரது 'மாணிக்க வாசகரும் காலமும்' என்ற பெரு நூல், முற்காலத்தில் வெளிவந்த நூல்களுள் மிகவும் பெரியது; ரூபாய் நூறு விலை வைக்கப் பட்டதும் ஆகும்! பிற்காலத்தில் ரூ.200க்கு மேல் விலை போனதும் ஆகும்!

•

**திரு. வி. கலியாண சுந்தரனார்** (*1883—1953*) : இவர் சென்னைக்கு அருகிலுள்ள துள்ளம் என்னும் ஊரில் பிறந்தவர். இவரது முன்னோர் திருவாரூரைச் சேர்ந்தவர்கள். இவர் சென்னையில் வெஸ்லியன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது, தாம் பின்பற்றிய தமிழாசிரியர் நா. கதிரைவேற் பிள்ளையின் மீது சுமத்தப்பட்ட கொலை வழக்குக் குறித்துச் சாட்சியம் கூற சென்றதால், உரிய நேரத்திற்குள் வந்து தேர்வு எழுதத் தவறியதால், தமது பள்ளியிறுதி வகுப்பில் தேற முடியாமல் போனது! என்றாலும் தமது அறிவைப் பலதுறை அறிஞர்களின் நூல்களைப் படித்தும், பேச்சுக்களைக் கேட்டும் வளர்த்துக் கொண்டார். தம் குடும்பத்தைக் காக்க வேண்டி ஸ்பென்சர் நிறுவனத்தில் கணக்கு வேலை பார்த்தார். அங்கு அரசியல் கருத்துகளை இதழ்களைப் படித்துச் சொல்வதன் மூலம், தம் உடன் தோழர்களுக்கு விளக்கி வந்தார். நிறுவனத்திற்கு இது

பிடிக்காததால் அதிலிருந்து விலகினார். பின்னர் வெஸ்லி யன் பள்ளியில் ஆசிரியராகவும், அதன் கல்லூரிப் பகுதிக்குத் தமிழாசிரியராகவும் பணியாற்றினார். அதை விடுத்து, அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றதன் காரணமாகத் **தேச பக்தன்** எனும் நாளேட்டிற்கு 7—12—1917 இல் ஆசிரியராக அமர்ந்து 2½ ஆண்டுகள் வேலை பார்த்தார். 28—2—1919 இல் 'தேச பக்த'னுக்குக் கயட்டி ஈடுகாணம் பறிக்கப்பட்டது. 'தேச பக்த'னில் திரு. வி. க. எழுதிய ஆசிரியக் கட்டுரைகளே, **தேச பக்தாமிர்தம்** (1918) எனும் பெயரில் முதல் தலையங்கம் நூலாக வெளியிடப்பட்டது! இங்கும் உரிமை வேட்கை காரணமாக விலகி, தொழிலாளர் தந்த நிதி உதவியைக் கொண்டு சாது அச்சகத்தை நிறுவி, 22—10—1920இல் **நவசக்தி** எனும் வார இதழைத் தொடங்கினார். 20 ஆண்டுகள் வரை இதற்கு ஆசிரியராக இருந்தார். திரு. வி. க. தமிழ் இதழ்த் துறைக்கு வருவதற்கு முன்பு, அத்துறையில் பிறமொழி ஆதிக்கமே காணப்பட்டது.

திரு. வி. க. மெல்ல மெல்ல பிற மொழிகளுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைக் கையாண்டும், தமது பண்டித நடையையும் எளிமையாக்கி, படிப்பவர் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் விறுவிறுப்பாகவும் இனிமை பயப்பதாகவும் மாற்றினார். திரு.வி. க. தமது எழுத்தாற்றலாலும் பேச்சாற்றலாலும், தமிழ் நாட்டில் நல்ல தமிழ் வழங்க வழிவகுத்தார்; அரசியலில் விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார். தமிழ்ப் பற்றை வளர்த்தார். நாளேட்டில் அன்றாடம் வரும் ஆங்கிலச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைப் புதிதாகப் படைத்துக் கொடுத்தார்! 'சத்தியாக்கிரகம்' அறப்போராயிற்று; 'Non -cooperation' ஒத்துழையாமையானது; 'காந்திஜி' — காந்தியடிகளானார்; 'ஜாமீன்' — ஈடுகாணமாயிற்று. இப்படி எண்ணற்றச் சொற்களை - நாட்டுப்பற்றும் குறையாமலும் மொழிப் பற்றுக்கும் தடையில்லாமல் தகுதியான சொற்களைப்

பெய்து வழக்கிற்கு வரும்படி செய்து விட்டார்! இவர் இதழாசிரியராய்ப் பெற்றச் செல்வாக்கையும், அரசியலில் இவர் காட்டிய ஈடுபாட்டையும், தொழிலாளர்க்குத் தலைமைத்தாங்கி நடத்திய சிறப்பையும் கண்டு அஞ்சிய ஆங்கிலேய அரசாங்கம், வெலிங்டன் ஆளுநராக இருந்த காலத்தில், நாடு கடத்த எண்ணியது! இவர் நடத்திய இதழ்கள் பல முறை ஈடு காணம் கட்டும்படி வற்புறுத்தப் பட்டன!

திரு. வி. க. தாம் சார்ந்திருந்த காங்கிரஸ் கட்சியையும், தம் காலத்தில் நடந்த தமிழ் இதழ்களையும், தாம் தலைமை தாங்கி நடத்திய தொழில் அமைப்புகளையும் நல்ல தமிழைக் கையாளும்படி செய்துள்ளார். தமிழ் இதழ் களில் இவர் எழுதிய கட்டுரைகள், பிற்காலத்தில் **கட்டுரைப் பூஞ்சோலைகள்** என்ற பெயரில் நூலாக்கப்பட்டன; இவர் தலைமைத் தாங்கிய பேச்சுகள், **தமிழ்த் தென்றல்** என்று நூல் வடிவம் பெற்றன; மேலும் தனித் தனி தலைப்புகளில் நூலாக்கவும் பட்டன.

இவரிடத்தில் தமிழ் இதழியல் தொழிலைப் பயின்றவர் களே திருவாளர்கள் பரலி. சு. நெல்லையப்பர், வெ. சாமி நாத சர்மா, ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) போன்றவராவர். காங்கிரஸ் எனும் பேரியக்கத்தை தமிழ் நாட்டில் வளர்த்து விட்ட பெரு மக்களுள் திரு. வி. க. விற்குத் தனிச் சிறப் புண்டு. அதே போல, இந்தியாவில் முதல் முதலாக த்தொழி லாளர் இயக்கத்தை அமைப்பு முறையில் தோற்றுவித்த மூலவர்களில் முதன்மையானவராக விளங்கியவராவர். அடையாறு ருக்குமணி- அருண்டேல் திருமணம் நடைபெற்ற போது, 'இந்து', 'சுதேசமித்திரன்' போன்ற தேசிய இதழ் கள் எதிர்த்தன. சுப்பிரமணிய சிவா, வ. உ. சி. போன்ற தேசியத் தலைவர்களும் கூக்குரல் இட்டனர்! ஆனால், திரு. வி. க. ஒருவரே அத் திருமணத்தை வரவேற்றுப் பாற்றினவராவர். சாதிக் கொடுமைகள் ஒழியவும், பெண் ணின் பெருமை ஓங்கவும், தொழிலாளர் மேன்மையுறவும் திரு. வி. க. அயராது பாடுபட்டார்.

அவர் சிறந்த ஆசிரியராக விளங்கியும், இதழாசிரிய ராகத் திகழ்ந்தும், அரசியல் தலைவராக ஏற்றமுற்றும், ஒப்பற்ற பேச்சாளராகப் பெயர் எடுத்தும், தொழிலாளர் தலைவராகப் புகழ் பெற்றும், தமிழ் உலகம் அறிந்த சான்றோராராகக் காட்சியளித்துங் கூடத் தமக்கெனத் தனிச் சொத்து சேர்த்தாரில்லை; இன்ப வாழ்வு வாழவில்லை; எளிமையாக அடக்கமாகப் பலன் கருதாத தொண்டுகள் புரிந்து, தமது நூல்களையே தமிழகத்திற்கு விட்டுச் சென்றுள்ளார். இப்படிப் பட்டவர்க்கு— இந்திய அரசு அஞ்சற் தலை வெளியிட்டுச் சிறப்பிக்காதது பெருங் குறையே யாகும்!

திரு. வி. க. காந்தியடிகளின் கொள்கைகளை ''மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்'' என்னும் நூலைத் தமிழில் எழுதியுள்ளார். காந்தியடிகளைக்குறித்துஇந்தியாவில் வேறு எந்தத்தாய் மொழியிலும் வெளிவராது, தமிழ் மொழியில் மட்டும் வெளியிடப்பட்ட முதல் நூலாகும். இவர் எழுதிய நூல்களுள் 'பெண்ணின் பெருமை', 'முருகன் அல்லது அழகு', 'இந்தியாவும் விடுதலையும்', 'திரு. வி. க. வின் வாழ்க்கைக்குறிப்புகள்' போன்றவை சிறப்பித்துச் சொல்லக் கூடியவையாகும். திருமதி சிம்சனுக்காக எட்டாவது எட்வர்டு எனும் ஆங்கிலேயே பேராட்சியின் இளவரசன் முடி துறந்ததைப் போற்றி, ''முடியா? காதலா? துறவா?'' எனும் தலைப்பில் திரு. வி. க. ஒரு நூல் எழுதியுள்ளார்!

சைவக் குடும்பத்தில் பிறந்து, சைவ பற்று மிக்கவராய் விளங்கி, மருட்பா கட்சிக்காக வாதாடி, காங்கிரசுக்காகப் பெரும் பாடுபட்டு, சமரச சான்றோராகத் திகழ்ந்து, இராயப் பேட்டையில் உண்மையான துறவியாக வாழ்ந்தவர் தமிழ் முனிவர் திரு. வி. க. ஆவர். இவர் தொழிலாளர் போராட்டத்திற்குத் தலைமைத் தாங்கியதற்காக தம் வீட்டிலேயே ஓமந்தூரார் ஆட்சியின் போது சிறை வைக்கப் பட்டார். தம் இறுதிக் காலத்தில் எவ்விதச் சடங்கின்றி தம் உடலை எடுக்க வேண்டும் என்று கூறிப் போந்தவர்.

**சுப்பிரமணிய சிவா** (*1884—1925*) : இவர் மதுரை மாவட்டத்திலுள்ள வத்தலகுண்டு என்னும் ஊரில் பிறந்தவர். சிற்றூர்கள் தோறும் கால் நடையாகவே சென்று பாரதியாரின் வீரமூட்டும் பாடல்களைப் பாடி நாட்டுப் பற்றைப் பரப்பியவர். வ. உ. சி., பாரதியின் உற்ற நண்பர். சிவா மீது ஆங்கிலேய அரசாங்கம் 100க்கு மேற்பட்ட 'ஜாமீன்' வழக்குகளைப் போட்டது. இவற்றுக்கெல்லாம் சிறிதும் அஞ்சாமல் சிவா நாட்டின் மேன்மைக்காகத் தொண்டு புரிந்தார். 1908 இல் ஆங்கில அரசாங்கம் சிவா மீது 'இராஜ துரோக' வழக்குத் தொடுத்தது; முதலில் 10 ஆண்டுகள் சிறை தண்டனை விதித்தது; பிறகு அதை 6 ஆண்டுகளாகக் குறைத்தது. சிறையிலே மிகக் கொடுமையானதும் பயங்கரமானதுமான வேலை ஒன்றைச் செய்யும்படிப் பணித்தது. கம்பளி மயிரைச் சுண்ணாம்பில் ஊர போட்டுக் காயவைத்து வெட்ட வேண்டிய பணியைக் கொடுத்தது. அவ்வாறு செய்யும் போது சுண்ணாம்பிலிருந்து தூசி உண்டாகி உடல் நலத்தைக் கெடுக்கும். அக் கொடுமையான வேலையைச்சிறிதும் கலங்காமல் செய்துதன்னம்பிக்கை இழக்காமல் தண்டனையை அனுபவித்து 1912 இல் சிவா விடுதலை அடைந்தார்.

1912 இல் **ஞான பாநு** என்னும் மாத இதழைத் தம் மனைவி மீனாட்சியம்மாள் பெயரில் சிவா நடத்தி வந்தார். மற்ற இதழ்கள் பாரதியாரின் பாடல்களை வெளியிட அஞ்சிய போது, சிவா துணிவுடன் அவரது கவிதைகள், கட்டுரைகளைத் தமது இதழில் வெளியிட்டுள்ளார்! 1916ல் **பிரபஞ்ச மித்திரன்** என்னும் வார இதழையும், 1919 இல் **இந்திய தேசாந்திரி** எனும் மற்றொரு வார இதழையும் தொடங்கி நடத்தியுள்ளார். 'பழைய நாரதர்' என்பது இவரது புனை பெயரில் ஒன்றாகும். சிவா சிறையிலிருந்த போது 'சச்சிதானந்த சிவம்' என்ற நூலை எழுதினார். மேலும் 25க்கு மேற்பட்ட நூல்களை எழுதிக் கொடுத்தார்; இவைகளில் பெரும்பான்மையானவை 'சாது இரத்தின

சத்குரு புத்தக சாலை'யினரால் வெளியிடப் பெற்றன. சிவா பல நாடகங்களை எழுதியும் நடித்தும் நாட்டுப்பற்றை நாடெங்கும் கிளர்ந்தெழச் செய்தார். 'சுயதேவை பூர்த்தி' என்ற முழக்கத்தை முதலில் எழுப்பியவர் சிவாவே ஆவர்! சிவா 1923 இல் 'பாரத ஆசிரமம்' என்னும் அமைப்பைச் சேலத்தில் நிறுவினார்; பாப்பாரப் பட்டியில் 'பாரத மாதா'வுக்குக் கோயில் கட்டினார். அங்கு எல்லா மத நூல் களையும் ஓத திட்டமிட்டார்! சுப்பிரமணிய சிவா இளைஞர் களை உடனழைத்துக் கொண்டு, பாரதி பாடல்களை வீரத் துடன் பாடச் செய்து, விடுதலை யார்வத்தை நாட்டு மக்க ளிடம் உண்டாகும்படி பணி புரிந்தார். அக்காலத்தில் இவருடன் சென்ற இளைஞர்களில் ஒருவர்தான் இன்றைய 'கல்கி' சதாசிவம்!

சுப்பிரமணிய சிவா அரசியலில் திலகரின் தீவிரக் கருத்தை ஏற்றவர். ஆனால் சமுதாயக் கொள்கையில் தீவிரத்தைக் காட்டாமல் வைதீக மனப்பான்மையையே தம் இதழ் வாயிலாகத் தெரிவித்துள்ளார்! இவர் தொழுநோய்ப் பிடித்து அவதியுற்ற போதும், தொடர் வண்டியில் ஏறிச் செல்ல தடுக்கப்பட்ட போதும், அஞ்சாமல் மாட்டு வண்டியில் ஊர் ஊராகச் சுற்றி அயராது பாடுபட்ட பெரு மகனாவார். சென்னையில் சிவாவிற்குத் தங்க இடம் கொடுக்க பலர் அஞ்சிய போது, 'சுதேச மித்திரன்'ஜி சுப்பிர மணிய ஐயர்தான், தாம் இருந்த வீட்டின் வாசற் பக்க அறையை இவருக்காகத் தந்தவராவர்!

**மகாவிகட தூதன்** *(1909)*— இதனைச் சென்னையில் வாழ்ந்த **டி. ஐ. சாமிக் கண்ணுப் புலவர்** நடத்தியுள்ளார். **இரஞ்சிதபோதினி** எனும் மாத இதழை **வாசுதேவராயகேய்க் வார்** என்னும் மாராட்டியர்,'தமிழ்ப் பூடணம் என்றசிறப்புப் பெற்று நடத்தியுள்ளார்! **சுகாபிவிருத்தினி** எனும் இதழை **நா. வேங்கடாசல நாயகர்** புதுவையிலிருந்து நடத்தினார் **வெற்றிக்கொடியோன் த. செய்யப்ப முதலியாரால்** சென்னை யிலிருந்து நடத்தப்பட்ட இதழாகும். இவர் மேரி அரசிக்

கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். **இராய சொக்க லிங்கம்** அவர்கள் **ஊழியன்** எனும் நாளிதழின் ஆசிரியராக இருந்தவர். நாட்டுப்பற்று மிகுந்து பல முறை சிறை சென்ற வர். பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

**குருமலை சுந்தரம் பிள்ளை** திருநெல்வேலியில் சர்வஜன மித்திரன் (1904) எனும் வார இருமுறை இதழை நடத்திய வர். 'சுதேசமித்திர'னில் துணையாசிரியராகப் பணியாற்றிய வர்; **கேசரி** எனும் வார இதழையும் நடத்தியவர். ஜி சுப்பிர ணிய ஐயரின் வரலாற்றை எழுதியவர். தம் ஊருக்குத் திரும்பி வழக்கறிஞர் தொழிலைப் பார்த்தவர். திரு.**வீ. துரைசாமி முதலியார்** புதுவை அரசினர் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். **தமிழ்மகவு** இதழ்க்கும் ஆசிரியராக இருந்து நடத்திவந்தார். **செந்தமிழ்ப்பாநு** எனும் இதழைத் **திரு. வை. செல்லையச் செட்டியார்** திரு வாரூரிலிருந்து நடத்தினார். **சத்திரியமித்திரன்** எனும்இதழை **விஜய துரைசாமி கிராமணி** நடத்தினார் திரு. உ. வே. சா. நாடார் என்னும் சொல்லுக்கு இழி பொருள் கூறியதைக் கண்டித்து வழக்குத் தொடுத்து, தம் சொத்தை இழந்து வெற்றிக் கண்டவர் இவர் 'நமது குலத் தொழில்', 'சத்திரி யன் நாடார் என்னுஞ் சொல்லாராய்ச்சி' முதலிய நூல் களை எழுதினவர். ''நாடார் என்னுஞ் சொல்லராய்ச்சி நூல் பல நூல்களின் மேற்கோளோடு சிறந்து விளங்கு கிறது'' என்று 'தமிழ்ப் புலவர் அகர வரிசை' பகுதி 3 பக்கம் 95 இல் குறிக்கப்பட்டுள்ளது.

**ஏ. சங்கரலிங்கம் பிள்ளை** பி. ஏ. : இவர் சென்னையில் 'மதராஸ் ஸ்டாண்டர்டு' என்ற ஆங்கில தினசரியில் உதவி யாசிரியராக இருந்தவர். **சுதேசி** என்ற தமிழ் வார இருமுறை இதழைத் தொடங்கி 3 ஆண்டுகள் வரை நடத்தியவர். பின்பு 'சுதேச மித்திரன்' துணையாசிரியரானார். அடுத்து 'இந்து'வில் துணையாசிரியராகப் பணியாற்றினார். '**கன்னிகையின் முத்தம்**' என்ற புதினத்தின் முதல் இரண்டு

பாகங்களை ஆங்கிலத்தினின்று மொழிப் பெயர்த்தார். இவர் மறைவுக்குப் பின் அடுத்த மூன்று பாகங்களை மொழி பெயர்த்தவர் நாகை சி. கோபால கிருஷ்ணப் பிள்ளை ஆவர். **கோவை ஜனாபி மானி** எனும் இதழை நடத்தியவர் **பி. வேணு கோபால சாமி நாயுடு** இவர் கோவை **சுஜனாபி மானி** எனும் தமிழ் வார இதழையும் நடத்தியுள்ளார்.

**சுயராச்சியா** எனும் பெயருள்ள நாளேட்டை **த. பிரகாசம்** தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மும்மொழி களிலும் தொடங்கி நடத்தினார். தமிழ் 'சுயராச்சியா'வில் **வ. ரா. எம். எஸ். சுப்பிரமணி ஐயர்** போன்றோர் துணையா சிரியராகப் பணியாற்றினர். பணமுடை காரணமாக 'சுயராச்சியா' நிறுத்தப் பட்டது. இதில் பணியாற்றிய வ. ரா. பின்னர் **சுதந்திரன், மணிக்கொடி, வீரகேசரி** போன்ற இதழ்களின் ஆசிரியரானார். இவர் பாரதியின் அன்பராகி அவரது பெருமையை உலகறியச் செய்தார், 'மகா கவி பாரதியார்' என்ற நூலை இயற்றினார். 'சுந்தரி, ''கோதைத் தீவு' போன்ற கருத்தாழமிக்க சீர்திருத்த நவினங்களைப் படைத்தார். நடைச் சித்திரம் வரைந்தார். இவை பின்பு நூல்களாயின. சமூகச் சீர் திருத்தத்திலும் ஆழச் சிந்திப்பதிலும் 'அக்கிரகாரத்து அதிசய மனிதராக'த் திகழ்ந்தார். இவர் தமிழ் மரபைப் பற்றிக் கவலைப்படாமல், தாம் நினைத்தபடி எழுத முற் பட்டவர், தமிழாசிரியர்களைக் குறைத்து மதிப்பிட்டவர் இவர். 'ஜவகர்லால் நேருவின் சுய சரித்திரத்'தையும் 'அவர் இந்தியா' என்ற நூலையும் தமிழில் மொழி பெயர்த்துள் ளார். ஆங்கிலத்திலுள்ள Mine, Ore, Metal என்பதற்குத் தக்க சொற்களைப் போடாமல் எல்லாவற்றிற்கும் லோகம் என்று மொழி பெயர்த்தக் குறைபாட்டைத் திரு. மு. அருணாசலம் எம். ஏ. தமது 'இன்றைய தமிழ் வசன நடை' எனும் நூலில் எடுத்துக் காட்டி அறிவுக் கொளுத்தியுள் ளார்!

**சுத்தானந்த பாரதியார்** 'சுதந்திரனிலும், 'பால பாரதி' யிலும் துணையாசிரியராகப் பணியாற்றியவர். பல நூல்களை இயற்றியுள்ளார்.

**சேலம் பி. வரதராஜுலு நாயுடு,** தமிழ்நாட்டில் காங்கிரசை நிலை நாட்டிய மூல முதல்வர்களில் ஒருவராவர். இவர் 'தமிழ் நாடு' எனும் நாளிதழை விறுவிறுப்பான நடையில், விடுதலைப் போரின் வெடி குண்டு போல் எழுதி நடத்தி வந்தார். அவர் எழுதிய தலையங்கங்களை 'இந்து' வும் 'சுதேச மித்திர'னும் முற்காலத்தில் எடுத்து வெளியிட்டுள்ளன. 'தமிழ்நாடு' இதழ், 'சுதேச மித்திர'னின் 'தனித்துவத்'தைப் போக்கியது! 'தமிழ்நாடு' இதழில் திரு. நாயுடு எழுதிய கட்டுரைக்காக ஆங்கில அரசு இவர் மீது வழக்குத் தொடுத்து 9 மாத சிறை தண்டனை கொடுத்தது. இவர் அரசியல், சமுதாயத் துறைகளில் முற்போக்கான கருத்துக் கொண்டராகத் திகழ்ந்தார். கோவிலில் பொட்டுக் கட்டும் வழக்கத்தையும், பெண்களை இழிவு படுத்தும் கொடுமையையும் எதிர்த்துக் குரல் கொடுத்தது! 'தமிழ்நாடு' வ.வே.சு. ஐயர் தலைமையில் நடைபெற்ற சேரன் மாதேவி குருகுலத்தில், பார்ப்பனப் பிள்ளைகளுக்குத் தனியாகவும், மற்ற பிள்ளைகளுக்கு வேறாகவும் உணவு பறிமாறிய ஏற்றத் தாழ்வு மனப்பான்மையை வன்மையாகக் கண்டித்துப் போராடியது, தமிழ்நாடு.

**டி.எஸ்.சொக்கலிங்கம்** தென்காசியில் 1899இல் விடுதலை உணர்வுள்ள குடும்பத்தில் பிறந்தார். அவர் படித்தது ஆறாம் வகுப்பு வரைதான்! பின்னர் தாமாகப் படித்து முன்னேறி விடுதலை இயக்கத்தில் தீவிர பங்கு கொண்டார். ஆஷ் கொலை வழக்கில் 2 ஆண்டு சிறை தண்டனை பெற்ற தென்காசி சிதம்பரம் இவருடைய தமையனார் ஆவர். திரு. சொக்கலிங்கம் இளைஞராக இருந்த போது 'தேச பக்த' னுக்கு ஒருகட்டுரை எழுதியிருந்தார். அக்கட்டுரைகாரணமாகத் 'தேச பக்த'னுக்காகக் கட்டியிருந்த ஈடுகாணம் பறி

முதலானது! அக்கட்டுரையை எழுதியவர் யார் என்று பிற் காலத்தில் திரு. வி. க. தமது 'வாழ்க்கைக் குறிப்பு'களில் பொறித்துள்ளார்.

18 வயதில் எழுத முற்பட்ட சொக்கலிங்கம், தமது 68 வயது வரை 50 ஆண்டுக் காலம் இடைவிடாது எழுதி வந் தார். 'கனல் கக்கும் எழுத்து, கருத்தாழம் கொண்ட கட்டுரைகள், கவர்ச்சி மிக்க நடை ஆகியவை சொக்கலிங் கத்தின் தனிப் பாணியின் முத்திரைகளாய் விளங்கின!'' என்று திரு. கா. திரவியம், தமது 'தேசியம் வளர்த்த தமிழ்' எனும் நூலில் சரியாக எடை போட்டுள்ளார்!

திரு. சொக்கலிங்கம் 1923 இல் சேலம் 'தமிழ்நாடு'' வார இதழில் துணையாசிரியராகச் சேர்ந்தார். 1927 இல் சென்னையில் அது நாளிதழாக மாற்றப்பட்ட போது, அதன் நிர்வாக ஆசிரியராக உயர்ந்தார். 1931 இல் இவரே **காந்தி** என்ற வார இருமுறை இதழைத் தொடங்கினார். 1933 இல் 'காந்தி'யை நாளிதழாகக் காலணா விலையில் சூடும் சுவை யுள்ள செய்தி இதழாக நடத்தினார்.

1934 இல் **தினமணி** எனும் நாளிதழைத் திரு. **சதா னந்தம்** தொடங்கியதும், திரு. சொக்கலிங்கத்தை அதற்கு ஆசிரியராக அமர்த்தினார். இவ்விதழ் பின்னர் கோயங் காவின் கைக்கு மாறியது. 1943 இல் துணையாசிரியர்களின் உரிமைக்காக வேண்டி திரு. சொக்கலிங்கம் 'தினமணி'யில் ஆசிரியப்பதவியிலிருந்து விலகினார் இவரைத்தொடர்ந்துபல துணையாசிரியர்கள்தம்பதவியிலிருந்து விலகிக்கொண்டனர். **தினசரி,** நாளேட்டைச் சென்னையில் திரு. சொக்கலிங்கம் தொடங்கினார். நீதிக் கட்சியைக் கடுமையாகத் தாக்குவதில் பெயர் பெற்ற சொக்கலிங்கம், நீதிக் கட்சியின் தலைவர் களில் ஒருவரான சர். ஏ. இராமசாமி முதலியார் 'வைசிய ராய் கவுன்சி'லில் உறுப்பினராக இருந்த போது, தினசரி இதழ்க்குப் பத்திரிகைச் சலுகையும் நிதியுதவியும் பெற்ற தையும் இங்கு இடைமறுத்துச் சொல்லவேண்டியுள்ளது! உரி

மையுடன் சொந்தமாகத் தினசரியில் எழுதி வந்ததாலும் நிர் வாகக் கோளாறு காரணமாகப் பெரும் இழப்புக்கு உள்ளாகி 'தினசரி'யை நடத்த முடியாமல் போய் விட்டது!

பின்னர் **பாரதம், ஜனநாயகம்** எனும் பெயர்களில் இதழ் களை நடத்தினார் திரு. சொக்கலிங்கம். 'காமராஜர்' 'சுபாஸ் சந்திரபோஸ்' வரலாற்றையும், டால்ஸ்டாயின் போரும் அமைதியும் என்ற நாவல் மொழி பெயர்ப்பையும், 'முதுகளத்தூர் பயங்கரம்' போன்ற நூல்களையும் சொக்க லிங்கம் எழுதியுள்ளார். 'மணிக்கொடி' எனும் இதழையும் நவயுகப் பிரசுராலயம் என்ற அமைப்பையும் தொடங்கியதில் இவர் முன்னனியில் நின்றவர். காங்கிரசை அரியனை ஏற்று வதில் மிகுதியும் பாடுபட்டவர் கடைசி காலத்தில் சென்னை எழுத்தாளர் சங்கத்தினரால் கேடயம் வழங்கி பாராட்டப் பெற்றவர்.

இவர் நடத்திய 'காந்தி' இதழில்தான் வ.உ.சி. யின் 'சுய சரிதை'யும் வ.ரா. எழுதிய 'பாரதியார் சரித்திர'மும் (1934) வ.வே. சுப்பிரமணிய ஐயர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த 'திருக்குற'ளும் வெளிவந்தன.

எழுத்தாளர்களில் பலமுறை சிறை சென்ற பெருமை சொக்கலிங்கத்திற்கு உண்டு; சட்டமன்ற உறுப்பினரான சிறப்பும் ஏற்பட்டது. அமைச்சரவையை ஏற்றவும் தூற்றவும் கூடிய எழுத்து வல்லமையும் செல்வாக்கு மிருந்திருந்தன! இவரது எழுத்து நறுக்குத் தெறித்தாற் போன்றும், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று சொல்லக் கூடிய அளவிற்கும் இருக்கும்; வழவழா, சுற்றி வளைப்பு என்பது காணவே முடியாது. இவரது 'காந்தி' இதழில் (12-7:1933) இவர் எழுதிய 'திருட்டு ரஷ்புட்டீன்' என்ற கட்டுரையின் தொடக்கத்தைக் கவனிப்போம்:''தெய்வத்தின் பெயரால் உலகில் நடக்கும் அக்கிரமங்களைப் போல வேறு எதன் பெயராலும் நடக்க வில்லை!

கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையில் தரகனாக எப்போது புரோகிதன் ஏற்பட்டானோ, மோட்சமோ நரகமோ அவன் தயவால்தான் கிடைக்க வேண்டும் என்ற எண்ணம் எப்போது மனிதர் உள்ளத்தில் தோன்ற ஆரம்பித்ததோ, அப்போதே மனிதரின் சுயேச்சை உணர்ச்சியும் ஒழுக்கமும் கெட்டுப்போக ஆரம்பித்தன. மனிதரின் ஒழுக்கத்தை விருத்தி செய்வதற்காகத் தோன்றிய மதம், முடிவாக ஒழுக்கக்கேட்டிற்கு மூலமாய் நின்றது! காமவெறி கொண்ட அயோக்கியர்களுக்கும், ஒரு காசுக்கும் உதவாத மூடர்களுக்கும் சன்னியாசம் ஒரு சரியான புகலிடமாய் இருக்கிறது.''

''ஸ்ரீயைக் கண்டு கிலி!'' என்றும் தலையங்கம் தீட்டியவரும் சொக்கலிங்கம்தான். 'விடுதலை' நாளிதழ்க்கு ஈடு காணும் காங்கிரஸ் ஆட்சியில் கேட்கப்பட்டபோது, 'ஜாமீன் கெடுபிடி!' என்றும் அவரே எழுதியும் உள்ளார்!

**ஏ. என் சிவராமன் :** இவர் திருநெல்வேலி மாவட்ட அம்பாசமுத்திரத்திற்குப் பக்கத்திலுள்ள சிற்றூரைச் சேர்ந்தவர். பள்ளியிறுதிவரை படித்தவர். நாட்டு விடுதலை ஆர்வத்தால் கல்லூரிப் படிப்புக்குப் போகவில்லை! இரண்டு முறை நாட்டு விடுதலைக்காகச் சிறை சென்றுள்ளார். 10 ஆண்டுகள் பள்ளியாசிரியாகப் பணிபுரிந்தார். 1929இல் 'தமிழ் நாடு' இதழின் துணையாசிரியராகச் சேர்ந்தார். பின்னர் **தினமணி**யில் 1934இல் துணையாசிரியரானார். கடந்த அரை நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து இவ்விதழில் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். அரசியல் சமூக பொருளாதார பிரச்சனைகளை ஆரத்திர ஆய்ந்து தொடர்ந்து கட்டுரைகள் எழுதிவந்தார். இவர் இதழாசியராக இருந்தபோது 1956லும் 1978லும் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்து அந்நாட்டு அரசியல் பொருளாதார நிலைமைகள ஆய்ந்து வந்துள்ளார். இவர் 'மணிக்கொடி'த் தோற்றத்திற்கும், நவயுகப் பிரசுராலயம் ஏற்படுவதற்கும், அடிப்படையாக இருந்தவர். 'மாகாண சுயாட்சி', 'சமஸ்டி', 'இந்திய அரசியல் திட்டம்', இந்திய அரசியல் சட்டம்', 'ரூபாய் நாணய 'மதிப்பு' போன்ற நூல்களையும் எழுதியுள்ளார்.

நாட்டில் எச்சிக்கல் ஏற்பட்டாலும் அவை பற்றி நன்கு தெரிந்து கொண்டு, சிக்கல் தீர வழி காண்பது இவரது அரிய செயலாகும். ரூபாய் நாணயம் மதிப்பு குறைந்தபோதும், நில உச்ச வரம்பு சட்டம் வந்த போதும், சென்னைத் துறை முக விரிவுதிட்டம் கொண்டு வந்த போதும், அவைகளைப் பற்றி நன்கு அலசி ஆராய்ந்து நல்ல தலையங்கங்களையும் தொடர்கட்டுரைகளையும் இவர் எழுதியுள்ளார்.

இவர் மிகவும் அடக்கமானவர்; ஆரவார மற்றவர். போர்க் காலங்களில் வரும் செய்திகளை உன்னிப்பாகக் கவனித்து, எவ்வெவ்விடங்களில் யார் முன்னேறினார்கள் என்பதைத் துல்லியமாகக் குறித்துக்கொண்டு விளக்கி எழுது பவராகத் திகழ்ந்தவர். தாம் ஒரு பெரிய இதழின் ஆசிரியர் என்கிற நினைப்பைவிடத் தாம் ஒரு பள்ளிக்கூட ஆசிரியர் என்கிற நினைப்பே அவரிடம் மேலோங்கி நிற்குமாம்!

'கணக்கன்' 'குமாஸ்தா', 'பாமரன்', ஏ. என். எஸ் என்ற பல பெயர்களில் இவர் எழுதிவந்தார்.

இவருடைய வாழ்நாளின் பெரும் பகுதி ஆசிரியத் பணி யில்-அதிலும் சிறப்பாக இதழாசிரியர் பணியிலே கழிந்து விட்டது. திரு. சிவராமன் அவர்கள் தமிழ் இதழியல் துறை யில் ஆற்றியுள்ள சிறப்பான தொண்டைப் பாராட்டி, இவருக்குப் **பகவன் தாஸ் கோயங்கா விருது** வழங்கப்பட்டது. 1942 ஆகஸ்டுபோராட்டத்தை விரும்பாது காங்கிரசிலிருந்து விலகிய திரு. இராஜகோபாலாச்சாரியார் வரவை விரும்பாத தமிழ் நாட்டுக் காங்கிரஸ்காரர் வெகுண்டு எதிர்த்தபோது, காந்தியார் தமது 'அரிஜன்' இதழில் 'கிளிக் (Clique) என்னும் ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்தினார். இதனை எதிர்த்துக் கண்டனக் கணைகள் தொடுக்கப் பட்டன. அப்போது திரு. சிவராமன் மாடு என்னும் பொதுச் சொல்லுக்கும், பசுமாடு, எருமைமாடு என்னும் சிறப்புச் சொற்களுக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் காட்டி, அதைப் போன்றே 'கிளிக்' என்னும் சொல்லும் 'கோஷ்டி'

என்ற தவறான பொருளிலே கையாளப்பட்டுள்ளது என நயமாகக் காண்டித்து விளக்கம் கொடுத்தார்!

இந்திரா காந்தி, இந்திய தலைமையமைச்சராக இருந்த போது கொண்டுவரப்பட்ட கொடிய அடக்கு முறைச் சட்டத் தால்-அவசரகாலச் சட்டத்தால்-ஏற்படும் கெடுதிகளைப் பற்றி, மேல் நாட்டிலுள்ள சட்டங்களை ஒப்பிட்டுக்காட்டி, தாம் ஒரு 'தேசீய' வாதியாக இருந்தும், மக்களின் உரிமை கள் பறிபோவதையும் அவசர காலச் சட்டத்தால் ஏற்படும் பின் விளைவுகளையும் சுட்டிக் காட்டி, கண்டித்துப் பல கட்டுரைகளைத் தொடர்ந்து 'தினமணி'யில் எழுதி வந்தார் என்பதும் இங்கு நினைவுபடுத்தத் தக்கதாகும்! 'தினமணி', உலகச் செய்திகளோடு, உள்நாட்டுச் செய்திகளையும் உடனுக்குடன் கூடிய வரையில் நல்ல தமிழில் தந்துவந்த துடன் தமிழ் இதழ்த் துறையின் தரம் குறையாமல் பார்த்து துக் கொண்டதற்கும் திரு. சிவராமன் அவர்களே பொறுப் பாக இருந்தார்!

**சா. சதானந்தம்** சென்னையில் 'விவேகபோதினி' எனும் மாத இதழை நடத்திய திரு. சி. சாமிநாதையரின் மகனாவர். இவர் த. பிரகாசத்தின் 'சுயராச்சியா', மோ. க.காந்தியின் 'யங் இந்தியா' 'அசோசியேட்டட் பிரஸ்' ஆகியவற்றில் பணியாற்றிப் பயிற்சி பெற்றவர். வீட்டி லிருந்தே தொலைபேசியில் மடமடவென்று ஆங்கிலத்தில் பேசி, தலையங்கம் வெளிவரச் செய்யும் ஆற்றல் படைத் தவர். இவர் சென்னையில் டாக்டர் பி.வரதராஜுலு நாயுடு விடமிருந்த 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' எனும் ஆங்கில நாளிதழை 1932இல் விலைக்கு வாங்கினார். 1934இல் தினமணி 1938இல் பாரததேவிஎனும் தமிழ் நாளிதழ்களைத் துவங்கினார். பம்பாயில் 'ஃபிரிபிரஸ் ஜர்னல்' (ஆங்கிலம்) எனும் காலணாவிலையில் நாளிதழையும், 'ஃபிரிபிரஸ் புல்லட் டின்' எனும் மாலை நாளிதழையும், 'நவபாரத்' (மராத்திய) நாளிதழையும், கல்கத்தாவில் 'ஃபிரிஇந்தியா' எனும் ஆங்கில

நாளிதழையும்நிறுவினார். இவர் தொடங்கிவைத்தஃப்பிரிபிரஸ் ஜர்னல் 1983இல் பொன் விழாக் கொண்டாடியது. பம்பா யில் அதன் அலுவலகம்இருக்கும் சாலைக்கு ஃப்பிரிபிரஸ்ஜர்னல் சாலை என்று மராத்திய அரசு பெயர்சூட்டி பெருமைப் படுத்தியுள்ளது. திரு. சதானந்தம் 1927லே 'அசோசியேட் பிரஸ் ஆப் இந்தியா' என்ற செய்தி நிறுவனத்தையும், ஆங்கிலேயர்க்கு எதிராக நடத்தினார். அதன் வழியே விடு தலைப் போர்ச் செய்திகளை விறுவிறுப்பாக இந்திய இதழ் களுக்கும், வெளி நாட்டுச் செய்தி நிறுவனங்களுக்கும் வழங் கினார். இலண்டன், நியூயார்க் போன்ற நகரங்களில் செய்தி யாளர்களையும் நியமித்தார்! இப்படிப்பட்ட இவரது துணிச்ச லான நடவடிக்கைகள் பொதுவாக இந்திய இதழ் உலகிற் கும், சிறப்பாகத் தமிழ் இதழ் உலகிற்கும் பெருஞ்சிறப்பைத் தேடித்தந்தன.

**சுதந்திரச்சங்கு** 1930 இல் சனவரி 30ஆம்நாள் 'விடு தலை நாள்' அன்று சென்னையிலிருந்து வார மும்முறை இதழாக வெளிவந்தது. விலை காலணா. இதன் ஆசிரியர் களாக் இருந்தவர்கள் திருவாளர் சா. கணேசனும் சுப்பிர மணியமும் ஆவர். இவ்விதழை விடுதலைப் போரின் போர் முரசாக முழுப்பக்க அரசியல் கருத்துப் படங்களுடன் வெளி யிட்டனர். இவர்கள் பெயருக்கு முன் 'சங்கு' முன்னொட் டாகப் போடப்பட்டது. ஊர்தோறும் முகவர்களை (ஏஜண்டுகளை) நியமித்து கடைகள் தோறும் இதழ்களை வழங்கி விற்பனை செய்யப்பட்ட முதல்தமிழ் இதழ்இதுதான் என்று சிறப்பிக்கப்படுகிறது! இராஜபாளையத்தில் இதன் முகவராக இருந்தவர் திரு. குமாரசாமி இராஜா. இவர் பின்னாளில் சென்னை மாநில முதலமைச்சராக ஆனவர். ஆசிரியர்கள் இருவரும் சிறை சென்ற அரசியல் தியாகி களாவர்.

'ஆனந்தவிகட'னை திரு. எஸ். எஸ். வாசன் விலைக்கு வாங்கிய பின்னர் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) ஆசிரியப் பொறுப்பேற்றதும் தலையங்கங்களும் கருத்துப்

படங்களும் இந்திய அரசியல் உரிமைப் போருக்கு உதவி புரிவதற்காவே வெளியிடப்பட்டன. 1930 ஆம் ஆண்டின் அவசர அச்சுச் சட்டப்படி ரூ.1000 ஈடுகாணம் கட்டும்படி ஆங்கில அரசு 'ஆனந்த விகட'னுக்கு ஆணையிட்டது!

அப்போது ஆ. வி.யின் 1930 ஜூன் 7 இதழில் தெரிவிக்கப் பட்டிருந்ததாவது: ''நாம் ஜாமீன் கொடுப்பதற்காகப் பண விஷயத்தில் பின்வாங்கவில்லை. முதலாவதாக, அச்சுச் சட்டத்தை ஆட்சேபிக்கிறோம். இரண்டாவதாக, பணத்தைக் கட்டிவிட்டு 'ஆனந்த விகட'னில் சாரமற்ற விஷயங்களைப் பிரசுரிக்க விரும்பவில்லை. ஆகவே, நாம் ஜாமீன் கொடுக்க மறுத்து, அச்சாபீஸ் வேலையைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டதைச் சந்தா நண்பர்கள் பாராட்டுவார்கள் என நம்புகிறோம்!''

**ப. ஜீவானந்தம்** குமரிமாவட்ட பூதப்பாண்டியில் பிறந்தவர். இளமை முதல் விடுதலை ஆர்வமும், தன்மான உணர்வும் கொண்டவர். குப்புசாமியாக இருந்தவர் ஜீவானந்தமாகப் பெயர் மாறினார்! ஜோலார் பேட்டையில் திரு. பார்த்தசாரதி உதவியுடன், ஜீவானந்தம் 'சமதர்மம்' எனும் இதழுக்கு ஆசிரியரானார். இவர் 'குடியரசு', 'புரட்சி' 'சமதர்மம்', 'பகுத்தறிவு', 'அறிவு', 'புது உலகம்' ஆகிய இதழ்களில் தமது எண்ணங்களை வெளியிட்டுள்ளார். 'ஜனசக்தி' எனும் பொதுஉடைமைக் கட்சியின் சார்பில் வார இதழையும் (பின்னர் நாளேடாயிற்று,) 'தாமரை' எனும் மாத இதழையும் ஆசிரியப் பொறுப்பேற்று, பலகாலம் நடத்திவந்தார்.

காந்திய அடிப்படைக் கொள்கையின் ஒன்று மது விலக்கு இந்தக் குடியொழிப்புப் பிரசாரத்துக்காகத் திரு. இராஜ கோபாலாச்சாரி, 'விமோசனம்' (1929) எனும் இதழை சேலம் காந்தி ஆசிரமத்தின் சார்பில் நடத்தினார். இதற்கு திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) நிர்வாக ஆசிரியராக இருந்தார். கதரைப் பரப்புவதற்காகவேண்டி 'களிராட்டை'

(1935), குடிநூல் (1937) எனும் இரண்டு இதழ்களைத் தமிழ்நாடு சர்க்கா சங்கம் கோவை அய்யாமுத்துவை ஆசிரியராகக் கொண்டு திருப்பூரிலிருந்து நடத்தியது. 'இராட்டின மகிமை' எனும் இதழும் இதற்காக வேண்டி நடத்தப் பட்டது. காந்தியின் 'அரிஜன்' எனும் ஆங்கில இதழை மொழி பெயர்த்து 'தமிழ் அரிஜன்' (1946) இதழ்க்கு நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கப் பிள்ளையும் பொ. திரிகூட சுந்தரமும் ஆசிரியர்களாக இருந்தனர்.

1930இல் 'நவமணி' தீண்டாமை ஒழிப்புக்காகப் பள்ளத்தூரிலிருந்து வெளியாகியது. இதன் ஆசிரியர் இராம. இராமநாதன். சென்னையில் 1930 'ஜெயபாரதி' எனும் நாளிதழ்க்குத் 'திரு. எஸ். வெங்கட்டராமன் ஆசிரியராக இருந்து. அரையணா விலையில் வெளியிட்டார். விளம்பரம் வெளியிடாத ஒரே தமிழ் இதழ் 'ஜெயபாரதி' தான்! 'தேசபந்து (1920) எனும் வார இதழைத் தெ. பொ. கிருஷ்ணசாமி பாவலர் சென்னையில் நடத்தி வந்தார்! இதன் விலை காலணா இவர் 'இன்றையசமாசாரம்' 'பாரதி' எனும் இதழ்களையும் நடத்தியுள்ளார். 'பாலபாரதி' என்ற இதழ்க்குத் திரு.ச. து. சு. யோகியார் ஆசிரியராக இருந்து ஒரு பைசா விலையில் நடத்தினார். வ. வே. சு. ஐயரும் இதே பெயரில் 1922இல் ஒரு மாத இதழைச் சேர மாதேலியிவிருந்து நடத்தினார்.

தமிழ் இதழ்களை நடத்த பெண்மணிகளும் முன்னனின்று உள்ளார்கள்! இவர்களில் ஆங்கில பெண்மணிகள் முன்னணியில் இருந்தனர். அவ்விவரங்களை இப்போது அறிவோம். 'அமிர்தவசனி' (1865) எனும் இதழுக்கு இந்நாட்டுக் கிறிஸ்தவப் பெண்கள் ஆசிரியையாகி நடத்தினர். 'லோகோபகாரி' (1895), பண்டித விசாலாட்சியம்மாள், சென்னை. இவரே 'ஹிதகாரிணி' (1895), 'ஞான சந்திரிகா' (1912) என்னும் இதழ்களுக்கும் ஆசிரியையாக இருந்துள்ளார். 'பெண்கல்வி' I (1900) - 'ஆர். தாயாரம்மாள்' சென்னை; 'தமிழ்மாது' (1906-) கோ. சொப்பனசுந்தரி சென்னை. 'பெண்கல்வி' II

(1911)-ஆர். ஜெயம்மாள், சென்னை; 'பாலியசஞ்சாரி' (1912)-திருமதி.டி.ஆலன்; 'மாதக்கடிதம்' (1913)- திருமதி வி. எம். வால்போர்டு; மாணவ ஆசிரிய குழந்தைகள் பத்திரிகை (1911)-ஏ.எம். நாயிஸ்; ஞானபாநு (1912)-மீனாட்சியம்மாள், (சுப்பிரமணிய சிவாவின் மனைவி) 'பூங்கொத்து' (1917) - ஜே. எல். மிராண்டா, திருச்சி; 'ஜெகன்மோகினி'(1922)- வை. மு. கோதை நாயகியம்மாள், சென்னை; 'சிந்தாமணி' (1924)- வி. பாலம்மாள், கோலாலம்பூர்; 'தமிழ்மகள்' (1926)- எம். மங்களம்மாள், சென்னை; 'கிரகமணி' (1936)- திருமதி வி. கே பிளாக், சென்னை; 'மறுமணம்' (1936)- மு. மரகதவல்லி, காரைக்குடி; 'கதாநிதி' (1938)-ஜே. பி. சம்பந்தம்மாள், சேலம்; த'மிழரசி' (1936) -ச. கமலாவதி, கோலாலம்பூர்; 'வெண்மதி' (1943) டி. எஸ். இராஜலட்சுமியம்மாள், சென்னை; 'மங்கை'(1947)-கி.சாவித்திரியம்மாள், 'மங்கை' (1947) - எஸ். விசாலாட்சியம்மாள், சக்திவெளியீடு, சென்னை, 'புதுமைப்பெண்' (1947)- 'குகப்பிரியை' சென்னை; 'சென்னை ஜூனியர்' (1947)- திருமதி திரில்பி கில்பர்டு; 'குங்குமம்' (1948)- எஸ். விசாலாட்கி, சென்னை; 'முஸ்லீம்முரசு' (1948)- என். பி. ரமீசா, சென்னை; 'ரவி' (1952)-எஸ். சாந்தா லட்சுமி, சென்னை; 'யதார்த்தவசனீ' (1954)-ஹேமாவதி 'ஆசிரியர்குரல்' (1966)-சந்திரா பக்தவச்சலன், சென்னை; 'கோல்பத்', கும்பகோணம்; 'புதிய தலைமுறை' (1967)- எ. புவனேசுவரி; 'என்னஉலகம்' - (1971)- கோகிலா, சென்னை; 'தேன்துளி' (1972)- எஸ் லட்சுமி சென்னை; 'பனித்துளிகள்' - (1974)- சி. பா. சரசு சென்னை; 'நர்கிஸ்' - எம். அனிபா பாத்திமா, தூத்துக்குடி; 'மலர்மதி'-திருமதி ஹலிமாஜவஹர், நாகர்கோயில்; 'மனோரஞ்சனி' - எஸ். சாரநாயகிஅம்மாள் (எம். எஸ். தம்பு நாயுடு மனைவி); 'மங்கைமலர்'- மஞ்சு ரமேஷ், சென்னை-34; 'மாணவர்உலகம்' (1965)- ஜானகி வெங்கடேசன், கோலாலம்பூர்.

**பாரதி** (*1929*) திரு. இரா. நாராயணசாமியை ஆசிரியராகக் கொண்டு, உத்தம பாளையத்திலிருந்து வெளிவந்த மாத இதழ். இவர் விடுதலை விரும்பியாக இருந்தவர்; சிறை சென்றவர். 1923 இல் 'தமிழர் போதினி' என்று கொழும்புவில் வெளிவந்த இதழில், 'காந்தியைப் போற்றி கதருடை அணிவீர் என்ற முழக்க மிடப்பட்டது! 1930-இல் 'இந்தியா ஒளி' எனும் இதழ் கோ. இராமசாமியை ஆசிரியராகக் கொண்டு தென்னாப்பிரிக்கா டர்பனிலிருந்து வெளி வந்தது.

திரு. **நாரணதுரைக்கண்ணன்** சென்னை மயிலாப்பூரில் 1906 இல் பிறந்தவர். மறைமலையடிகளாரிடம் தமிழ் கற்றவர். பிழை திருத்துவராக 1927 இல் முதலில் வேலை பார்த்தார். இவர் எழுதிய முதல் கட்டுரை 'சுதேச மித்திர'னில் வெளி வந்தது. 1928 இல் 'லோகோபகாரி'யிலும் 1930 இல் 'திராவிட'னிலும் துணையாசிரியராகவும், 'தேச பந்து'வில் பொறுப்பாசிரியராகவும், 1934 முதல் 40 ஆண்டுகளாகத் 'ஆனந்த போதினி', 'பிரசண்ட விகடன்' ஆகிய இதழ்களின் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். இவர் எழுதியுள்ள 139 நூல்களுள்- 'உயிரோவியம்', 'யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்', 'நடுத்தெரு நாராயணன்' போன்றவை குறிப்பிடத் தக்கனவாகும். 1980 இல் தமிழ் நாடு அரசு இவருக்குத் 'திரு. வி. க. விருது' வழங்கிச் சிறப்புச் செய்துள்ளது! இவர் எழுத்தாளர் உலகில் மிகவும் செல்வாக்குப் பெற்ற ஒருவராகத் திகழ்கிறார்.

ம. பொ. **சிவஞானம்** அச்சுக் கோக்கும் தொழிலாளியாகவும் நெசவுத் தொழிலாளியாகவும் தொடக்கத்தில் பணியாற்றினார். 'விநோதனி', 'தமிழ்நாடு' ஆகிய இதழ்களில் அச்சுக் கோப்பவராகத் தொழில் பார்த்தவர். அதன் காரணமாகக் கூட்டிப் படித்துத் தமது தமிழ் அறிவை வளர்த்துக் கொண்டார். இவர் பலமுறை சிறை சென்று, அங்குக் கிடைத்த ஓய்வு நேரங்களில் மேலும் தமது இலக்கிய ஆர்வத்தைப் பெருக்கிக் கொண்டார்.

இவர் 1936 இல் 'கிராமணி குலம்' எனும் சமூக இதழ்க்குப் பொறுப்பாசிரியராக இருந்தார். சென்னையில் நண்பர் ஊ. கோவிந்தனின் உதவியால் 'தமிழ் முரசு' என்னும் மாத இதழுக்கு 1946இல் ஆசிரியரானார். பின்னர் இதனை மாத இருமுறையாகவும் வார இதழாகவும் மாற்றி நடத்தினார். 1954இல் 'தமிழன் குரல்' எனும் மாத இதழுக்கும் 1950இல் 'செங்கோல்' எனும் வார இதழ்க்கும் ஆசிரியராக இருந்து நடத்தி வருகிறார். பேச்சாளரான இவருக்கு மட மட என்று சொல்ல வரும். பிறர் அதனை எழுதவும் அதன் பின்னர்தான் அவை கட்டுரைகளாக நூல்களாக வெளி வந்துள்ளன. தமிழரசுக் கழகம் என்ற ஓர் அமைப்பைக் கண்டு அதன் தலைவராகத் தொடர்ந்து இவரே இருந்து வருகிறார். 'பாமர'னாக இருந்து தமிழக அரசின் மேல் சட்ட மன்றத் தலைவராக உயர்ந்திருப்பதற்கு, இவரது பேச்சும், சிறை சென்று சிப்பியேந்திய தன்மையும், படிப்படியான இவரது வளர்ச்சியும் காரணங்களாகும்.

முன்பு. ம. பொ. சி. திராவிட எதிர்ப்பு இயக்க மாநாடு நடத்தியவர். பின்பு இந்தி எதிர்ப்பு மாநாட்டில் பங்கேற்றவர்! காங்கிரசிலிருந்து வெளியேற்றப்பட்டதற்கு பின்பு, தமிழரசு இயக்கத்தையும் கட்டிக் காத்து, திராவிட முன்னேற்றக் கழகத்துடன் நட்புகொண்டு தமிழகச் சட்டமன்ற உறுப்பினராகவும், மேலவைத் தலைவராகவும், அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உறவால் மேல் மட்டக்குழுத் தலைவராகவும் உயர்ந்து மிளிர்கிறார். உலகம் சுற்றிவந்துள்ளார். காங்கிரசில் இருந்த போதே வ. உ. சியின் வரலாற்றை எழுதியும் வீரபாண்டிய கட்டபொம்மனை அறிமுகப் படுத்தியும் உள்ளார். தமது விடா முயற்சியால், கீழேயிருந்து மேலுக்கு வந்துள்ள பெருமகனார் ம. பொ. சி. ஆவர்.

'திருலோக சீதாராமன்', பாரதி அன்பர்களில் ஒருவர். அவரது பாடல்களைப் பெரும்பாலும் மனப் பாடம் செய்து உணர்ச்சியுடனும் பாவத்துடனும் இசையுடனும் பாடி

வந்தவர். இவர் 30 ஆண்டுகளுக்கு மேலாகக் காங்கிரசைப் பரப்ப வேண்டி- துறையூர் 'இந்திய வாலிபன்', விழுப்புரம் 'பால பாரதம்', 'ஆர்க்காடு தூதன்' எனப் பல ஊர்களிலிருந்து பல இதழ்களைத் தொடங்கி ரூ. 50,000 கடனாளி ஆனவர்! இவர் துறையூர் 'கிராம ஊழிய'னுக்கும், திருச்சி 'சிவாஜி' இதழ்க்கும் ஆசிரியராக இருந்துள்ளார். பாரதியின் மனைவி செல்லமாளுக்கும் கடைசி காலத்தில் பெரிதும் உற்ற உதவியாக இருந்தவர்.

## இயக்க இதழ்கள்

இந்தியத் துணைக்கண்டம் முற்காலத்தில் 56 நாடுகளாகப் பிரிக்கப்பட்டு, பல அரசர்களால் ஆளப்பட்டு வந்துள்ளது; பல மொழி பேசுவோரைக் கொண்டுள்ளது. இங்குள்ளவர்கள் சாதியால் பிரிக்கப்பட்டும், மதத்தால் பிளவு பட்டும் கிடந்ததால் அந்நிய நாட்டினரால் இந்தியா பிடிக்கப்பட்டு அடிமைக் கொள்ளப்பட்டது! நாம் ஏன் அடிமைப்பட்டோம்? நம் நாட்டிற்கு விடுதலை வேண்டும்! நாம் அடிமைத்தளையிலிருந்து விடுபட்டு, பிறநாட்டினரைப் போல் எல்லா வகையிலும் உரிமையோடு வாழவேண்டும். நாட்டு மக்கள் ஒற்றுமையோடு திகழவேண்டும் என்ற தேசீய யார்வமும் மொழிப் பற்றும் அரசியல் விழிப்புணர்ச்சியும் கொள்கை அடிப்படியாக இருந்த முன்னோடிகளே, தத்தம் தாய் மொழிகளிலும் ஆட்சி மொழியாக இருந்த ஆங்கிலத்திலும் சில இதழ்களைத் தொடங்கி நடத்தினர். முதலில் இவர்களால் சமுக, சமய இதழ்களே தொடங்கப்பட்டன. பின்னரே அரசியல் இதழ்கள் தோன்றலாயின. இனி நாட்டன்பர்களால் தொடங்கப்பட்ட தேசீய இயக்கத்தினால் ஏற்பட்ட இதழ்களைப்பற்றிய விவரத்தை அறிவோம்.

1 தேசீய இயக்க இதழ்கள் : முற்காலத்தில் இந்தியர்களால் நடத்தப்பட்ட இதழ்கள், அரசியலில் அதிதீவிரம் காட்டாமல் பொதுப்பணி, இலக்கியப் பணிகளை ஆற்றி வந்தன என்றாலும், 1878 இல் ஆங்கில அரசு கொண்டுவந்த

நாட்டுமொழி இதழ்கள் சட்டத் (Vernacular Act of 1878) தைக் கண்டித்து 'சுதேசாபிமானி' (1-4-1878) இதழில் ''நாட்டின் காவலனாக விளங்கும் இந்நாள்வரை இந்தியர் களுக்கு அளிக்கப்பட்டு வந்த பத்திரிகை சுதந்திரம் இப்பொழுது பறிக்கப்பட்டுவிட்டது! நாட்டு மொழி இதழ் களை அதிக அளவில் படித்து, மக்கள் அரசுக்கு எதிரான கிளர்ச்சிகளில் ஈடு படக்கூடும் என்று காரணம் கூறி, பத்திரிகைச் சுதந்திரத்தைப் பறிக்கும் இந்தச் சட்டத்தை அரசாங்கம் கொண்டு வந்து இருக்கிறது. இச்சட்டம் நாட்டு மொழிப் பத்திரிகைக்குச் சாவு மணியாக அமையும்!'' என்று எழுதியுள்ளது.

இந்தியர்கள் ஆயுதங்கள் வைத்துக் கொள்ள ஆங்கில அரசாங்கம் கட்டுப்பாடு விதித்து 1878 இல் ஆயுதச் சட்டம் (Arms Act) கொண்டுவரப்பட்டதைக் கண்டித்து 'விவேக வர்த்தினி' 1881 பிப்ரவரி இதழில் எழுதப்பட்டுள்ளது. 'வெற்றிக்கொடியோன்' (29-9-1976) எனும் இதழில், ''கல்கத்தா உயர் நீதிமன்றத்தில் வங்காளிகள் நீதிபதிகளாக நியக்கமிப்படும் பொழுது, சென்னை உயர்நீதி மன்றத்தில் தமிழர்களை ஏன் நீதிபதிகளாக நியமிக்கக்கூடாது?'' என்று கேள்விக்கணைத் தொடுக்கப்பட்டுள்ளதைக் கண்டு வியப் படைகிறோம். ''ஆங்கிலேயர்களுக்கும் ஒப்பத் தமிழருக்கும் அரசுப் பதவிகள் அளிக்கவேண்டும்'' என்று 'இந்து பூஷணி' (25-12-1886) என்னும் வைதிக இதழில் வற்புறுத்தப் பட்டுள்ளது. கோடை காலத்தில் சென்னை மாநில அரசின் தலைநகரை ஊட்டிக்கு மாற்றுவதை எதிர்த்து 'தத்துவ விவேகினி' (1879) எனும் நாகர்கோயிலிருந்து வெளியான இதழ் எழுதியுள்ளது. இவையெல்லாம் திரு. அ.மா.சாமி குறிப்பிட்டிருப்பதைப் போல, ''பின்னால் வெடிக்க இருந்த எரிமலையின் முன்னோடியான சிறு பொறிகள்'' ஆகும். 'இந்து சாதனம்' (1889) யாழ்ப்பாண சைவ பரிபாலன சபையின் சார்பில் வெளியிடப்பட்ட வார இருமுறை இதழாகும். இது சைவ சமயக் கல்வியின் பொருட்டு

உழைத்தது. என்றாலும், தமிழ் மக்களின் அரசியல் விடுதலையை நாடியும் பாடுபட்டு வந்துள்ளது. இன்றுவரை நடந்து வரும் இவ்விதழ் தமிழ் மக்களிடையே விழிப் புண்டாக்கித் தனிச்சிறப்புப் பெற்று விளங்கிவருகிறது. 'சுதேசமித்திரன்' (1882) ஜி. சுப்பிரமணிஐயரால், தமிழ் நாட்டில் அரசியல் விழிப்புணர்ச்சியை கிளர்ந்தெழுச் செய்ய தோற்றுவிக்கப்பட்ட இதழாகும். இது நிதானம் போக் குடையதாக இருந்தாலும், ஆங்கில ஆட்சியால் ஏற்பட்ட கெடுதல்களை அவ்வப்போது கண்டித்து எழுதிவந்த தேசீய நாள் இதழாகத் திகழ்ந்தது. 'லோகோபகாரி' (1895) யும் திரு. வி. நடராஜ ஐயரின் மேற்பார்வையிலும் அரசியல், இலக்கிய மேம்பாட்டிற்காகப் பாடுபட்டு வந்தது. வார இதழாக மாறி, 2500 கையொப்பக்காரர்களைப் பெற்று கவர்ச்சியான பல திட்டங்களால் பொதுமக்களைக் கவர்ந்து இழுத்தது. இதனைக் கோ. வடிவேல் செட்டியாரும், பரலி. சு. நெல்லையப்பரும், சாமி சிதம்பரனாரும் ஆசிரியப் பொறுப்பேற்றுத் தரக் குறைவு வராமல் உயர்ந்த நிலையிலேயே பல காலம் வரை தொடர்ந்து நடத்திவந் தனர். 'சுதேச பரிபாலினி' (1904) திரு. மு. இ. முதலியா ரால் இரங்கூனில் வெளியிடப்பட்ட நாளிதழ். பர்மிய நாட்டு நன்மையையே பெரிதாகக்கருதி உழைத்துவந்தது. 'யதார்த்தவசனி' (1900) திரு. டி. வி. கோவிந்த சாமிப் பிள்ளையை ஆசிரியராகக்கொண்டு தஞ்சாவூரிலிருந்து வெளியான வார இதழ். காலணா விலையில், உயரிய நடையில் எழுதப்பட்டாலும் மிகவிறுவிறுப்புடன் படிக்கக் கூடியதாக இருந்தது. இதனாசிரியர் அஞ்சா நெஞ்சராக, உலகியல் அறிவு மிக்கவராக, நகைச்சுவை கலந்து எழுதக் கூடியவராக இருந்தார். வார இதழில் முற்காலத்தில் புகழ் பெற்று விளங்கிய இதழாக 'யதார்த்தவசனி' இருந்தது. 'ஜனானுகூலன்' (1900) தஞ்சாவூரில் பி. வி. கிருஷ்ண தாசை ஆசிரியாகக்கொண்டு காலணா விலையில் ஒரு வாரத் தின் முக்கிய செய்திகள் அடங்கியதோடு, தஞ்சாவூர் மாவட்டத்தில் அதிகாரிகள் செய்யும் கொடுமைகளையும்

அஞ்சாது எடுத்துரைத்து வந்தது. 1919 இல் 5000 படிகள் விற்பனை எட்டியது! இது நாற்பதாண்டுகாலம் வரை நடைபெற்றுள்ளது. கவிஞர் சுப்பிரமணிய பாரதியார், 'இந்தியா' (1907) என்ற வார இதழ்க்கு ஆசிரியப் பொறுப்பேற்று காரசாரமாக எழுதினார். அரசியல் கருத்துப் (கார்ட்டுன்) படங்களை அதிகமாக வெளியிட்டார். நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் மிகுந்தவராக இருந்தார்.

''வந்தேமாதரம் என்போம்-எங்கள் மாநிலத் தாயை வணங்குவது என்போம்'' என்று பாட்டிலே தமிழ் விளக்கம் செய்துள்ளார். 'தமிழனைவிட மற்றொரு சாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்குச் சம்மதமில்லை' என்று எழுதியுள்ளார். ''நமக்குத்தொழில் கவிதை நாட்டுக்கு உழைத்தல், இமைப் பொழுதும் சோராது இருத்தல்'' என்பது பாரதியாரின் குறிக்கோளாக இருந்தது! தமது எழுதுகோலையும் எழுத்தையும் 'தெய்வமாக' மதித்தவர் பாரதியார். பாரதியாரின் நூல்களை முதன் முதலில் வெளியிட்டவரும், அவரது 'அருமைத்தம்பி'யாகக் கருதப் பட்டவருமான திரு. பரலி சு. நெல்லையப்பர் நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர். சிறந்த நாட்டன்பர். புதுவையில் பாரதியாரின் 'சூரியோதயம்' எனும் இதழின் துணையாசிரியராகவும், சென்னையில் 'பாரதி', 'நாரதர்' திராவிடப்பத்திரிகை' ஆகிய இதழ்களின் ஆசிரியராகவும் இருந்தவர். வ. உ. சி. தம் சுயசரிதைப் பாடல்களை 'லோகோபகாரி'யில்தான் தொடர்ந்து வெளியிட்டார். திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியின் 'சோக்ரதர்', 'ஆத்ம சோதனை' போன்ற நூல்களையும் வெளியிட்டவர் திருவாசகத்தை மலிவுப் பதிப்பாக இரண்டணா விலையில் வெளியிட்டுப் பரப்பியவர். இவர் 60 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் இதழ்கள்' பற்றி 'தினமணி'யிம் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கம் பரலி. சு. நெல்லையப்பருக்கு நிதியுதவிதந்து போற்றியது! ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி)யை முதலில் 'நவசக்தி'யிலும், பின்பு

'ஆனந்தவிகடனி'லும் பரிந்துரைத்துச் சேர்த்து விட்டவர் நெல்லையப்பரே ஆவர்.

பாரதியாரைவிடச் சுப்பிரமணியசிவா நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் தமது எழுத்தாலும் பேச் சாலும் ஊர்தோறும் நாடு நகரந்தோறும் அலைந்து திரிந்து பரப்பியராவர். பலமுறை அஞ்சாது சிறைசென்று கொடுமை களைக் கண்டு அஞ்சாது பணியாற்றியவர். மாத இதழான 'ஞானபாநு' (1915)வையும் 'இந்திய தேசாந்திரி' 'பிரபஞ்ச மித்திரன்' முதலிய வார இதழ்களையும் நடத்தியவர். அரசியலில் தீவிர போக்குக் காட்டியவர். சமூகச் சீர்திருத்தத் தில் வைதீகப் போக்கைக் கடைபிடித்தவர். என்றாலும் தமிழ் மொழியை அழித்து விட்டால் தமிழர்களின் சிறப்பும் சீரும் அழிந்துவிடும் என்றும், "உங்கள் நா தமிழே பேசுக; உங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக; உங்கள் இதயம் தமிழையே நாடுக!" என்று அழுத்தமாகக் குரல் கொடுத் தவர் சிவாதான். 'அறந்தான் செய்ய அன்புடன் முயன்று, பத்திரிகை புத்தகம் பலவழியாக, உரிமைவேண்டி உரிமைவேண்டி வரவும்" என்கை வலிக்குது ஐயோ! மனமும் உடைந்தது, மார்பும் நோகுது, என்று சிவா அரற்றியுள்ளார்!

ஒட்டப்பிடாரத்தில் பிறந்த வ. உ. சிதம்பரனார் சிறந்த தமிழ் அறிஞர்; வழக்கறிஞர்; கப்பலோட்டிய தமிழர் சிறைசென்று செக்கிழுத்தசெம்மல் இவர் 1908இல் 'சுயராச் சியம்' என்ற இதழை வெளியிட திட்டமிட்டார். சுயராச்சியக் கொடி பறக்கும் வீடுகளுக்கு மட்டுமே அவ்விதழ் விற்கப்படும் என்று அறிவித்தார். ஆனால், அவ்விதழ் வெளிவருமுன்பே, சதி வழக்கில் ஈடுபட்டவர் என்று குற்றம் சாட்டப்பட்டுக் கைதாகி, தண்டனைக்கு உள்ளானார். இவர் இந்தியா வில் உள்ள 27 முதன்மையான மொழிகளில் இதழ்கள் நடத்த விரிவான திட்டமிட்டிருந்தாராம்! ஆனால் அத்திட் டம் நிறைவேறவில்லை!

தென்னாப்பிரிக்காவிலுள்ள டர்பனில் வாழ்ந்த தில்லை யாடி வள்ளியம்மையின் சிற்றப்பாவான தில்லையாடி

வேதியப்பன், அங்கு 'ஞானபாநு' எனும் இதழை நடத்தினார். இவ்விதழுக்கு வ. உ. சி. ஏராளமாக எழுதிவந்ததோடு, சில நேரங்களில் தலையங்கமும் எழுதி அனுப்பியுள்ளார் என்று அவரது மகன் திரு. வ. உ. சி. சுப்பிரமணியம், அ. மா. சாமியிடம் கூறியுள்ளார். கொழும்புவிருந்து வெளிவரும் 'வீரகேசரி' இதழில், 'திலகர் மகரிஷி' என்ற தொடர் கட்டுரையை வ. உ. சி. 2½ஆண்டுகளாக எழுதியுள்ளாராம்.

தமிழாசிரியராகப் பணியாற்றி வந்த திரு. வி. கலியாணசுந்தரனார் விடுதலை வேட்கைக் காரணமாகத் 'தேசபக்தன்' (1917) எனும் நாளிதழின் ஆசிரியரானார். இவரது 'தேசபக்தன்' உரிமைப்போரின் தானைத் தலைவனாக இருந்தது; நல்ல தமிழ் நடையில் எழுதப்பட்டு சிறந்து விளங்கியது. ''தேசபக்தன்' சுதந்திரத்தை விரும்புகிறான். சுய ஆட்சி கேட்கிறான்'' என்று 1-3-1918 இதழில் திரு. வி. க எழுதியுள்ளார். 'தேசபக்தன்' தொடங்கிய பொழுது ரூ. 1000 ஈடுகாணம் செலுத்தப்பட்டது. அது பறிமுதல் செய்யப்பட்டு மீண்டும் ரூ. 5ஆயிரம் கட்டும்படி அரசு கட்டளையிட்டது. வாசகர்களிடம் நிதி திரட்டி அந்தப் பணத்தைக் கட்டினார்கள் என்று அவரே தெரிவித்துள்ளார்.

முன்னாளில் செய்திகளுக்குத் தமிழிலும் ஆங்கிலத்திலும் தலைப்புகள் கொடுப்பது வழக்கம். அதை மாற்றி, தமிழில் மட்டும் தலைப்புத் தந்தது 'தேசபக்தன்' 'அரசியல் பற்றி ஆங்கிலக் கலப்பு இல்லாமல் அருந்தமிழிலும் எழுத முடியும் என்பதையும் திரு. வி. க. மெய்ப்படுத்தினார். அன்னியமாகிக் கிடந்த தமிழ் இதழ் உலகை தமிழ் மயம் ஆக்கினவரும் திரு. வி. க. வே. அவர் அரசியலுக்கான- தலைவர், பாராளுமன்றம், உரிமைப்போர், ஒத்துழையாமை போன்ற எண்ணற்ற சொற்களை இதழ் வாயிலாக உலாவ விட்டார். 'தேச பக்த'னில் இருந்து கொள்கை பிடிப்புக் காரணமாகத் திரு. வி. க. விலகினார். பின்னர் அதற்கு

வ. வே. சுப்பிரமணிய ஐயர் ஆசிரியராக அமர்த்தப்பட்டார். அதில் எழுதிய ஒரு தலையங்கத்திற்காக 1927இல் அவர் 9 மாத சிறை தண்டனை பெற்றார்.

பின்னர் இதே பெயரில் 1931இல் என். தண்டபாணி பிள்ளை காலாணா இதழ் ஒன்றை நடத்தினார். இலங்கையிலும், மலேசியாவிலும் இதே பெயரில் இதழ் தொடங்கப்பட்டுள்ளது.

திரு.வி.க. 1920இல் 'நவசக்தி' என்னும் மாத இதழைத் தொடங்கினார். நாளடைவில் வார இதழாக மாறியது. அதன் வாயிலாக அவர் நாட்டிற்கும் மொழிக்கும் இலக்கியத் திற்கும் 20 ஆண்டுகாலம் தொடர்ந்து தொண்டாற்றி வந்துள்ளார். இவரிடம் இதழ்த்துறையில் உடன் பயின்ற வர் வெ. சாமிநாத சர்மாவும் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி)யும் ஆவர். திரு. சர்மா இரங்கூன் சென்று 'ஜோதி' எனும் மாத இதழைச் சிறப்பாகநடத்தி வந்தார். 60க்கு மேற் பட்ட அரசியல் நூல்களை எழுதி வெளியிட்டார். குணத்தில் திரு. வி. க. வின் தம்பியாக விளங்கினார். இவரது நடை வட சொற்கள் மிகுந்து காணப்படுவதாகும்.

**அயோத்திய தாஸ் பண்டிதர் (1845 - 1914):** இவர் சென்னை தேனாம்பேட்டையில் பிறந்தவர். தமிழறிஞர் வி. அயோத்திதாசரிடம் தமிழ்க் கல்வி கற்றவர். சைவம், வைணவம், அத்வைதம் முதலிய தத்துவங்களை நன்கு அறிந்த பின்னர் 1900 இல் புத்தக் கொள்கையை ஏற்றவர். தர்க்க இயலை 1886 முதல் தமிழ்நாடு முழுவது பரப்பியவர். கர்னல் ஆல்காட், பெசண்டு உதவுடன் சென்னையில் பல பள்ளிக் கூடங்களை நிறுவினவர். தென்னிந்தியாவில் புத்த சாக்கிய சங்கத்தை 1902 இல் ஏற்படுத்தியவர் 1907இல் **தமிழன்** என்ற இதழைத் தொடங்கி நடத்தினார். அது தமிழகம், இலங்கை, பர்மா, சிங்கப்பூர், தென்னாப்பிரிக்கா முதலிய நாடுகளில் விரும்பி வாங்கிப் படிக்கப் பட்டு வந்தது! ''புத்தரின் ஆதிவேதம்'' என்ற நூலை இவர் எழுதி வெளியிட்டார். 1914இல் பௌத்தராக மறைந்தார்.

**இரட்டமலை சீனிவாசன் :** (1860-1945) இவர் செங்கற் பட்டிலுள்ள இரட்டமலையில் பிறந்தவர். சாதிக் கொடுமை யின் காரணமாகத் தமது படிப்பைக் கல்லூரிக்குப் போகாமல் இடையில் நிறுத்த வேண்டியதாயிற்று. நீலகிரியில் வர்த்தகத் துறையில் கணக்கராக ஊழியம் தொடங்கினார். சென்னை யில் 1882-85வரை நூல்கள், கல்வெட்டுகள் ஆகியவற்றி லிருந்து தென்னிந்திய மக்களின் வாழ்க்கையைப் பற்றியும் அவர்தம் நிலைமைகளைப் பற்றியும் துருவி ஆராய்ந்து அறிந்து கொண்டார். சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டும் நசுக்குண்டும் தவித்த ஏழை எளிய மக்களின் மேன்மைக்காகப் பாடுபட முனைந்தார். 1891இல் ஆதி திராவிட மகா ஜன சபை என்ற அமைப்பை ஏற்படுத்தினார். 1892 இல் **பறையன்** என்ற இதழை தொடங்கி நடத்தினார். சென்னை இராயப்பேட்டை வெஸ்லியன் பள்ளியில் 1893இல் தாழ்த் தப்பட்ட ஒடுக்கப்பட்ட மலைவாழ் மக்களின் முதல் மாநாட்டை, இந்தியாவிலேயே முதன் முறையாக நடத் தினார். அரசாங்க அலுவலராகச் சேர்ந்து, தென்னாப் பிரிக்கா சென்றார். அங்குள்ள தென்னிந்திய மக்களின் நலன்

களுக்காகப் பாடுபட்டார். 1921இல் இந்தியா திரும்பி, சமுதாயத் தொண்டில் தீவிரமாகப் பாடுபட்டார். 1922இல் சென்னை சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். லண்டனில் நடைபெற்ற இரண்டு வட்ட மேஜை மாநாடுகளுக்கும் இவர் தாழ்த்தப்பட்ட ஒடுக்கப்பட்ட மலை வாழ் மக்களின் பிரதிநிதியாகச் சென்றார். காந்தியாருக்கும் டாக்டர் அம்பேத்காருக்கும் 1932இல் ஏற்பட்ட பூனா ஒப்பந்தத்திற்குத் திரு. சீனிவாசன் பெரிதும் துணையாக இருந்தார். தென்னாப்பிரிக்காவில் ஊழியம் புரிந்ததற்காகக் கிடைத்த சிறிய ஊதிய தொகையை வைத்துக் கொண்டு தமது இறுதிக் காலத்தைக் கழித்தார். 1945இல் இறந்து போனார். (OUR LEADERS - short life sketches, siddharda publication, Madras)

**பா. தாவுத்ஷா :** இவர் தஞ்சை மாவட்டத்தில் நாச்சியார் கோயில் என்னும் ஊரில் பிறந்தவர். கும்பகோணத்திலும், சென்னை மாகாணக் கல்லூரியிலும் படித்து பி. ஏ. பட்டம் பெற்றவர். நல்ல தமிழில் பேசவும் எழுதவும் வல்லவராகத் திகழ்ந்தவர். இவரைக் கம்பராமாயண சாயபு என்றேபுகழ்ந்து கூறுவர். இவர் முதலில் தாம் பிறந்த ஊரிலிருந்து 1921இல் 'தத்துவ இஸ்லாம்' என்றஇஸ்லாமியசமய இதழைத் தமிழில் தொடங்கினார். அடுத்த ஆண்டில்அது **தாருல்இஸ்லாம்** எனப் பெயர் மாற்றப்பட்டு, பல ஆண்டுகாலம் மாத இதழாக, வார இதழாக, நாளிதழாக உருப்பெற்று வளர்ச்சியுற்றது. இவர் பல புது எழுத்தாளர்களுக்கு ஊக்கமளித்து வந்தார். ஷாஜஹான் புக்டிப்போ என்ற புத்தகச் சாலையையும் நடத்தி வந்தார. இவரது மகளான திருமதி ரமீசாதான் 'முஸ்லிம்முரசு' என்னும் மாத இதழின் ஆசிரியையாக இருந்து கடந்து 30 ஆண்டுகாலத்திற்கு மேல் தொடர்ந்து நடத்தி வந்துள்ளார்.

**சி. பா. ஆதித்தனார்** 1905இல் திருநெல்வேலி மாவட்டத்தின் தென்கிழக்குக் கோடிலுள்ள காயாமொழி எனும் ஊரில் பிறந்தவர். இவர் நாடார் சமூகத்தில் முதலில்

எம். ஏ. பட்டம் பெற்றவராவர். 1933 இல் பாரிஸ்டர் பட்டத்தைப் பெற்று வழக்கறிஞராகச் சிங்கப்பூரில் சில காலம் தொழில் புரிந்து பொருளீட்டினார்.

இவர் இலண்டனில் படித்துக்கொண்டிருந்தபோதே, சென்னை 'சுதேசமித்திரன் இதழ்க்குச் செய்திக் கடிதங்களை அனுப்பி வந்தார்! சில ஆப்பிரிக்க நாட்டு இதழ்களுக்கும் செய்தி நிருபராக இருந்துள்ளார்.

1942 இல் சிங்கப்பூரிலிருந்து சென்னை திரும்பியதும், தமிழகத்தின் எதிர்காலம் பற்றிச் சிந்தித்து, 'தமிழ் இராச் சியக் கட்சி'யைத் தொடங்கினார். பின்னர் அதை 'நாம் தமிழர் இயக்க'மாக மாற்றினார். 'தமிழ்க்கொடி' எனும் இதழையும் நடத்தினார்.

மாத்தூர் உழவர் போராட்டம், பட எரிப்புப்போர், இந்தி எதிர்ப்புப்போர் முதலியவற்றில் ஆதித்தனார் ஈடு பட்டுச் சிறை சென்றுள்ளார். இவர் 1947-1953வரை தமிழக மேலவை உறுப்பினராக இருந்துள்ளார். 1957 1962வரை தமிழகச்சட்டப் பேரவை உறுப்பினராகப் பணி யாற்றினார். 1967இல் பேரவைத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். 'தமிழ் நாட்டுச் சட்டப் பேரவை நடை முறை விதிகள் என்ற பெயரில் ஒரு தனி நூலை எழுதி இவர் வெளியிட்டார்.

15-10-1942 இல் இவர் **தந்தி** என்னும் நாளிதழை மதுரையில் பதிவுச் செய்து, 1-11-1942 இல் அதனை வெளிக்கொண்டு வந்தார். தொடக்கத்தில் நாள்தோறும் 17நாள்கள் வரைஆயிரம் படிகள் தான் அச்சடிக்கப்பட்டன! விரைவில் 10,000படிகளுக்கு மேல் விற்பனை யாயிற்று! தாள்தட்டுபாட்டுக் காரணமாக அக்காலத்தில் வைக்கோலில் இருந்து காகிதம் செய்யப்பட்டு அச்சிடப் பட்டது. உள் நாட்டுச் செய்திகள், வெளி நாட்டுச் செய்திகள் ஆகியவை எல்லாம் தந்திமூலமாகவே 'தந்தி'க்கு வந்து சேர ஏற்பாடு

செய்யப்பட்டது. படித்தவர்கள்தான் பத்திரிகை படிப் பார்கள், படிக்க முடியும் என்றநிலையை மாற்றியது 'தந்தி' எளிய தமிழிலே எல்லோரையும் விரும்பி வாங்கிப் படிக்கும் வகையில் கவர்ச்சியாகச் செய்திகளை வெளியிட்டுத் 'தந்தி' புகழ் பெற்றது. 'தந்தி' 'தினத்தந்தி'யாகப் பெயர் மாற்றப் பட்டு நாள்தோறும் தொடர்ந்து கருத்துப்படம் (கார்ட்டூன்) வெளியிடும் வழக்கத்தை உண்டாக்கி விட்டது! படக்கதை சிரிப்பு போன்ற பொழுது போக்குப் பகுதிகளையும் சேர்த்து வெளியிடுகிறது. கடல் கன்னி' (சிந்து பாத் படக்கதை)யைத் தொடர்ந்து 8 ஆண்டுகளாக வெளியிட்டு வந்தது 'தந்தி' தான்! சென்னை, திருச்சி, தஞ்சை, வேலூர், மதுரை, சேலம், கோவை, திருநெல்வேலி போன்ற நகரங்களில் ஒரே சமயத்தில் 'தினத்தந்தி' சொந்தக் கட்டிடங்களில் அச்சிடப்பட்டு, மூன்று லட்சம் படிகளுக்கு மேல் விற்பனை யாகிக் கொண்டிருக்கிறது!

தமது இதழ்களின் தேவைகளுக்காக வேண்டி சி. பா. ஆதித்தனார் திருநெல்வேலி அரியநாயகி புரத்தில் 1962 இல் 'சன் காகித ஆலை'யைத் தொடங்கினார். ஒன்றுக்கும் உதவாத உதை மரத்திலிருந்துதான் காகிதம் உற்பத்தி செய்யப்பட்டுவருகிறது!

'தினத்தந்தி' சுடச் சுடச் செய்திகளை, மக்கள் விரும் பிப் படிக்கும் வகையில், சுவையூட்டும் வகையில் தந்து வருகிறது. பேச்சுத் தமிழைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்பது ஆதித்தனார் விதித்த பொற்சட்ட மாகும். 'தினத்தந்தி' அலுவலகங்களில் மிக வேகமாக அச்சிட உதவும் உருளை அச்சிடும் பொறிகளைப் பொதித் தும், படிகளை எண்ணித்தரும் அச்சுக்கருவிகளை அமைத் தும் தமது தேவைக்கேற்ற படிகளை அச்சிட்டு வெளியிட்டு வழங்கிவருகின்றன.

இந்தியாவில் 'தினத்தந்தி"யைப் போல வேறு எந்த நாளிதழிலும் அதிகமான முழுப்பக்க விளம்பரங்கள் வெளி

வருவது இல்லை! சென்னைத் 'தினத்தந்தி'யில் 1967ஆம் ஆண்டில் மொத்தம் 79 முழுப்பக்க விளம்பரங்கள் வெளி வந்துள்ளன என்றும்' வேறு எந்த தமிழ்ச் செய்தி தாளிலும் ஆண்டில் 5 முழுப்பக்க விளம்பரங்கள்கூட வெளியாக வில்லை என்றும் அரிதியிட்டு கூறப்படுகின்றது!

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1964 | ஆம் | ஆண்டில் 'தினத்தந்தியில்' | 52 | முழு | பக்க | விளம் பரங்கள் வெளிவந்தன |
| 1965 | ,, | ,, | 66 | ,, | ,, | ,, |
| 1966 | ,, | ,, | 72 | ,, | ,, | ,, |
| 1967 | ,, | ,, | 79 | ,, | ,, | ,, |

விவரம் : தினத்தந்தி வெள்ளி விழா ஆண்டு (1943-1968) மலர் (1968)இல் வெளியிடப்பட்டது திரு சி. பா. ஆதித்தனார் தமிழன் என்றஇதழை உண்மைச் சம்பவங்கள், மறக்க முடியாத நிகழ்ச்சிகள்போன்ற பகுதிகளைக்கொண்டு, கையினால்செய்யப்பட்டகாகிதத்தில்அச்சிட்டுச்சென்னையில் வெளியிட்டு வந்தார். திரு. கோ. த. சண்முகசுந்தரம் இதற்கு ஆசிரியராக இருந்தார்.

தமிழில் நாளிதழை வெளியிட்டு வழிகாட்டியவர் 'சுதேசமித்திரன்' திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர். அதனை நல்ல தமிழில் வெளியிட்டுப் பெருமை படுத்தியவர் 'தேசபக்தன்' ஆசிரியர் திரு. வி. க. சூடும் சுவையுள்ளதாக விறுவிறுப்பான நடையில் மாற்றியவர் 'தினமணி' திரு. சொக்கலிங்கம் பிரச்சனைகளைச் சிக்கல் அறுத்து 50 ஆண்டு காலம் ஆசிரியராகப் பணியாற்றி வளர்த்தவர் திரு. ஏ. என் சிவராமன். அதனை மக்கள் விரும்பி வாங்கி படிக்கும் வண்ணம் தமிழறியாதவரையும் தமிழ்ப்படிக்க வைத்தது தினத்தந்தி அதனை தொடங்கிவைத்த சி. பா. ஆதித்தனார் புகழ் தமிழ் இதழ் உலகில் கொடி கட்டிப் பறக்கிறது.

**ஆரணி குப்புசாமி முதலியார்** இவர் அட்சய ஆண்டுகார்த் திகை மாதம் 22 ஆம் நாள் வியாழக்கிழமை பிறந்தவர். தமிழ், ஆங்கிலம் எனும் இரண்டு மொழிகளிலும் வல்லமை

பெற்றவர். ஆங்கிலத்தில் 'மெட்ரிகுலேஷன்' தேர்வில் தேறியவர். சமய நூல்கள் பலவும் கற்றறிந்தவர். வேதாந்த கொள்கையில் ஈடுபட்டவர். தமது 26-வது வயதில் 'இந்து மத உண்மை' என்ற நூலை வெளியிட்டுள்ளவர். ஆங்கிலத்திலிருந்து பல நாவல்களைத் தமிழ் நாட்டுக்கு உகந்த பெயர் உடை நடை முதலியவற்றுடன் மொழி பெயர்ப்பதில் மிகவும் சக்தி வாய்ந்தவராகத் திகழ்ந்தவர். ஏறக்குறைய 75 நாவல்களுக்கு மேல் மொழி பெயர்த்தும் தழுவியும் எழுதி வெளியிட்டுள்ளார். 'கைவல்ய நவநீத வசனம், 'பகவத் கீதை வசனம்' எனும் நூல்களை யாவருக்கும் விளங்கும்படி விளக்கி எழுதியுள்ளார்.

கொழும்புவில் வெளியான '**சஞ்சீவி தரணி**' எனும் இதழுக்கு ஆரணி குப்புசாமி முதலியார் ஆசிரியராக இருந்தார். '**ஆனந்த போதினி**' இதழுக்கு 10 ஆண்டு காலம் ஆசிரியராக இருந்துள்ளார். அதில் கட்டுரைகளையும் கதைகளையும் தலையங்களையும் எழுதியுள்ளார்.

இவர் காய்ச்சலால் பீடிக்கப்பட்டு 24-1-1975 புரசை வாக்கம் வேளாளத் தெருவிலுள்ள வீட்டில் காலமானார். இவர் மறைவுக்கு 'ஆனந்த போதினி' அலுவலகம் அரை நாள் மூடப்பட்டது!

**பிறையாறு சொ. விருத்தாசலம் பிள்ளை:** இவர் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள பொறையாற்றில் பிறந்தவர். தென்னாப்பிரிக்காவுக்கு 1900ஆம் ஆண்டில் சென்று நேடாவில் குடியேறி வாழ்ந்தவர். அங்குப் பள்ளியாசிரியராகப் பணியாற்றினார். 'தமிழகம்' என்ற பெயரால் சங்கம் ஒன்று நிறுவி, வயது வந்தவர்களுக்குத் தமிழ்க் கல்வி கற்றுக் கொடுத்தார். 1908 இல் டிரான்ஸ்வால் அறப்போரை (சத்தியாக்கிரகத்தை) ஆதரித்து, பீட்டர் மாரிட்ஸ் பர்க் நகரில் நடைபெற்ற பெரும் இந்தியர் கூட்டத்திற்கு இவர் தலைமைத் தாங்கினார். டர்பனில் 1912இல் சரஸ்வதி விலாச அச்சுக் கூடத்தை ஏற்படுத்தி, '**விவேக பாநு** எனும்

தமிழ் மாத இதழை நடத்தி வந்தார். 1920இல் இந்தியா விற்குத் திரும்பி வந்தார். இவர் தென்னாப்பிரிக்காவில் இருந்த போது, 'சுதேச மித்திர'னுக்குத் 'திருஞான சம் பன்னன்' எனும் புனை பெயரில் 107 கடிதங்களை எழுதிய நிருபராக விளங்கியுள்ளார். இங்கிருந்து வித்துவான் **தில்லையாடி வேதியப்பிள்ளை'** 'சுதேச மித்திர'னுக்கு 'மறைக் கிழான்' என்ற பெயரிலும் சொந்தப் பெயரிலும் பல கடிதங்களை எழுதி நிருபராக இருந்துள்ளார். தில்லை யாடி வள்ளியம்மை காந்தியடிகள் தலைமையில் தென்னாப் பிரிக்காவில் நடைபெற்ற அறப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்று உடல் நலம் கெட்டு உயிர் நீத்தத் தியாகி ஆவார்

**டர்பன் ச. மு. பிள்ளை :** இவரது முழுப் பெயர் ச. முனு சாமி பிள்ளை என்பதாகும். இவர் தென்னாப்பிரிக்காவி லுள்ள டர்பன் நகரில் வாழ்ந்த தமிழராவர். இந் நகரிலுள்ள தமிழர்களுக்குக் கல்வி புகட்டுவதில் பெரிதும் உழைத்தவர். டர்பன் நகரத்து இந்து தமிழ்ப் பாட சாலையின் அதிபராக இருந்தவர்.

இவர் **பிராச மலர், செந்தமிழ்ச் செல்வன், தமிழ்மணி** எனும் இதழ்களின் ஆசிரியராக இருந்துள்ளார். பர்மா, மலேயா, இந்தியா, இலங்கை முதலிய நாடுகளில் உள்ள தமிழ் இதழ்களுக்கு அடிக்கடி எழுதி வந்தார். 'பகைவரும். நண்பரும்' 'திருமண மந்திரம்' 'பாலர் பாடம்' முதலிய நூல் களை எழுதியுள்ளார். பாரதியாரைப் பாராட்டி விழாக்கள் எடுத்ததன் மூலம், பாரதியாரைத் தென்னாப்பிரிக்காவி லுள்ள தமிழர்களுக்கு நன்கு அறிமுகப் படுத்தினார். தமது 53வது வயதில் 10-11-1956 இல் இவர் மறை வுற்றார்.

**திராவிட இயக்க இதழ்கள்** திராவிடம் என்பது தென் னிந்தியாவை உள்ளடக்கிய பகுதிகளையும், அப் பகுதிகளில் பேசப்படும் தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகள் சார்ந்த குடும்பத்தையும் குறிக்கும்

சொல்லாகும். இங்கு மக்களுக்குள் இருந்த ஏற்றத் தாழ்வு நிலைகளையும், ஒரு சாரார் அரசுத் துறையிலும் பிற துறைகளிலும் எல்லா முக்கிய பதவிகளிலும் இடம் பெற்று, கொட்டம் அடித்துக்கொண்டிருப்பதைக் காணச் சகியாது, அன்பர்கள் சிலர் திராவிடர் சங்கத்தைக் கண்டு, திராவிட இயக்கத்தை ஏற்படுத்தி, ஏற்றத் தாழ்வை நீக்கி விடவும் இங்கு வாழும் மக்களுக்கு ஏற்றபடி விகிதாசார பிரிநிதித்' துவம் தரவேண்டும் என்று கிளர்ச்சி செய்தும், தென்னிந்திய நல உரிமைக் கழகத் (South indian Liberal Federation)தை நிறுவினர். இக் கழகத்தின் சார்பில் வெளியிடப்பட்ட ஆங்கில நாள் இதழ்க்கு **ஜஸ்டிஸ்** (Justice) எனப் பெயர் சூட்டினார். நாளடைவில் 'ஜஸ்டிஸ்' எனும் இதழின் பெயரே, அதனை நடத்திய அமைப்புக்கும் ஜஸ்டிஸ் கட்சி (JusticeParty என ஏற்பட்டுவிட்டது!இக் கட்சியின் சார்பில் **திராவிடன்** எனும் நாளேடு 1916 இல் தொடங்கப்பட்டு' திரு. ஜே. எஸ். கண்ணப்பரை ஆசிரியராகக் கொண்டு பல ஆண்டுகள் சிறப்பாக நடைபெற்றது. இது 'சுதேச மித்திர' னுடனும், 'தேச பக்த'னுடனும் அடிக்கடி வாதப் போரிட்டுள்ளது. திரு. கண்ணப்பருக்குப் பின்னர் திருவாளர்கள் மணி திருநாவுக்கரசு முதலியார், பக்தவத்சலம், சுந்தர வடிவேலு போன்றோர் ஆசிரியர்களாக இருந்துள்ளனர். 'திராவிட'னில் சனிக்கிழமை தோறும் கதை, கட்டுரைகள் வெளிவரும். இக் கட்சியினுடைய **விடுதலை** என்னும் மற்றொரு நாளேட்டிற்கு முதல் ஆசிரியராக திரு டி. ஏ. வி. நாதன் (1934) இருந்தார். இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஆணித் தரமாக எழுதக் கூடியவர். இவர் 'சாத்தன்' எனும் புனை பெயரில் கதைகள் கட்டுரைகள் எழுதுவார். சென்னை மாகாணத்தின்இதழ்களின்ஆலோசகராகவும்இவர் இருந்தார் இவைகளுள் நகைச்சுவை மிளிரம் எழுதுவார். பிற்காலத்தில் திருவாளர்கள் பண்டித முத்துசாமிப் பிள்ளை, சி. என். அண்ணாதுரை எம். ஏ., எஸ். குருசாமி பி. ஏ. மணியம்மையார், க. வீரமணி எம். ஏ. பி. எல். போன்றோர் ஆசிரியராளர்கள் அண்ணாவின் எழுத்துத்திறமையை அறிய வைத்தது.

'விடுதலை' ஆகும். இவரது விறுவிறுப்பான நடை எண்ணிக்கையைப் பெருக்கிற்று; மாற்றாரும் விரும்பிப் படிக்கத் தொடங்கினர்!

திருகுருசாமியின் குத்தூசி பகுதிகள்சிந்தனையில்கிளருவ தாக இருந்தன. 'விடுதலை' காங்கிரஸ் அரசாங்கத்தினால் ஜாமீன் கட்டும்படி கெடுபிடி செய்யப்பட்டது! 'தினசரியில்' திருசொக்கலிங்கம் இக் கொடுமையை எதிர்த்துஜாமீன் கெடு பிடி' என்ற தலையங்கமே எழுதியுள்ளார்!

**குடி அரசு (1925)** பெரியார் ஈ.வே. ராவினால் தொடங்கப்பட்ட முதல் தன்மான இயக்க வார இதழாகும். இது ஞானியாரடிகளால் முதலில் வெளியிடப்பட்டது! இதில்தான் தமிழ் எடுத்துச் சீர்திருத்தத்தைப் பற்றிய கருத்து முதலில் தெரிவிக்கப்பட்டு, அவற்றை விடாது பின் ப்ற்றப்பட்டது. இதில் கைவல்ய சாமியார் பகுத்தறிவுக்குப் புறம்பானவற்றைப் பிட்டு பிட்டு விளக்கி வந்தார். பிற் காலத்தில் அவை தொகுக்கப்பட்டுக் 'கைவல்ய' கட்டுரைகள் என்று நூலாக்கப்பட்டது. பெரியார் 'சித்திர புத்திரன் ஏன்ற புனை பெயரில் சிந்தனையைத் தூண்டும் கட்டுரை களை எழுதி வந்தார். திரு. ப. ஜீவானந்தம்' 'குடி அரசு'க்கு ஆசிரியராகிக் கவிதைகளையும் கட்டுரைகளை யும் எழுதினார். வி. மு. சுப்பிரமணியப் பிள்ளை, 'சந்திர சேகரப் பாவலர்' என்ற புனை பெயரில் 'இராமாயண ஆராய்ச்சிக் கட்டுரைகள்' எழுதிவந்தார். ஈழத்து சிவானந்த அடிகள் 'பெரிய புராண ஆராய்ச்சிக் கட்டுரைகள்' எழுதி வந்தார். பின்னர் இவை நூலாக்கப்பட்டன. கே. எம். பால சுப்பிரமணியம், சீனி.வேங்கடசாமி, கனக சுப்புரத் தினம் (பாரதி தாசன்), கோவை அய்யாமுத்து போன் றோர் 'குடியர'சில் அவ்வப்போது கவிதைகள், கட்டுரைகள் எழுதியுள்ளனர். சொ. முருகப்பா, 'சண்டமருதம்' என்ற நாளிதழைத் தன்மான இயக்கத்திற்காகத் திருச்சியிலிருந்து நடத்தினார். மறுமலர்ச்சி என்னும் இதழ்க்குத் திருமதி மரகதம்மாள் ஆசிரியையாகக் காரைக் குடியில் இருந்து

திறம்பட நடத்தி வந்துள்ளார். அறிவுக்கொடி எனும் இதழைச் 'சிவகாமி சிதம்பரனார்' கும்ப கோணத்திலிருந்து வெளியிட்டுள்ளார். இதில், சாமி சிதம்பரனாரின் கட்டுரைகளும் கவிதைகளும் வெளியாயின. பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் சமதர்மம் (1934) பகுத்தறிவு' புரட்சி, (1934) உண்மை, (1970) Revoli (1928) என்னும் இதழ்களையும் தொடங்கி நடத்தி வந்துள்ளார்.

**அறிஞர் அண்ணா, நவயுவன்** எனும் இதழைக் காஞ்சி மணி மொழியார் துணையுடன் முதலில் தொடங்கி நடத்தினார். பின்பு 1942 இல் காஞ்சியிலிருந்து **திராவிட நாடு** எனும் வார இதழைத் தொடங்கி 1963 ஆம் ஆண்டு வரை திறம்பட நடத்தி வந்தார். இதில், இவர் பரதன், வீரன், சி. என். ஏ. என்று பல பெயர்களில் கதை, கட்டுரை, நாடகம் ஆகியவற்றை எழுதியுள்ளார். இவரது அடுக்கு மொழி நடை பல்லோரைக் கவர்ந்து இழுத்தது! பிரிவினைத் தடுப்புச் சட்டத்தை இந்திய அரசு கொண்டு வந்த போது **காஞ்சி** எனும் பெயரில் 1963இல் வார இதழை வெளிக் கொண்டு வந்து நடத்தினார். இவரது 'தம்பிக்கு' என எழுதிய மடல்கள், தமிழ் இலக்கியத்தில் புது வரவைக் கொடுத்துள்ளன!

புதுவையில் **தொழிலாளர்** மித்திரன் என்ற வார இதழை வழக்கறிஞர் திரு. பெருமாள் துவக்கி நடத்தினார். இதற்கு, காஞ்சி கலியாண சுந்தரம் ஆசிரியப் பொறுப்பேற்றார். திருச்சியிலிருந்து திரு. டி. எம். முத்து என்பவர் **திராவிடமணி** என்ற வார ஏட்டைப் பல காலம் தொடர்ந்து நடத்தி வந்தார். இதில் திராவிட இயக்கத்திற்காகப் பாடு பட்டவர்களைப் பற்றிப் படத்துடன் எழுதப்பட்டுள்ளது. இதே நகரிலிருந்து சுல்தான் பக்தாதி என்பவர் **சமரசம்** என்ற ஏட்டை வெளிக் கொண்டு வந்தார்.

சென்னையிலிருந்து திரு டி. எம். பார்த்தசாரதி அவர்கள் **தமிழ்உலகம்**என்ற வார இதழைத் தொடங்கி பல

ஆண்டுகள் வரை நடத்தினார். இதில் கலைஞர் மு. க. 'தொடர்பன்' போன்றோர் அடிக்கடி கட்டுரைகள் எழுதி வந்தனர். 'தமிழ் உலகம்' - திரு. வி. க. வின். மணி விழா மலரையும் வெளியிட்டுள்ளது.

திருவாரூரிலிருந்து 'மாணவ நேசன்' எனும் துண்டறிக்கை வடிவில் 1939இல் கலைஞர் மு.கருணாநிதி தம் இளமையில் இதழை வெளியிட்டு வந்தார். பின்னர் 'முரசொலியை' 1942 வார இதழாகவும் பின்னர் 1946 முதல் நாளிதழாகவும் திறம்பட நடத்தி வந்துள்ளார். 'முரசொலி' தான் இயக்க இதழ்களில் சென்னையிலும் மதுரையிலும் ஒரே சமயத்தில் வெளியிடக் கூடிய வாய்ப்பைப் பெற்ற நாளிதழாகத் திழ்ந்துள்ளது. முரசொலியில் மு. க. உடன் பிறப்புக்கு என்று எழுதும் திறந்த மடல், இயக்கத்தை வழிநடத்திச் செல்லும் சாதன மாக அமைந்துள்ளது. இவரே மறவன், மடல் குங்குமம், முத்தாரம், போன்ற இதழ்களையும் நடத்தி வருகிறார். 'முரசொலி' தான் அழகான பொங்கல் மலரையும் பிறமலர் களையும் வெளியிட்டுப் பெருமை பெற்றுள்ளது.

சென்னையிலிருந்து காஞ்சி மணிமொழியாரும் அவரது மூத்தமகனான மா. இளஞ்செழியன் எம். ஏ. வும் ஆசிரியர் களாக இருந்து 'போர்வாள்' எனும் வார ஏட்டை வளமான நடையில் விறுவிறுப்பாக நடத்திவந்தனர் 'போர்வாள்' பல ஆண்டுகள் வரை 'திராவிடநாடு' இதழ்க்கு அடுத்தபடியாகச் சிறப்பிடம் பெற்றிருந்தது. இது 'பராசக்திமலர்' 'சொர்க்க வாசல் மலர்' மற்றும் இயக்கமாநாட்டு மலர்கள் பலவற்றையும் திறம்பட வெளியிட்டுள்ளது. இவர்கள் நடத்திய பகுத்தறிவுப் பாசறையிலிருந்து தமிழன் தொடுத்த போர், ஈ.ரோட்டுப்பாதை, இந்திய அரசியல் சட்டம் போன்ற சிறந்த நூல்களும் வெளிவந்தன.

புதுக்கோட்டை இராயவரத்திலிருந்து பொன்னி எனும் மாத இதழை திரு. முருகு சுப்பிரமணியம் அவர்கள் ஆசிரிய

ராக இருந்து சிறப்புற நடத்தி வந்தார். 'பொன்னி' இயக்க இதழ்களில் அழகான இதழாகவும், சிறந்த முறையில் எழில் நிரம்பிய பொங்கல் மலரை வெளிக்கொண்டு வந்தும் சிறிந்து மிளிர்ந்தது. இதில் உலக இலக்கியக் கட்டுரைகளும், பாரதி தாசன் பரம்பரையினர் கவிதைகளும் வெளியாகியுள்ளன. இது சென்னையில் மாத இருமுறை இதழாகவும் வெளியிடப் பட்டது, மாற்றாரும் ஏற்றிப் போற்றிய இதழாகத் திகழ்ந்துள்ளது.

திருவரங்கத்திலிருந்து மணவை ரெ. திருமலைசாமி என்பவர் நகரதூதன் என்ற வார இதழைத் தொடங்கி, கேசரி என்ற புனைபெயரில் பேனாநர்த்தனம் புரிந்துவந்தார் இவருக்கு எளிய இனிய வளமான நடை அமைந்திருந்தது. இவர் திருச்சி, திருவரங்க நகராட்சிகளில் நடைபெற்ற நிர்வாகக் கோளாறுகளைப்பற்றி முற்காலத்தில் பிட்டு பிட்டு விளாசி வந்தார். பெரியார் பற்றியும், ஆகஸ்டு 15,ல் பற்றியும்' வேலைக்காரி நாடகம் பற்றியும் எழுதியுள்ளவை கிறப்புத்துச் சொல்லத்தக்கவையாகும் இவர் 'தினமணி' யிலிருந்து சொக்கலிங்கம் விலகியதைப் பற்றியும் நூல் ஒன்று எழுதியுள்ளார். இவர் அண்ணாவின் எழுத்துக்கு வழிகாட்டியாக இருந்தவர். புதுவையில், கனகசுப்புரத்தினம் (பாரதிதாசன்) சுப்பிரமணிய கவிதாமண்டலம் என்னும் கவிதை இதழை முதன்முதலாகத் தொடங்கியவர். இவர் புதுவைமுரசு, முல்லை, குயில் என்னும் இதழ்களுக்கும் ஆசிரியராக இருந்தார்.

சென்னையில் திருவாளர்கள் டி. என் இராமனும், ஜல கண்டபுரம் ப. கண்ணனும் சேர்ந்து 'குயில்' வார இதழைத் தொடங்கினார்கள். பின்னர் 'குயில்' மாதஇதழாகவும் நடைபெற்றது ஜலகண்டபுரத்திலிருந்து திரு. ப. கண்ணன் பகுத்தறிவு என்னும் மாத இதழைப் பல ஆண்டு காலம் தொடர்ந்து நடத்தினர். சேலத்திலிருந்து திரு வை. திருநாவுக்கரசு, பூந்தோட்டம் என்ற மாத இதழைத் தொடங்கினார். பின்னர் இவர் மலேசிய அரசின் மக்கள் தொடர்பு அதிகாரியாகப் பணி புரிந்தார்.

புலவர் பு. செல்வராசன், கதிரவன் என்ற மாத இதழைப் பாவலருடன் சேர்ந்து திறம்பட நடத்தினார். இதற்கு அன்பர் ஜக்கிரியாவும் பெரிதும் துணையாக இருந்தார். திரு பூ. கணேசன் எம். ஏ. நிலவு என்னும் மாத இதழைத் தொடங்கி நடத்தினார். இவர் பின்னர் தமிழக அரசின் குடும்ப நலத்துறை, விளம்பரத்துறை ஆகிய வற்றிற்கு துணை இயக்கு நாரக இருந்து ஓய்வு பெற்றார். நாவலர் இரா. நெடுஞ் செழியன் எம். ஏ. மன்றம் என்னும் மாத இதழை 1948 இல் தொடங்கி விடாது பல ஆண்டுகள் வரை நடத்தினார். இது வார இதழாகவும் மாறியது. இதில் இவரது இளவல் இரா செழியன் எம்.ஏ.வும் பல கட்டுரைகளையும் கதைகளை யும் எழுதிவந்தார். திராவிட இயக்க இதழ்களில்'மன்றத் திற்குத் தனித்த செல்வாக்குக்கிடைத்தது. திரு க அன்பழகன் எம். ஏ. வும் புதுவாழ்வு என்னும் மாத இதழைத் தொடங்கி நடத்தினார் திரு ஏ. பி. ஜனார்த்தனம் எம். ஏ. வும் தோழன் என்ற இதழின் ஆசிரியப் பொறுப்பேற்று நடத்தினார் திரு சி. பி. சிற்றரசு தீப்பொறி என்னும் இதழை வேலூரி லிருந்து முதலில் தெடங்கி நடத்தினார். இவர் தீச்சுடர் இனமுழக்கம், தமிழ்மன்றம் போன்ற இதழ்களுக்கும் ஆசிரியராக இருந்தார் திரு என். ஜீவரத்தினம் டார்பிடோ எனும் இதழைச் சென்னையிலிருந்து நடத்தியுள்ளார். விருது நகரிலிருந்து வி. வி. இராமசாமி அவர்கள் தமிழ்த்தென்றல் எனும் மாத இத்ழைத் தொடங்கி பல ஆண்டுகள்வரை விடாது நடத்தி வந்தார். இங்கிருந்து ஏ. வி. பி, ஆசைத்தம் பியும் தனியரசு எனும் மாத இதழைத் தொடங்கினார். பின்னர் சென்னையிலிருந்து 1962 வார இதழாகவும் நாளேடாகவும் வெளியிட்டார். திருமதி சத்திய வாணி முத்து அன்னை என்னும் மாத இதழைத் தொடங்கி நடத்தினார். இளமுருகு பொற்செல்வி அஞ்சுகம், தமிழ்ச் சுடர், தமிழர் ஊழியன் எனும் இதழ்களின் ஆசிரியராக இருந்து நடத்தியுள்ளார். இவர் பல முறை அறப்போராட்டங் களுக்காகச் சிறை சென்றுள்ளவர்.

திரு.கே.ஏ. மதியழகன் பி.ஏ. : இவர் தென்னகம் எனும் வார இதழைச் சென்னையில் தொடங்கி நடத்தினார். பின்னர் இது நாளேடாகவும் வளர்ச்சியுற்றது. 'தீரன் சின்ன மலை' 'அறிவின் தூதர்கள்' எனும் நூல்களின் ஆசிரியரு மாவர் சட்டமன்ற உறுப்பினராகவும் சட்டவைத் தலைவரா கவும் இருந்தவர். திரு. இராம. அரங்கண்ணல், 'விடு தலை'யிலும் 'திராவிட நாட்'டிலும் துணையாசிரியராகப் பணியாற்றியவர். 'கண்ணகிச் சிலை பேசினால்' என்னும் கட்டுரையை எழுதி 'சிலப்பதிகாரத்தைப் பற்றித் திரித்துக் கூறியவர்களை மட்டந்தட்டியவர்! அறப்போர் எனும் இதழை நடத்தியவர். பல திரைப் படங்களுக்கு உரைநடை எழுதியும், பல திரைப் படங்களைத் தயாரித்தும் புகழ் பெற்றுள்ளவர். சட்டமன்ற உறுப்பினராகவும், குடிசை மாற்றுவாரியத் தலைவராகவும் இருந்தவர். திரு க. இராஜாராம் பி. ஏ. திருவிளக்கு எனும் மாத இதழை நடத் தியவர் பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினராகவும் சட்ட மன்றத் தலைவராகவும் இருந்தவர்.

அறிஞர் அண்ணா தமது அரிய பேச்சாலும் எழுத்தாளும் மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தார். மிகக் குறுகிய காலத் திற்குள் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் செல்வாக்குப் பெறச்செய்து, 30ஆண்டு கால காங்கிரஸ் ஆட்சியை வீழ்த்தி தி. மு. கழக ஆட்சியை அமைத்தார். அண்ணா, இரா. நெடுஞ்செழியன், மு. கருணாநிதி, கே. ஏ. மதியழகன், சத்தியவாணி முத்து ஆகியோர் இதழாசிரியர்களாக அமைச்சரவையைக் கண்டவர்கள். ஏறக்குறைய இதழ் ஆசிரியர்களைக் கொண்ட அமைச்சரவையாகவே இருந்தது! மேலும், என் வி. நடராசன், திராவிடன் வார இதழை நடத்தியவர். மு. க. அமைச்சரவையில் தொழி லாளர் நல அமைச்சராகப்பதவிவகித்தவர். இயக்கத் தோழர் களான- என் எஸ் இளங்கோ-எதிரொலி; ச. பழனிவேலன்-சங்கநாதம்; கே. வி.கே சாமி-நெல்லைத்தோழன்; எம்.எஸ். சிவசாமி கிளர்ச்சி - தட்சிணாமூர்த்தி; சூறாவளி; திருவை

அண்ணாமலை கழகக் குரல், இனமணி; இராம சுப்பையா உரிமை வேட்கை; டி, என். இராவணன் - அண்ணா; குத்தூசி குருசாமி - அறிவுப்பாதை - சாத்தூர் பா. இராசாமணி; வைப்பாறு, தில்லை. வில்லாளன் பூமாலை ஆகிய இதழ் களைத் தொடங்கி நடத்திவந்தனர். செங்குட்டுவன் 'நம் நாடு'வில் துணையாசிரியாகப் பணியாற்றியவர், கவிக்கொண்டல் எனும் இதழின் ஆசிரியராகவும் இருந்தவர்' நாஞ்சில் கி. மனோகரன் எம், ஏ. இலட்சியவாதி எனும் இதழின் ஆசிரியராகவும் நிதியமைச்சராகவும் இருந் துள்ளார் ப. சண்முக வேலாயுதம் - ஈரோட்டுப்பாதை, வே. ஆனைமுத்து சிந்தனையாளன் எனும் இதழ்களின் ஆசிரியராகவும் கவிஞர் கண்ணாதாசன் தென்றல், கண்ண தாசன் கடிதம் எனும் இதழ்களுக்கு ஆசிரியராகவும் இருந்து சிறப்பாக நடத்திவந்தனர்.

தென்னகத் தலைவன் - தினகரன், தென்னாடு - எஸ். ஆர். சாமி, நாத்திகம் - இராமசாமி, நேர்மை - இரா. இளவரி, புதுவைமுரசு - புலவர் இளஞ்செழியன், போராட்டம் - திருவத்திபுரம் மா. ந. இராசமாணிக்கம், முருகு - ந. அறிவழகன் தொடர்பன். விடிவெள்ளி - ஈ வே. கி. சம்பத், மகிழ்ச்சி - சதானந்தம், மறுமலர்ச்சி - இராமசாமி, சுரதா, விண்மின், இலக்கியம் காவியம் கவிஞர் சுரதா ஆகிய இதழ் களும் வெளியாகியுள்ளன. உடுமலை பிரங்கி - பி. வி. இராம சாமி, தமிழ்நிலம் - குடியேற்றம் அண்ணல் தங்கோ, தளபதி - கோ. இறைமுடிமணி, முன்னேற்றமுரசு - பி. வி. முத்துசாமி மாலை மணி பி.எஸ். இளங்கோ, தென்னரசு - எஸ். எஸ் தென்னரசு, தன்மானம் - இரா. ரத்தினவேலு கோலாலம்பூர், திராவிடகேசரி வே. ஏ. சந்திர தாசன், சிங்கப்பூர் திராவிட முரசு - ஞா. ரத்தினமணி சிங்கப்பூர், தென்னவன் - வள்ளி மணவாளன், சிங்கப்பூர்.

திராவிடர் கழக இதழ்கள் - விடுதலை, குடியரசு, பகுத்தறிவு, புரட்சி, உண்மை, அறிவுப்பாதை, பெரியார் குரல் (1956) திராவிடன் குரல் (1955), பெரியாரிசம்

(1960), அறிவியக்கம், அறிவுவழி - பொதுவுடமை இயக்க இதழ்கள் ஜனசக்தி, தாமரை தீச்சுடர், செம்மலர், சிகரம் ஜனநாயகம், மார்க்சீய ஒளி, செங்கொடி, புதுகலாச்சாரம், செம்பதாகை, மன ஓசை, தாய்மண் சுதந்திரம் முஸ்லிம் லீக் இதழ்கள் - முஸ்லிம் லீக் சமரசம், உதய சூரியன், தாரகை, நண்பன், சுதந்திரநாடு (1946)-நாளிதழ் முஸ்லீம் (1946) அகமது இப்ராகீம் சாகிப் பி. ஏ. பி. எல்.நாளேடு 9 ஆண்டு கள் வரை வெளிவந்தது மணிவிளக்கு,பிறை. முஸ்லிம் முரசு உரிமைக்குரல், மணிச்சுடர் தினசரி சுதந்திரக்கதிர். தமிழரசு இயக்க இதழ்கள் - தமிழ் முரசு (1946) தமிழன் குரல் (1954) செங்கோல் (1950) சாட்டை, முழக்கம். காங்கிரஸ் இயக்க இதழ்கள் - சுதேச மித்திரன் (1882) தமிழ்நாடு (1928) தேசபக்தன் நவசக்தி (1920) தினமணி (1938) பாரததேவி ஜெயமணி நவசக்தி (1960) பாரதம், ஜெயபேரிகை, கடிதம், ஜெயக்கொடி, விடி வெள்ளி, அன்னை நவசக்தி (1988).

மூலபலம் : ஓர் இதழ் நடத்துவதற்கு நல்ல ஆசிரியர் அமையவேண்டும். அவர் கல்வி கேள்விகளில் சிறந்துள்ள வராகத் திகழ்ந்திருக்க வேண்டும். இதழின் சொந்தக்கார ருக்குப் பொருள் செல்வம் இருக்கவேண்டும். அவருக்குச் சொந்தமாக அச்சகம் இருந்தால் மிகுதியும் பயனளிக்கும் இதழ்க்கு நல்லதோர் ஆசிரியரும் பொருள் வசதியுள்ளவரும் அமைந்து விட்டால் மட்டும் போதாது! அவ்விதழுக்கு நல்ல கொள்கையும், படிப்பவர்களைக் கவர்ந்திழுக்கக்கூடிய சக்தியும்அகத்தியம்தேவை. இதழைவிரும்பிவாங்கிப் படிக்கக் கூடிய கையொப்பக்காரர் (சந்தாதாரர்) எவ்வளவுக் கெவ்வளவு அதிகரிக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவ்விதழ் பொருளாதாரத் தொல்லைகளுக்கு உட்படாது ஒழுங்காக வெளிவர இயலும்! அவ்விதழ் எவ்வளவு விற்பனையாகிறது என்பதைப் பொறுத்துத்தான் விளம் பரங்களும் கிடைக்கும்! கையொப்பக்காரர்களும் விளம்பரங் களும் மிகுதியாக மிகுதியாகத்தான் அவ்விதழ் பொருள் முட்டுப்பாடின்றி தொடர்ந்து வெளியாகி செல்வாக்குப் பெற்றுத் திகழும்.

தமிழ் இதழ்கள் தொடக்கத்தில் கையொப்பக்காரர் களை நம்பியே ஆரம்பிக்கப்பட்டன. ஆண்டுச் சந்தாவைப் பெற்றுக்கொண்டு ஒழுங்காகப் பல இதழ்கள் வெளிவந் துள்ளன. சில இதழ்களுக்குக் கையொப்பக்காரரின் பணம் கிடைக்காவிட்டாலும் தொடர்ந்து அனுப்பி, படிப் பவரிடமிருந்து சந்தா தொகை கிடைக்கும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தன! சந்தாத் தொகைக் கிடைத்தும் இடையில் நின்றுபோன இதழ்களும் உண்டு.

பழங்கால இதழ்களைப் எடுத்துப் பார்த்தால் அக்காலத் தில் இதழ்களுக்கு நிர்ணயத்திருந்த கையொப்பத்தொகை என்னவென்று விளங்கும்.

விலை:- முற்கால இதழ்களின் விலை என்னவாய் இருந்தன என்பது பற்றி இனி அறிந்து கொள்வோம்.

'தினவர்த்தமானி' (1851)- வார இதழ். பெரிய (குவார்டோ) அளவில் 8பக்கள் கொண்டது. இதன் ஆண்டுக் கட்டணம் ஐரோப்பியர்க்கு ரூ. 5; சுதேசியர்க்கு ரூ. 3. இது வாரந்தோறும் 784 படிகளுக்கு மேல் செலவழிந்தது. 'விவேக சிந்தாமணி' (1892) - மாத இதழ். 32 பக்கங்கள்; தனிப்படி 7 அணா; ஆண்டுக்கு ரூ. 5. 'இந்து சாதனம்' (1889)- இலங்கையில் தொடங்கப்பட்ட இந்து சமய வார இருமுறை இதழ்; தனிப்படி 5 சதம். 'சுதேசமித்திரன்' (1886) அரசியல் வார இதழாகத் தொடங்கப்பட்டு வார இருமுறை, மும்முறை ஆகி எட்டுப் பக்க நாளிதழாக வளர்ச்சியுற்றது. தனிப்படி ஒரணா. 'சித்தாந்த சங்கிரகம்' (1878)- சட்ட மாத இதழ்; 24 பக்கங்கள்; ஆண்டுக்குரூ. 5. 'உபாத்தியாயர்' (1888)- கல்வி மாத இதழ்; 16 பக்கங்கள். தனிப்படி 2 அணா, 'சுதேச பரிபாலனி' (1904)- பர்மாவில் தொடங்கப்பட்ட நாளிதழ்; தனிப்படி ஒரணா. ஆண்டுக் கையொப்பம்- உள்நாட்டுக்கு ரூ. 18/-; வெளி நாட்டுக்கு ரூ. 22; 8 பக்கங்கள் கொண்டது. 'லோகோபகாரி,

(1895)- மாத இதழாகத் தொடங்கப்பட்டது, வார இதழாக மாற்றப்பட்டது. இதற்கு 2500 வரை கையொப்பகாரர்கள் இருந்தனர். தமிழ் இதழ்களில் தனிச் சலுகைகள் தந்து, கையொப்பக்காரர்களின் எண்ணிக்கையைப் பெருக்க பல திட்டங்களை வகுத்து நடைமுறை படுத்தியது 'லோகோபகாரி'யே ஆகும்! 'யதார்த்த வசனி' (1900)- வார இதழ்; காலணா விலை (இது ஒரு ரூபாயில் 64ல் ஒரு பங்காகும்) 27 ஆண்டுகள் வரை தொடர்ந்து நடைபெற்ற இதழாகும். 'ஜனானு கூலன்' (1900)- இதுவும் வார இதழாகும்; காலணா விலை; வாரந்தோறும் 2000 படிகள் அச்சாகியது. 40 ஆண்டு காலம் வரை இடைவிடாது நடத்தப்பட்டது. 'ஞான சாகரம்' (1902) இலக்கிய மாத இதழ். ஆண்டுக் கட்டணம் ரூ. 1. 'ஆனந்த போதினி' (1915) இலக்கிய மாத இதழ். முதலில் ஒரணா விலை. எழுதியவர்களுக்கு முதலில் சன்மானம் வழங்கிய முதல் இதழாகும். 50 ஆண்டுகள் வரை தொடர்ந்து நடை பெற்ற புகழ் பெற்ற இதழாக விளங்கியது. 'தேச பக்தன்' (1917)- திரு. வி. க. வை ஆசிரியராகக் கொண்டு நடத்தப்பட்ட தேசிய நாளிதழ். 2½ ஆண்டுகள் இவர் ஆசிரியர் பொறுப்பில் இருந்தார். ஆண்டுக்கு ரூ. 15/- தனிப்படி ஒரணா. இவர் விலகிக் கொண்ட பிறகு ஓராண்டு வரை நடை பெற்றது. 'செந்தமிழ்' (1902)-மதுரைத் தமிழ்ச் சங்க இலக்கிய மாத வெளியீடு. ஆண்டுக்கு ரூ.... தொடர்ந்து நடைபெற்று வருகிறது.'திராவிடன்' (1916)- இது ஜஸ்டிஸ்கட்சியால் நடத்தப்பட்ட நாளிதழ். பல காலம் வரை நீடித்து நடந்தது. ஆண்டுக்கு ரூ. 18 ; தனிப்படி ஒரணா.

'செந்தமிழ்ச் செல்வி' (1923)-சைவ சித்தாந்த கழகத்தினரால் 60 ஆண்டு காலமாக நடத்தப் பெற்று வரும் இலக்கிய மாத இதழ். ஆண்டுக்கு ரூ. 3.......தனிப்படி 4 அணா 'ஆனந்த விகடன்' (1926)- மாத இதழாகத் தொடங்கப் பட்டு1938 முதல் வார இதழாக மாற்றப்பட்டது.அப்போது தனிப்படி விலை 2 அணா; ஆண்டுக்கு ரூ. 1. 64 பக்கங்கள்

கொண்டிருந்தது. வாங்குபவர்களை ஊக்குவிக்க 100 பொருள் ரூபா ஒன்று என்றும், குறுக்கு எழுத்துப் போட்டி நடத்தியும், சிறுகதை, நாவல் போட்டிகளை வைத்துச் சிறப்பித்தும் உள்ளது. பொன்விழாக் கொண்டாடி பொழுது போக்கு இதழாகப் புகழ் பெற்றுள்ளது. தீபாவளி மலரைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. 'கலைமகள்' (1936)-இது முதலில் 22 'விஷயங்' களைத்தாங்கி, 108 பக்கங்களுடன் ஆறணா விலையில் வெளியாகியது 1943 இல் விலை எட்டணாவாக உயர்த்தப்பட்டது 25,000 படிகளுக்கு மேல் விற்பனையாகி வரும் இலக்கிய மாத இதழ். பல நாவல் பரிசுகள் கொடுத்து எழுதுபவர்களை ஊக்குவித்து வருகிறது. 'தமிழ் நாடு' (1926)- இது வார இதழாகத் தொடங்கப் பட்டு 8 பக்கங்கள் கொண்ட நாளிதழாக மாறியது தனிப்படி ஓரணா. இது 'சுதேசமித்திரனை' விடச் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது! 'காந்தி (1931)-மாத இருமுறை இதழ் தனிப்படி இரண்டணா ஆண்டுக்கு ரூ 2½ 'ஜெயபாரதி' (1933)- காலணா விலையில் விறுவிறுப்பாக நடையில் வெளியிடப்பட்ட நாளிதழ். 'மணிக்கொடி' (1937) மறு மலர்ச்சி மாத; இதழ் ஆண்டுக்கு ரூ. 3. 'வீரகேசரி' (1930) இலங்கையில் தொடங்கப்பட்ட நாளிதழ்; 8 பக்கங்கள் கொண்டது தனி. இதழ் 5 சதம். ஆண்டுக்கு ரூ. 15. 'கலைக் கதிர்' (1948)- தமிழில் அறிவியலை வளர்க்க தொடங்கப் பட்ட மாத இதழ்; 48 பக்கங்கள். ஆண்டுக்கு ரூ. 1½ 'தமிழ் நேசன்' (1924) கோலாலம்பூரில் வார இதழாகத்தொடங் கப்பட்டு நாளிதழாக வளர்ச்சியுற்று வெளிவருகிறது. 4 பக்கங்கள் கொண்டு 10 காசு விலை வைக்கப்பட்டிருந்தது! முதலில் 1200 படிகள் செலவழிந்தது. தற்போது 30,000 படிகளுக்குமேல் விற்பனையாகிறது. 'தமிழ் முரசு' (1935)- சிங்கப்பூரில் தொடங்கப்பட்ட நாளிதழ் முதலில் ஒரு காசு விலை பின்னர் 15 காசு விலையாயிற்று-பல ஆயிரம் செல வழிகிறது. 'கல்கி' (1941) வார இதழ். தனிப்படி. 2 அணா

முற்கால இதழ்களின் விலையைப் பார்க்கும் போது சில பொதுவான முடிவுகளுக்கு நாம் வர வேண்டியுள்ளது. மாத இதழ்கள்-ஆண்டுக்கு ரூ $1\frac{3}{4}$, 3, 5, $5\frac{1}{4}$ என்றும், தனிப்படி ஓரணாவிலிருந்து ஒன்பதணா வரையில் விலை வைக்கப் பட்டிருந்தன. வார இதழ்கள்-5 சதத்திலிருந்து நான்கணா வரை என்றும் நாளிதழ்கள் காலணா அரையணா ஓரணா என்றும் விலை நிர்ணயக்கப்பட்டிருந்துள்ளன.

விற்பனையைப்பற்றிக் கவனிக்கும்போது 'தினவர்த்த மானி' வார இதழ் 784 படிகள் செலவழிந்துள்ளது. 'சுதேச மித்திரன்' ஓராயிரம் படிகள் விதம் 15 ஆண்டுகள் வரை விற்பனையாகியுள்ளது. 1920 வரையில் 2000 படிகளை எட்டவில்லை என்று சோமலெ 'தமிழ் இதழ்கள்' எனும் தமது நூலில் குறித்துள்ளார். 'லோகோபகாரி'க்கு 2500 கையொப்பக்காரர்கள் இருந்துள்ளனர்! 'ஜனானுகூலன், காலண விலையில் முதலில் 2000 படிகள் விற்பனையாகியது 40 ஆண்டுகள் வரை இது நீடித்து நடைபெற்றது; 5000 படிகள் செலவழிந்தது. 'ஆனந்த போதினி' இதழ் ஓரணா விலையில் 25,000 படிகளுக்கு மேல் விற்பனையாகியுள்ளது. 'தமிழ்நேசன்' முதலில் 1,200 படிகள் விற்பனையாகியது. பின்னர் 1937 முதல் 25,000 லிருந்து 40.000 வரை செலவழிகிறது. 'தமிழ் முரசு' சிங்கப்பூரில் 25,000 க்கு மேல் செலவாகும் நாளிதழாகத் திகழ்கிறது. 'காந்தி' வார இதழ் 25,000 விற்பனையாகியது, பர்மாவில் ''தேசோபகாரி'' 1922 எனும் வார இதழின் ஆசிரியராக இருந்த திருசெல்லம் பிள்ளை ஆறு ஏழு சிறை முறை சென்றிருக்கிறார். 'தேசோ பகாரியின் அச்சுக்கூடம் பறிமுதலாகியது; ஆசிரியரிடம் ரூ. 3000 ஈடுகாணம் கேட்கப்பட்டது! இங்கு 'ரசிகரஞ்சனி' தொண்டன் எனும் இதழ்கள் 1966 இல் தடை செய்யப் பட்டன. காந்தி சுதந்திரச்சங்கு ஆசிரியர்கள் கைது செய்யப் பட்டனர். தேசபக்தன் நாளிதழ் ஈடுகாணம் பறிமுதலாயிற்று 'குடியரசு' 'விடுதலை' இதழ்களும் பல முறை அரசின் கெடு பிடிக்கு 'உள்ளாகியுள்ளன. 'திராவிடநாட்'டின் ஆசிரியர்

எழுதிய கட்டுரைக்காக ரூ 3.000 கட்ட நிர்ப்பந்திக்கப் பட்டார்; சிறையில் அடைக்கப்பட்டார். வ. வே.சு. ஐயரும் தாம் எழுதிய கட்டுரைக்காக 6 மாதம் சிறை தண்டனை அனுபவிக்க வேண்டியதாயிற்று. 'பாரதி' ஆசிரியர் 1930இல் 107வது பிரிவின்படி கைது செய்யப்பட்டு $7\frac{1}{2}$ மாதம் சிறையில் இருந்து வந்தார். 'ஆனந்தவிகடன்' ஆசிரியர் பால சுப்பிரமணியம் தாம் வெளியிட்ட கருத்துப் படத்திற்காக 1987 இல் தமிழகச் சட்ட மன்றத் தலைவரால் குற்றவாளி யெனத் தீர்ப்புக்கூறப்பட்டு, மூன்று மாத கடுங்காவல் சிறை தண்டனையை ஏற்று, மூன்று நாட்களில் விடுவிக்கப் பட்டார்!

இப்படியாகச் சில இதழாசிரியர்கள் ஆங்கிலேய ஆட்சியின் போது தாம் எழுதிய கட்டுரைக்காகச் சிறைப் படுத்தப்பட்டுள்ளனர்; சிறையேகியும் உள்ளனர். தண்டனை கிடைக்கும் என்று அஞ்சிய பாரதி, புதுவைக்கு ஓடி விட்டார்! இந்தியா விடுதலைப் பெற்ற பின்னரும் அறிஞர் அண்ணா, பெரியார் ஈ வே. ரா. முதலியோர் தாம் வெளி யிட்ட கருத்துகளுக்காகத் தண்டிக்கப்பட்டுள்ளனர். எண்ண உரிமையும், எழுத உரிமையும், கருத்து வெளியிட உரிமை யும் வேண்டி இதழாசிரியர்கள் பலர் தொடர்ந்து பாடுபட்டு வருகின்றனர். விளைவு என்னவாயினும் கவலைப்படாமல் எண்ணியதை விளக்கி எழுதி அல்லல் படுகின்றனர்.

**இதழ்களின் நீடித்த வாழ்வு :** தமிழ் இதழ்களின் நீடித்த வாழ்வு பற்றி சென்னை நூல் நிலையச் சங்கம் எடுத்திருந்த அட்டவணை ஆய்வுக் குறிப்புகளைக் கூர்ந்து கவனித்தால், 1867 லிருந்து 1-1-1937 வரை 70 ஆண்டுகளில் மொத்தம் 703 இதழ்கள் வெளி வந்திருப்பதும், அவற்றில் 676 இதழ் கள் தொடங்கப்பட்டதில் 562 வரை நிலைத்து நிற்காமல் மறைவுற்றன என்பது தெரிய வரும். அந்த அட்டவணைப் படி பிறப்பு வீதம் அதிகரிப்பதற்கு ஏற்ப இறப்பு வீதமும் அதிகரித்துக் காணப்படுகிறது! தொடங்கிய இதழ்களில் நின்று போனவை 41 விழுக்காடு வீதமாகும்! தொடங்கப்

பட்ட 393 இதழ்களில் அடுத்த இதழ் வராமலே 55% நின்று போயுள்ளன. என்றாலும், 20 இதழ்கள் 25 தொகுதிகள் வரை நிறுத்தாமல் நடத்தப் பெற்று வந்துள்ளன. 'திருநெல் வேலி டையோஸிஸன் பத்திரிகை இதில் குறிப்பிடத் தக்க ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது!

1937 இல் நிலைத்து நின்ற இதழ்களில் 50, ஐந்தாண்டு களில் 'குழந்தமை'த் தன்மையை அடைந்துள்ளன; 10 25 தொகுதிகளை வெளியிட்டதன் காரணமாக ஒரு தலை முறை 'வாசகர்'களைக் கண்டுள்ளன! இதில் மிகவும் குறிப் பிடத்தக்க உண்மை என்னவென்றால், மொத்தத்தில் அடிப்படை அறிவியல் துறையில்- கணக்கியல், பௌதிகம், வேதியல், உயிரியல், புவியியல், செடியியல், விலங்கியல் போன்ற வகையில் இதழ்கள் வெளியிடப்படவே இல்லை! நவீன பொறியல் குறித்தும், தொழில் நுணுக்கம் குறித்தும் அறிவிக்கும் இதழ்கள் தோன்றவே இல்லை! இரண்டு பழைய விஞ்ஞானத்! துறை இதழ்கள் வெளிவந்துள்ளன; அவற்றுள் ஒன்று பயிர்த் தொழில், அடுத்தது மருத்துவம்!

'சித்தாந்த' இதழ் 1912 லிருந்து 1920 வரை ஒழுங் காக நடைபெற்று வந்துள்ளது என்றும், 'மாதர் போதினி' என்ற பெயரில் 50 தொகுதிகள் வெளியிடப்பட்ட பின்பு (1886-1936) 'கிரகமணி' என்று தனது பெயரை மாற்றிக் கொண்டுள்ளது என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளன. பிழைக்கும் வழி தனது தொகுதி 7-ல் (1936) 'ஞானாபிமானி' என்று பெயர் சூட்டிக்கொண்டது! 1914 இல் தொடங்கப்பட்ட 'சற்குரு' இதழானது 1918 இல் 'பேராசிரியன்' எனப்பெயர் மாறியுள்ளது. 1868 இல் 'அருணோதயம்' துவக்கப்பட்டது. 60 ஆண்டுகளுக்குப் பிறகு இதே பெயரில் மற்றொரு இதழ் வெளியாகியுள்ளது. 1887 இல் தோன்றியது 'விவேக போதினி' 1908 இல் இதே பெயரில் இன்னொரு இதழ் வெளிவந்தது. 1909இல் 'செந்தமிழ்ச் செல்வி' முகிழ்த்தது; அடுத்து 1923 இல் இதே பெயரில் ஒரு இதழ் தொடங்கப் பட்டு இன்று வரை நீடித்து நடைபெற்று வருகிறது! 1919

இல் 'செந்தமிழ்ச் சிந்தாமணி' தோன்றியது; 1924 இல் மற்றொரு இதழ் உதயமாகியது. 1917இல் 'கல்பதரு' எனும் இதழ் வெளிவந்தது; 1922 லும் இதே பெயரில் இன்னொரு இதழ் வெளியாகியது. (See The woes of Tamil Journals Madras Literary Association Memoirs.)

ரெவ். ஜான் மர்டாக்கின் நூல் விவரப் பட்டியலின்படி 1865 ஆம் ஆண்டில் தமிழ் நாட்டில் மொத்தம் 12 இதழ்கள் வெளியாயின. அவைகளுள் 10 கிறிஸ்தவர்களால் நடத்தப் பட்டனவாகும்.

'நற்போதகம்' (1840)-இது முதலில் (Friendly Ins tructor) என்று சுற்றுக் கடித (circular)மாகவும், 1845 முதல் நற் போதகம் 'ஆங்கிலமும் தமிழும்' கலந்தசெய்தித்தாளாக (Bulletin) வும், 1949 பிப்ரவரி முதல் இரு தலைப்புக் கொண்ட தமிழ் மாத இதழாகவும் வெளிவந்துள்ளது. 1974 பிப்ரவரி 22 இல் நற்போதகத்திற்கு 125 ஆம் ஆண்டு விழாக் கொண்டாடப்பட்டு சிறப்பு மலர் வெளியிடப் பட்டது! இடைவெளியில்லாது நடந்துவரும் இதழ்களில், 'நற்போதகம்' இந்தியாவிலேயே முதலிடம் வகிக்கிறது! இது திருநெல்வேலித் திருமண்டில மாத ஏடாக இன்று வரை 148 ஆண்டுகளாக வெளிவந்துக்கொண்டிருக்கும் நீடித்த ஆயுள் பெற்ற கிறிஸ்தவ சமய இதழாகும்!

உதயதாரகை-1841 இல் யாழ்ப்பாணத்தில் தொடங்கப் பட்ட முதல் தமிழ் மாத இதழாகும். பின்னர் இது மாத இருமுறையாக, வார இதழாக மாறி இன்று வரை 147 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

'தேசோபகாரி'-1861 இல் கிறிஸ்தவக் கல்விக் கழகத்தினரால், நாகர்கோயிலிலிருந்து தொடங்கப்பட்டு சித்திரப்படங்களுடன் 127 ஆண்டுகளாக நடத்தப்பட்டு வரும் இதழாகும். 'அருணோதயம்' எனும் இதழ் 1863 முதல் லூத்தரன் மிஷன் சங்கத்தினரால் தரங்கம்பாடியில்

தொடங்கப்பட்டு இன்றுவரை 125 ஆண்டுகளாக நடத்தப் பெற்று வருகிறது.

'கத்தோலிக்கநேசன்' -1876இல் இலங்கையில் தொடங் கப்பட்டகத்தோலிக்கமாதஇருமுறைஇதழாகும். பின்னர்வார இதழாக வளர்ச்சியுற்று இன்று வரை 118 ஆண்டுகளாக தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. 'இந்துசாதனம்' -1889 இல் யாழ்ப்பாணத்தில் வெளியான சைவ சமய இதழாகும்; இன்று வரை 99 ஆண்டுகளாக விடாது நடைபெற்று வருகிறது 'ஜனவிநோதனி' -1870 இல் தொடங்கப்பட்ட மாத இதழ் 20 ஆண்டு காலமாக நடைபெற்றது. 'சுதேச மித்திரன்' -1882 இல் சென்னையில் வார இதழாகத் தொடங்கப்பட்டது. 1889 இல் நாளிதழாகியது. 1908 இல் இதன் வெள்ளி விழாகக் கொண்டாடப்பட்டது. இது, நூறாண்டு கண்ட நாள் இதழாகும். 'விவேக சிந்தாமணி' - 1892 இல் திரு. சி. வி. சாமிநாதையரை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப்பட்ட மாத இதழ் 25 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடை பெற்று வந்துள்ளது 'லோகோபகாரி' -1895 இல் மாத இதழாகத் தொடங்கப்பட்டு, மாத மும்முறையாகி, வார இதழாக வளர்ச்சியுற்றது. இது 20 ஆண்டுகளுக்கு மேல் பலரால் நடத்தப்பெற்று வந்துள்ளது. 'யதார்த்தவசனி' - 1900 இல் தஞ்சையில் தொடங்கப் பட்டது. 27 ஆண்டுகளாக வார இதழாக நடத்தப்பெற்றது 'ஜனானுகூலன்' - 1900 இல் காலானா விலையில் வெளியி டப்பட்ட வார இதழாகும். இது 40 ஆண்டு காலமாகத் தொடர்ந்து வெளிவந்துள்ளது. 'செந்தமிழ்' -1902 இல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளியிடப்பட்ட இலக்கிய மாத இதழ். 86 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தப்பெற்று வருகிறது. 'ஆனந்த போதினி' -1915 முதல் வெளியான இலக்கிய மாத இதழ் 50 ஆண்டுகள் வரை நடைபெற்று, நிறுத்தப்பட்டு விட்டது!

'நவசக்தி' - 1921 இல் திரு. வி. க. வினால் சொந்த மாகத்தொடங்கப்பட்ட மாத இதழ் 20 ஆண்டுகாலம் வரை

அவரால் நடத்தப்பெற்று புகழ்பெற்று விளங்கியது. 1944 வரை பிறரால் நடத்தப்பெற்று நின்றுவிட்டது! 'தமிழ்ப் பொழில்'-தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 1925 முதல் நடத்தப்பெற்று வரும் இலக்கிய மாத இதழ்' 63 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது. 'செந்தமிழ்ச் செல்வி'-1923 முதல் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப்பட்டு வரும் இலக்கிய மாத இதழ் 65 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவருகிறது! 'ஆனந்த விகடன்-'1926 முதல் 62 ஆண்டுகளாக விடாது வெளிவரும் பொழுதுபோக்கு வார இதழாகும். கலைமகள்-1936 முதல் 52 ஆண்டுகளாகத் தொடாந்து வெளியாகும் இலக்கிய மாத இதழாகும், வீரகேசரி-1930 முதல் கொழும் புவிலிருந்து வெளியாகும் நாளிதழ் கடந்த 58 ஆண்டு களாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது! தினமணி-1934 முதல் சென்னையிலிருந்து வெளியாகும் நாளிதழ். 54 ஆண்டுகளாகச் சீராக நடைபெற்றுவரும் நாளிதழாகும், 'தமிழ்நேசன்'-1924 முதல் மலேயாவில் வார இதழாகத் தொடங்கப்பட்டு, 1937 முதல் நாளிதழாக மாற்றப் பட்டுத் தொடர்ந்து 51 ஆண்டுகளாக நடைபெற்று வரும் நாளிதழாகும் 'தமிழ் முரசு-'1935 இல் சிங்கப்பூரில்தொடங் கப்பட்ட வார இதழ் பின்னர் வார மும்முறையாகி நாளி தழாக மலர்ந்து, 53 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடை பெற்று வருகிறது 'ஈழகேசரி'யும், 'தினகர'னும் 1932 முதல் கொழும்புவில் தோற்றுவிக்கப்பட்டு இன்று வரை 56 ஆண்டு களாக நடைபெற்றுவரும் நாளிதழ்களாகும் 'கலைக்கதிர்'-1948 முதல் அறிவியல் கட்டுரைகளை 40 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிட்டுவரும் மாத இதழாகும். கல்கி-1941 முதல் 47 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபொற்றுவரும் வார இதழாகும். 'அமுதசுரபி' 1949- லிருந்து 39 ஆண்டு களாக வெளிவந்து கொண்டிருக்கும் மாத இதழாகும். மஞ்சரி-1948 லிருந்து 41 ஆண்டுகளாக வெளி வரும் மாதத் திரட்டு வெளியீடாகும். 'ஜனசக்தி'-1937 முதல் பொது உடமைக் கட்சியின் மாதஇதழாகத் திரு ப. ஜீவானந்தத்தால்

தொடங்கப்பட்டது. வார இதழாகவும். நாளிதழாகவும் மாறியது; 50 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியாகிறது. சுதந்திரம்-1934-லிருந்து புதுவை. வ. சுப்பையாவினுல் 54 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தப் பெற்று வருகிற வார இதழ் 'தாமரை'- ப. ஜீவானந்தத்தால் நிறுவப்பட்ட இது 29 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிற மாத இதழாகும். 'இராம கிருஷ்ண விஜயம்', இராம கிருஷ்ண மிஷனால் மயிலாப்பூரிலிருந்து 68 ஆண்டுகளாக வெளியிடப்பட்டு வருகிற மாத இதழ் கூரியர்-ஐக்கிய நாடுகளின் பண்பாட்டுத்துறையினால் தமிழில் வெளியிடப்படும் மாத இழாகும். 'விடுதலை'-தன்மான இயக்கத்தினால் தொடர்ந்து வெளியிடப்பட்டு வரும் நாத்திக இதழாகும். முஸ்லீம்முரசு மணிவிளக்கு தொடர்ந்து வெளியாகும் இஸ்லாமிய இதழ்கள் திரு ஜி. சுப்பிரமணியர் 'சுதேசமித்திர'னுக்கு 20 ஆண்டு காலம் ஆசிரியராக இருந்துள்ளார். திரு. சி. சாமிநாதையர் 'சுதேசமித்திர'னில் 10 ஆண்டுகாலம் துணையாசிரியராகவும், 'விவேகசிந்தாமணி'யில் 25 ஆண்டுகாலம் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார் நவசக்திக்குத் திரு. வி. க. 20 ஆண்டுகாலம் ஆசிரியாக இருந்துள்ளார் 'ஆனந்த போதினி'யில் ஆரணி குப்புசாமி முதலியார் 10 ஆண்டுகாலமும் திரு. நாரண துரைக்கண்ணன் 36 ஆண்டுகாலமும் ஆசிரியர்களாக இருந்துள்ளனர்.

'தினமணி'க்குத்திரு. டி. எஸ். சொக்கலிங்கம் 10ஆண்டு காலமாகவும் திரு. ஏ. என். சிவராமன் 40 ஆண்டுகாலமாகவும் தொடர்ந்து ஆசிரியர்களாகப் பணியாற்றியுள்ளனர். 'கலைமகள்' இதழ்க்கு அது தோன்றிய நாள் முதல் கி. வா. ஜ கந்நாதன் ஆசிரியராக இருந்து வருகிறார். நீண்ட காலம் ஓர் இதழிலே ஆசிரியராக இருந்து சிறப்பாக நடத்தி வந்த பெருமை இவருக்கேஉண்டு! திரு.குருசாமி 'விடுதலை'யில் 20 ஆண்டுகளுக்கு மேலும் திரு.கி. விரமணி 5 ஆண்டுகளாகவும்ஆசிரியர்களாகப் பணியாற்றியுள்ளனர். ,குமுதத்திற்கும் திரு.எஸ். ஏ.பி. அண்ணாமலைதொடர்ந்து ஆசிரியராக இருந்து நடத்தி வருகிறார்.

முல்லைச்சரம்பொன்னடியானால்தொடர்ந்து 26 ஆண்டு களாக மாத இதழாக நடத்தப் பெற்று வருகிறது.

திருவாளர்கள் 'வசந்தனும், நாடோடியும், கல்கியும், கண்ணதாசனும், 'சுரதா'வும் 'தென்னரசும் தம் சொந்தப் பெயரில் இதழ்களைத் தொடங்கினார். ஆனால் 'கல்கி' ஒன்றே தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கிறது!

'நற்போதகம்,' 'உதயதாரகை', 'தேசோபகாரி', கத் தோலிக்க நேசன்' எனும் கிறிஸ்தவ இதழ்களின்ஆசிரியர்கள் மாறினாலும்தொடர்ந்து நடை பெற்றுவருகின்றன. இவை போன்று இந்துசாதனமும் சித்தாந்தமும் விடாது நடை பெற்றுவருகிற சைவ சமய இதழ்களாகும். செந்தமிழ் செந் தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில், போன்ற இலக்கிய இதழ் களின் ஆசிரியர்கள் மாறினும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. 'ஆனந்தவிகடனுக்கு ஆசிரியர்கள் மாறினாலும் தொய்வு படாமல் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக் கிறது. 'கல்கி' ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி இறந்த பின்னரும், அவரது மகன் திரு. கி. இராஜேந்திரன் அதற்கு ஆசிரியராகித் தொடர்ந்து நடத்தி வருகிறார். அண்ணா மறைவுற்ற பிறகு 'காஞ்சி' சிறிதுகாலம் நடத்தப் பெற்று நின்று விட்டது.

நாளிதழ்களான 'சுதேசமித்திரன்', 'தமிழ் நேசன்', 'தினமணி' 'தமிழ்முரசு', 'வீரகேசரி', 'ஈழகேசரி' போன் றவைகளுக்கு ஆசிரியர்கள் வெவ்வேறானவர்கள் வந்தும் தொடர்ந்து இடையறாது நடைபெற்று வந்துள்ளன.

உடல் நலத்துறையில் 'நல்வாழ்வு'- புனாவிலிருந்து தொடர்ந்து வெளிவரும் இதழாகும். விஞ்ஞானத்துறையில் 'கலைக்கதிர்' தொய்வுறாது வெளியிடப்பட்டு வருகிறது. இதற்குதிரு.ஜி. தாமோதரம் நெடுங்காலம் ஆசிரியராகஇருந் துள்ளார். இவர் மறைந்தும் 'கலைக்கதிர்' தொடர்ந்து வெளியாகிறது.

1897ஆம் ஆண்டில் வெளியான தமிழ் இதழ்களின் எண்ணிக்கை 49 ஆகும். இவற்றுள் வார இதழ்கள்-17; வார மும்முறை-1 (சுதேசமித்திரன்); மாத மும்முறை- மாதஇருமுறை-10, மூன்று மாதங்களுக்கு ஒரு முறை-1.

1953 இல் தமிழ்நாட்டில் மட்டும் 21 நாளிதழ்கள் வெளிவந்தன. 1960 ஆம் ஆண்டில் 31நாளிதழ்களும் வெளி வந்துள்ளன. (ஆதாரம்: Press in India p. 37, 1972.)

தமிழ்நாட்டில் 1981 இல் வெளியான பலவகை இதழ் களைப்பற்றிமத்தியஅரசுக் குறிப்பு நூல் (The Press in India Page 227) குறித்துள்ளது. அவ்விவரமாவது; நாளிதழ்கள் 82மாதஇதழ்கள் 642வாரஇதழ்கள்143வாரஇருமுறைஇதழ் கள் 161; மாத இருமுறை இதழ்கள் 5;காலாண்டு இதழ்கள் 40; ஆண்டு இதழ்கள் 9; ஆக மொத்தம் ஓராண்டில் 1166 இதழ்கள் வெளியாகியுள்ளன. (விவரம்: ''எண்பத்தொன் றில் தமிழ்''- கரு. நாகராஜன், உலகத் தமிழாராய்ச்சி நிறு வனம், சென்னை.)

இனி, இலங்கையில் தமிழ் இதழ்களின் வளர்ச்சி பற்றி யும் தெரிந்து கொள்வோம்.

1841 முதல் 1972 வரை ஈழத்தில் 242 தமிழ் இதழ் கள் வெளிவந்துள்ளதாக இலங்கைத் தேசிய சுவடிகள் திணைக்களப் பதிவேடுகள் கூறுகின்றன. ஆனால், கடந்த பத்து ஆண்டுகளில் இதழ்களின் வளர்ச்சி மிகத் துரித கதி யடைந்துள்ளதாகக் கூறப்படுகிறது.

''1981இல் வெளிவந்த சஞ்சிகைகளில் இடதுசாரி அல்லது முற்போக்கு இயக்கக் கருத்துக்களை முன்னிறுத்தும் கலை இலக்கிய ஏடுகளாக அலை, அனல், கதம்பம், தீர்த்தக் கரை, மல்லிகை முதலியவற்றை முக்கியமாகக் கூறலாம்.

இடது சாரி இதழ்கள்-உதய சூரியன் செங்கொடி இலங் கையில் தமிழ் டாக்டர். இ. பாலசுந்தரம் கட்டுரை எண்ப

தில் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பக்கம் 783-810.

1982 இல் 178 நாளிதழ்கள் தமிழில் வெளி வந்துள்ளன திங்களிதழ்கள் 377 வெளியாகியுள்ளன. ''பருவ இதழ் களுள் (periodicals) திங்களிதழ்களே எண்ணிக்கையில் மிகுந்து காணப்படுகின்றன. திங்களிதழ்களின் பெயர்களை நோக்கின் அவை அனைத்தும் தமிழிலேயே இல்லை என்ற உண்மை புலனாகும். மாறாக முழுமையும் ஆங்கிலத் திலோ, அல்லது வடமொழியிலோ அமைந்துள்ள பெயர் களும் பல உள'' என்றும், ''திங்களிதழ்களில் அரசும், இயக்கங்களும், சமூகப் பணியாற்றும் குழுக்களும் நடத்தும் இதழ்களைக் காட்டிலும் தனியார் நடத்தும் இதழ்களின் எண்ணிக்கை அளவில் மிகுந்துள்ளது'' என்றும் கணித்துக் கூறப்பட்டுள்ளது.

''திங்களிதழ்களில் சுமார் ஆறில் ஒரு பங்கு இதழ்கள் (17%) சமய இதழ்களாக உள்ளன; இந்து சமய இதழ்கள் இதில் முதலிடம் பெறுகின்றன. இந்து சமய இதழ்கள் 40% இவ்வகையில் வெளியாகின்றன: இஸ்லாமிய, கிறிஸ்தவ சமயங்களைச் சார்ந்தவை சுமார் 20 இதழ்கள் வெளியா கின்றன. தொழிலாளர் இயக்க இதழ்கள் சுமார் 20; மகளிர் சாதி (இனம்) இதழ்கள் சுமார் 20.மகளிர் இதழ்கள் தமிழில் குறைவாகவே வெளியாகின்றன! குழந்தைகளுக் காக மாத இதழ்கள் மிகக் குறைந்த அளவே வெளியிடப் படுகின்றன. இளைஞர்களுக்கும் மாணவர்களுக்கும் உரிய இதழ்கள் சுமார் ஐந்து விழுக்காடு (5%) அளவிற்கு வெளியா கின்றன. பிற தனித்துறைகளைச் சார்ந்த இதழ்கள் மிகக் குறைந்த அளவே உள்ளன. குறிப்பாக அறிவியல் குறித்த இதழ்கள் மிகுந்த எண்ணிக்கையில் வெளிவரவில்லை என்பது நோக்கத்தக்கது. என்று திரு. மா. சற்குணம் மேற்படி தமது கட்டுரையில் ஆய்ந்து கூறியுள்ளார்.

15 கவிதை இலக்கிய இதழ்களும் வெளி வருகின்றன.

இனி இந்திய அரசின் செய்தி மற்றும் ஒலி பரப்புத்துறையினர் 1982 இல் அளிக்கும் விவரமாவது. 1980இல் 19 இந்தியமொழிகளில் வெளிவந்துள்ள நாளிதழ்கள் மொத்தம் 1173. இவற்றுள் இந்தியமொழி இதழ்கள்-367; உருது 120; மராத்தி -117; ஆங்கிலம்-102; மலையாளம்-95; தமிழ் மொழியில் - 92 நாளிதழ்கள் அமைகின்றன. மிகக் குறைந்த அளவில் வெளிவருவன சமஸ்கிருதம்-2, அஸ்ஸாமிஸ்-3 மொழி நாளிதழ்களாகும்! (India Govt Information Broad Casting Ministry, 1980).

நம் நாட்டில் இதழ்களின் எண்ணிக்கையைப் பற்றியும், விற்பனையைப் பற்றியும் கையொப்பக் காரர்களைப் பற்றியும் ஒருவாறு தெரிந்தவரை குறிக்கப்பட்டுள்ளன. இப்போது ஒப்பு நோக்கிற்காகப் பிறநாடுகளில் வெளியாகும் இதழ்களின் சந்தாதாரர்களின் விவரத்தை அறிந்து கொள்வோம்.

அமெரிக்காவில் உள்ள கீழ்க்கண்ட இதழ்களின் சந்தா கள்தாரர் சாட்டர்டே ஈவினிங் போஸ்ட்-21,00, 098; 'லேடிஸ்ஹோம் ஜர்னல்'-17, 99, 002; 'பிக்டோரியல் ரிவ்யூ' 17, 65, 480: 'அமெரிக்கன் மாகசீன்' 16, 04, 433, 'உமன்ஸ் ஹோம் கம்பானியன்'-14, 67, 509.

இங்கிலாந்திலுள்ள புகழ்பெற்ற இதழ்களின் சந்தா தாரர்தொகை வருமாறு: 'நியூஸ் ஆவ்தி ஒரல்டு' 30,00,000 'டெய்லி மிரர்'- 10,02,882; 'டெய்லி கிரானிக்கல்'- 10,00,000; ஜான் புல். 7,16, 255 'பஞ்ச்'- 10,00,000; 'ஆன்சர்ஸ்'-4,78,621; 'லேடிஸ் ஜர்னல்' 4,42,611.

ஆங்கில நாளிதழான இந்து' 1878 இல் 80 படிகளே அச்சிடப்பட்டன. படிப்படியாக வளர்ச்சியுற்று 100 ஆண்டிற்குள் 1978 இல் 2,81,000 படிகள் அச்சடிக்கப்பட்டது! 1987 இல் 4,21,000 படிகளாக உயர்ந்துள்ளது.

**நடை :** தமிழ் இதழ்களின் ஆசிரியர்களாக முற்காலத்தில் அமர்ந்திருந்தவர்களுக்குத் தமிழ் மரபு நன்கு தெரிந்திருந்தது. தமிழ் மரபு குன்றாமல் அவர்கள் எழுதிவந்தனர். தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர்களாக இருந்தவர்களும் தமிழ் மரபை ஒட்டியே எழுதினர்; தமிழ் மரபை மீறி எழுதினால் தமிழ்க் கற்றவர்களிடத்திலிருந்து எதிர்ப்புக் கிளம்பும் என்று அவர்கள் அஞ்சினர்! தமிழ் இதழாசிரியர்களாக இருந்த தமிழ்ப் புலவர்களின் தமிழ் நடை இலக்கண வரம்பு மீறாமலும் அதே நேரத்தில் கல்லாதவர்களும் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் கடின நடையைத் தவிர்த்து எளிய நடையையே கையாளப்பட்டிருந்தன. ஓரளவு பண்டித் நடையும் பொது நடையும் விரவியே முற்காலத் தமிழ் இதழ்கள் வெளியிடப்பட்டன. 'முற்காலத் தமிழ் இதழ்கள்' என்ற தலைப்பில் இந்நூலில் ஆங்காங்கே தமிழ் இதழ்களின் நடைகள் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன.

'சுதேச மித்திர'னைத் தோற்றுவித்த திரு. ஜி. சுப்பிரமணிய ஐயருக்கு, ஆங்கில அறிவும், அரசியலறிவும் இருந்த அளவிற்குத் தமிழ்ப் புலமை இருந்ததாகத் தெரியவில்லை! அவர் ஆங்கிலச் சொற்களையும், வடமொழிச் சொற்களையும் அப்படி அப்படியே தமிழாக்காமலே பெய்து தமது நடையை அமைத்துள்ளார். ஆனால் தமிழ் இதழாசிரியராக வந்த திரு. வி. கலியாண சுந்தரனார், தமது நடை திருந்தி அமைந்ததற்குரிய காரணங்களைத் தெரிவித்துள்ளார்.

''சோமசுந்தர நாயகரின் 'வடமொழிப் பெய்வும்' சபாபதி நாவலரின் 'எதுகை மோனை இசைவும் என்னுள்ளத்தில் நின்று பரிணமித்தன! அப்பரிணாமத்தின் நடிப்பு 'கதிரைவேற் பிள்ளையின் சரிதத்'தின் நடையாக அமைந்தது!...

'தேசபக்த'னுக் கென்று ஒரு தனி நடைகொண்டேன் சிறுசிறு வாக்கியங்கள் அமைக்கலானேன். எளிமையில் கருத்

துகள் விளங்கும் முறையைப் பின்பற்றினேன். அந்நடையை நாடோறும் எழுதி எழுதிப்பண்பட்டமையால் அதுவே எனக்குரிய இயற்கையாகியது. பழையத்தொடர் மொழி களும் கோப்பு மொழிகளும் என்னுள்ளேயே ஒடுங்கின! சமயம் நேர்ந்துழிச் சில வேளைகளில் அவை தலை காட்டும். திரு. வி. க. வாழ்க்கை குறிப்புகள்-பக். 267.

திரு. வி. க. தமிழ் இதழ் உலகில் புகுவதற்கு முன்பு, ''அந்நாளில் நாட்டு மொழிப் பத்திரிகைகளில் அயல்மொழி நாற்றம் வீசும்! அரசியல் குறியீடுகள் அந்நியத்தில் அப் படியே பொறிக்கப்படும்!!

'தேச பக்தன்' பத்திரிகையுலகில் புரட்சி செய்தான். 'தேச பக்தன்' தமிழாக்கிய அரசியல் சொற்களும் சொற் றொடர்களும் குறியீடுகளும் இப்பொழுது பத்திரிகைகளிலும் மேடைகளிலும் பிறவிடங்களிலும் ஏற்ற முற்று அரசு புரிதல் வெள்ளிடை மலை! 'தேச பக்தன்' தமிழரை அந்நிய மோகத்தினின்றும் விடுவித்தான்'' என்று அவரே மேற்படி நூலில் (பக். 268) குறித்துள்ளார்.

திரு. வி. க. வின் எழுத்து நடையில் கொதிப்பு அதிகம் என்று ஆங்கிலேய ஆளுநராக இருந்த வெலிங்டனே சுட்டிக் காட்டி எச்சரித்துள்ளான்!

எழுதுவதில் 'தமிழ்நாடு' ஒரு புதிய நடையைத் தோற்று வித்தது! பேசும் முறையையே ஓரளவு இலக்கணத்துடன் அமைத்து நடையில் உயிரும் வேகமும் ததும்பி நிற்கும்படிச் செய்தது. அது மக்களுக்குப்பெரிதும் பிடித்துப் புகழ் பெற்று, 'மித்திர'னுக்குப் போட்டியாகச் சிறந்து விளங்கியது.

'சுதந்திரச் சங்கு' இதழில் சூடான நடை கையாளப் பட்டது! தீவிரமான கருத்துப்படம் வெளியிடப்பட்டது; விடுதலைப் போர்க்காலத்தில் 'சுதந்திரச்சங்கு' பதினாயிரக் கணக்கில் செலவாயிற்று!

'ஜயபாரதி'யும் விறுவிறுப்பான நடையைக் கொண்டு காலணா விலையில், நாட்டுப்பற்றுள்ள விளம்பரங்களைத் தவிர பிறவற்றை வெளியிடாது, சில ஆண்டுகள் வரை நடைபெற்றது. 'காந்தி' இதழும் துடிதுடிப்பான வீரமூட்டக் கூடிய சொற்களைக்கொண்ட நடையைக் கையாண்டது; வெள்ளை அரசாங்கத்தை எதிர்க்கும் போர்ப் படையாகத் திகழ்ந்தது! இது பல முறை ஈடுகாணம் கட்டும்படி கோரப் பட்டது. இதன் ஆசிரியர் தம் எழுத்திற்காகச் சிறை தண்டனை அடைந்துள்ளார்.

''**உரை நடைக்குச் சொற்கள் தான் அடிப்படை** என்றாலும், வெறும் சொற்களால் மட்டும் ஜீவனுள்ள கலை நயமான நடை அமைந்து விடுவதில்லை! **கருத்தோட்டம், சொல் சேர்க்கை, ஒலி நயம், வேகம், அழுத்தம் முதலிய அம்சங்களும் அதில் அடங்கியிருக்கும். இலக்கியப்பயிற்சி, சிந்தனைத்திறம், கற்பனைவளம், அனுபவம், பார்வைவீச்சு, மனப்பண்பு இவற்றுக்கு ஏற்பவே நடை நயமும் அமைகிறது.''** என்று திரு. **வல்லிக்கண்ணன்,** தமது ''பாரதிக்குப்பின் தமிழ் நடை'' எனும் நூலின் 12 ஆம் பக்கத்தில் கூறியிருப்பது இங்கு நினைந்து போற்றத் தக்கதாகும்.

திரு. சுப்பிரமணிய பாரதியார் 'சுதேச மித்திர'னில் துணையாசிரியராகவும், 'இந்தியா,' மகாராணி முதலிய இதழ்களின் ஆசிரியராகவும் இருந்தவர். இவரது நடையைப் பற்றி திரு. வல்லிக்கண்ணன் கூறுவதைக் கவனிப்போம். மேலும், அவர் தமது நூலில் கூறியிருப்பதாவது : ''**பாரதியின் உரை நடை ஒரே தரத்ததாக அமைந்திருக்க வில்லை.** பாரதியின் கட்டுரைத் தொகுதிகள் அனைத்தையும் பொறுமையோடு படிக்கிறவர்கள் அவரது வசனநடையின் குறைபாடுகளையும் எளிதில் உணர முடியும்!

**பாரதியின் கட்டுரைகள் எல்லாமே இலக்கியத் தரமான கட்டுரைகள் அல்ல ஒவ்வொன்றும் முழுவடிவம் பெற்ற கட்டுரையாகவும் அமையவில்லை.** கட்டுரைகள் என்று குறிப்பிடப்

பெற்றுள்ளவற்றில் பலவும் சிந்தனைச் சிதறல்களாகவும், எண்ணக் கோவைகளாகவும், கருத்து உதிரிகளாகவும் தான் காணப்படுகின்றன!''

திரு. **ரா. ஸ்ரீ. தேசிகன்** எம். ஏ. என்பவர் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; வைதீகராகக் காட்சி யளித்தவர்; வைணவத்தில் ஊறித்திளைத்தவர். அவர், ''பாரதியின் கவிதையில் ஒரு தனித்த சொல்லாட்சியை நாம் உணர்ந்தாலும், **அவருக்கு உரை நடையில் அதிக பயிற்சி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.** அவருடைய வசன நூல்கள் இவ்வுண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன'' என்று ஆய்ந்து செப்பியிருப்பதும் இங்கு உன்னத்தக்கதாகும்.

பண்டித நடையைக் கொண்டிருந்த இதழ்கள், நாளடை வில் புலமை நடையைக் குறைத்துக் கொண்டு, பொதுமக் கள் விரும்பிப் படித்து மகிழக்கூடிய நடையை வளர்த்து விட்டிருக்கின்றன.

மிக நீண்ட சொற்றொடர்கள் குறைந்து, சிறிய தொடர் களைக் கொண்ட சிறுசிறு வாக்கியங்களில் கருத்துகளைத் தெரிவிப்பது நலம் என்று கருதப்பட்டது. தமிழ் இதழ்களில் இலக்கிய இதழ்களாகத் தோன்றியவை பொறுக்கு விதை மணிகளாகக் கருதப்பட்டன. ''இவ்விலக்கிய இதழ்கள் புலமை நிலையைத் தாண்டிப் புதுமை நிலைக்கு வந்து சேர அரை நூற்றாண்டுகாலம் இடையில் ஓடியிருக்கிறது!'' என்று திரு. **இரா. கோதண்ட பாணி** எம். ஏ. தமது **''இதழியல்'' (1980)** எனும் நூலில் தெரிவித்துள்ளார்.

''ஐம்பது ஆண்டுகட்கு முன்பிருந்த தமிழ் நாள், வார இதழ்களின் நடையினின்று இன்றைய நடை மாறியிருப்பதை அறிய முடிகிறது. மாற்றத்தை விரும்பிய தமிழ்ச் சமுதாய மும் தமிழ் இயக்கங்களும்இதற்குரிய காரணங்களாகும்'' -ஷை பக்- 206. திரு. சி. வி. சாமிநாதய்யர் 'சுதேச மித்திர'னில் துணையாசிரியராகப் பணியாற்றிய போது, 'சுதேசமித்திர' னின் தமிழ் நடையில் இலக்கியத் தமிழ்ச் செல்வாக்குப்

பெற்றிருந்ததாகக் கூறப்படுகிறது! பொதுவாகச் 'சுதேச மித்திர'னில், 'இந்து' இதழில் வெளிவருவதே மொழி பெயர்க்கப்பட்டுத் தரப்பட்டது என்றும், இதனால் 'சுதேச மித்திரன்' 'இந்து'வின் எதிரொலி என்றும் அரசாங்க அதிகாரியின் ரகசிய குறிப்பில் (G. O. No-736 Confidential dated 6-6-1898 இல்) குறிப்பிடப்பட்டிருக்கிறது!

1920-21 இல் 'நவசக்தி' வார இதழின் ஆசிரியராக இருந்த திரு. வி. கலியாண சுந்தரனாரைப் பற்றி திரு. ஜனக சங்கர கண்ணப்பர் 'திராவிடன்' நாளிதழில் தலையங் கமும் சிறப்புக்கட்டுரையும் எழுதியுள்ளார். 1925-30ஆண்டு களுக்கு இடைப்பட்ட காலத்தில் திரு. வி. க.வைப் பற்றிப் பெரியார் ஈ. வே. ரா. 'குடியரசு' வார இதழில் தலையங்கங் களும் சிறப்புக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். 'குமரன்' ஆசிரியரான சொ. முருகப்பாவிற்கும் 'ஊழியன்' ஆசிரிய ரான திரு. இராய. சொக்கலிங்கத்திற்கும் தம் இதழ்களில் கருத்துப் போர் நடைபெற்றுள்ளது.

**நாளிதழ்** என்பதற்குப் பொருள் அன்றாடம் மலரும் மலர் இதழாகக் கொள்ளலாம். மக்களுக்குத் தேவையான செய்திகளை உடனுக்குடன் அளிப்பதே இதழ்களின் பொதுத் தன்மையாகும்.

தமிழில் 1889 இல் தோன்றிய நாளிதழான 'சுதேச மித்திரன்' 1916 வரை 27 ஆண்டுக்காலம் தனக்கு எதிராக எந்தப் போட்டியும் இல்லாமல் தனித்து நின்று வெற்றிக் கொண்டுள்ளது! நாட்டில் காணும் சாதி வெறி, சமயப் பொய்ம்மைகளைச் சாடும் வகையில் 1916 இல் 'திரா விடன்' எனும் இரண்டாவது நாளிதழ் வெளியாகியது. 1917 இல் 'தேசபக்தன்' எனும் மூன்றாவது நாளிதழ் திரு. வி. க. வை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த தேசீய இதழா கும். இதற்குப் பின்னர் வெளிவந்த நாளிதழ்கள் எண் ணிக்கை மிகக் குறைவேயாகும். இவற்றுள் சிலவற்றைத் தவிர மற்றவை மறைந்து போயின!

தமிழ் நாட்டில் மாநிலக்கட்சிகளின் தோற்றத்தின் வளர்ச்சியால், இதழ்களின் பெருக்கம் மிகுந்தன. இவ்வாறே பொழுது போக்கு, கலை, இலக்கியம், திரைப் படம் போன்றவற்றின் தாக்கத்தாலும் பல துறை பற்றிய இதழ்கள் பெருகின. இவ்வகையில் 1953 இல் தமிழ்நாட்டில் மட்டும் 21 நாளிதழ்கள் வெளிவந்தன; 1960 இல் 31 நாளி தழ்களும், 1971 இல் 97 நாளிதழ்களும் வெளிவந்துள்ளன. (Press in India, P. 37, 1972) இவ்விதழ்களில் பலவும் நீடித்திருக்கவில்லை! பல இடங்களில் நின்று நின்று வந்து கடைசியில் மறைந்து போயுள்ளன.

1982 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தமிழில் 90 க்கு மேற்பட்ட நாளிதழ்கள் வெளிவந்துள்ளன. ஆனால் இவற்றில் 21 இதழ்களின் முகவரியே அறிய இல்லாமல் போய்விட்டன என்றும், பலவற்றை நேரில் காணவும் இயவில்லை என்றும், கன்னிமாரா நூலகத்தில் இவ்விதழ் களில் சிலவற்றையே காணமுடிகிறது என்றும் தமிழ் நாளிதழ் களை ஆராய்ந்த திரு. **வே. ரா. மாதவன்** ''எண்பத்திரண் டில் தமிழ்'' எனும் நூலில் ஒரு கட்டுரையில் கூறியுள்ளார்.

**உள்ளடக்கம் : சுதேசமித்திரன்**- நாளிதழ் 19 அங்குல நீளமும் 12 அங்குல அகலமும் கொண்டதாக அமைந் திருந்தது. 8 பக்கங்களில் முதலிரண்டு பக்கங்கள் விளம்பரங் களைக் கொண்டிருந்தன. அடுத்த இரண்டு பக்கங்களில் சோதிடக் குறிப்புகளும் செய்திகளும் செய்திக் குறிப்புகளும் இடம் பெற்றிருந்தன. பிற பக்கங்களில் உலகச் செய்திகள் நாட்டு நடப்புகள் அரசாங்கத்தின் பொருந்தாச் செயல் பற்றிய கண்டனக் கட்டுரைகள், பழமொழிகள் முதலானவை வெளிவந்தன. 8 பக்கங்களைக் கொண்டிருந்த 'சுதேசமித்திரன்' 8 காலச் (பத்தி) செய்திகளுடன் தலை யங்கம் முதலியவற்றைத் தாங்கிவந்தது. தீவிரவாதிகளின் கருத்து 'மித்திர'னால் ஆதரிக்கப்பட வில்லை! நிதானமான வைதீகப் போக்கையே அது கொண்டிருந்தது!

'சுதேசமித்திர'னில் தொடக்க காலத்தில் ஏராளமான ஆங்கிலச் சொற்களும் வடமொழிச் சொற்களும் பயன் படுத்தப்பட்டன. பிற்காலத்தில் மிகுதியான வடமொழிச் சொற்கள் விரவிக்கிடந்தன!

**திராவிடன்—** நீதிக்கட்சியின் சார்பில் 1916 முதல் 1931 வரை நடத்தப்பெற்ற தமிழ் நாளிதழ்; 8 பக்கங்கள் கொண்டிருந்தது. நாட்டு நடப்புகள், உலகச் செய்திகள், புராணங்கள், சாதிச் சண்டைகள், சீர்திருத்தம் பற்றிய குறிப்புகள் ஆகியன அடங்கி வெளிவந்தது. இது செய்தியும் கருத்தும் கொண்ட இதழாகத் திகழ்ந்தது; சமுதாய விழிப் புணர்ச்சிக்காகத் தொண்டு செய்தது இதில் கண்ணோட்டம், நிருபசாரம் போன்ற பகுதிகள் சிறப்பாக வெளியிடப் பட்டுள்ளன.

''சைமன் கமிஷ''னைப் பகிஷ்காரம் செய்வதற்கு அறி குறியாகச் 'சைமன் கமிஷன்' சம்பந்தப்பட்ட எந்த நிகழ்ச்சி களையும் வெளியிடுவதில்லை என்று தேசீய பத்திரிகைகள் முடிவு செய்தன...

'ஹிந்து' சென்னை அரசாங்கத்தார் 'சைமன் கமிஷ' னுக்குச் சமர்ப்பித்திருக்கும் யாதாஸ்தை வெளியிட்டிருக்கின் றது'சுதேசமித்திரன்' தன் இதழில் 'சைமன் கமிஷன்'அங்கத் தவர்கள் சென்னைத் துறைமுகத்தில் இறங்கும் காட்சியின் படத்தை வெளியிட்டிருக்கின்றது! இதுதான் 'சைமன் கமிஷன்' பகிஷ்காரமா? நல்ல பகிஷ்காரம்; நல்ல பகிஷ் காரம்!''-என்று 'திராவிடன்' (22-2-1920) இதழில் கேலியாகக் குறிக்கப்பட்டுள்ளது.

**தேசபக்தன்** இதழ்க்குத் திரு. வி. க 1917 முதல் 2½ ஆண்டுகள் வரை ஆசிரியராக இருந்தார். 10 பக்கங்கள் கொண்டு இது வெளியாகியது. சனிக்கிழமைகளில் மட்டும் 12 பக்கங்களையும், தொழிலாளர் அனுபந்தம் 4 பக்கங்கள் கொண்ட தனிப்பிரிவையும் கொண்டு வெளிவந்தது. தலையங்கம், துணைத்தலையங்கம், முக்கியமான செய்

திகள், அரிமா நோக்கு என்னும் தலைப்பில் திறனாய்ந்து கூறப்படும்.

'தேசபக்தன்' பக்கம் ஒன்றுக்கு 5 பத்திகள் கொண்டிருந்தது. தலையங்கங்களைத் திரு. வி. க. ஆசிரியக் கருத்து அல்லது, ஆசிரியக் கட்டுரை என்றே குறிப்பார்.

''தமிழ் நாட்டில் 'தேசபக்தன்' தான் தேசீய உணர்ச்சியை நேரிய முறையில் தமிழ்ப் பண்போடு கலந்து ஊட்டி வந்தது'' என்று வெ. **திரு. சாமிநாத சர்மா**, 'தேசபக்த'னில் துணையாசிரியராக இருந்தவர், கூறியுள்ளார்.

திரு.வி.க 'தேசபக்த'னில் வெளியான தம்முடைய தலையங்கங்களில் பலவற்றைத்தொகுத்துத்**தேசபக்தாமிர்தம்** (1919) என்னும் முதல் தலையங்க நூலாக வெளியிட்டுள்ளார் தமிழில்.

''தற்காலமுள்ள இந்திய ஆட்சிமுறையில் தருமமில்லை என்பது எமது அனுபவத்திற் பெற்ற உண்மை. மற்றவர் எம்மை என்ன செய்யினுஞ் செய்க. நாம் உண்மைக்கு மாறாக நடக்க மாட்டோம். மனச் சான்றுக்கு விரோதமாக ஒழுகமாட்டோம். தற்கால ஆட்சி முறையில், மனித தருமமில்லை என்பதை எழுத எமது மனச் சான்று கூறுகிறது. இதைத் தடுக்க அநாகரிகச் சட்டங்களிருப்பினும் அவற்றை யாம் பொருட்படுத்த மாட்டோம்''. இது திரு. வி. க. 'தேசபக்தன்' 1-4-1920 இல் எழுதியுள்ள தலையங்கத்தில் கண்டிருக்கும் ஒரு பகுதியாகும்.

திரு. வி. க. 'தேசபக்த'னில் நாட்டுப்பற்று, மொழிப்பற்று ஆகியவற்றைப் பொது மக்கள் பெற்றுச் சிறக்கும் வகையில் தொண்டாற்றினார். இலக்கியம், சமுதாயம், சமயம் பற்றிய தனிக் கட்டுரைகளைக் கொண்டு மக்கள் அறிவை வளர்க்க முற்பட்டார். தொழிலாளர் நலனுக்கெனச் சிறப்புப் பகுதிகளைக் கொண்டு 'தேசபக்தன்' இதற்கு முன் எந்த நாளிதழும் செய்யாத சாதனை புரிந்துள்ளது. காலத்தோடு ஒட்டி புதுப் புதுச் சொற்களைப் படைத்து

மக்களை ஏற்கச் செய்தது; தமிழ் இதழுலகில் புரட்சி செய்து நல்ல தமிழுடன் தேசிய உணர்வைக் கலந்து ஊட்டியது! திரு. வி. க. வின் 'தேச பக்த'னின் முதல் பக்கம் நாள் தோறும் ஏதேனும் ஒரு வகையில் மாற்றம் கொண்டு புது மையாக வெளிவந்தது!

''அன்றாடக் கொச்சைத் தமிழையே எழுத்துத் தமிழாக்கிவிடச் சிலர் முயன்று வந்த காலத்தில், இலக்கண வரம்புக்குட்பட்ட எளிய தமிழே எழுத்துத் தமிழாகவும் பேச்சுத் தமிழாகவும் அமைய வழிவகுத்த பெருமை திரு. வி. க. வுக்கே உண்டு!'' என்று **திரு. மா. ரா. இளங் கோவன்** எம். ஏ. தமது **முதல் நாளிதழ்கள் மூன்று** எனும் நூலின் 170 ஆம் பக்கத்தில் கூறியிருப்பது போற்றத் தக்கதாகும்.

கருத்துப்படம், சிரிப்புப் பகுதி, சாணக்கியன் சொல், நாள்தோறும் படம், தினப்பலன் ஆகியனவற்றைக் கொண்டு **தினத்தந்தி** வெளி வருகிறது. பொது வாழ்க்கையிலும், தனி வாழ்க்கையிலும் ஏற்படும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி களும், விபத்துக்களும், குற்றங்களும், நாட்டு நடப்புகளும், விளையாட்டு போட்டி, பந்தயம், லாட்டரி சீட்டு, தொடர் கதைகள், படக் கதைகள் போன்றவையும் 'தினத்தந்தி'யில் அகத்தியம் இடம் பெறுகின்றன.

**தினமணி**யின் வெளித் தோற்ற அமைப்பும், பக்க அமைப்பும், முதன்மைச் செய்திகளுக்கு அளிக்கப்படும் இடமும், தலையங்கமும், கட்டுரைகளும் ஒரு முறையான வடிவ அமைப்பைப் பெற்று பொலிவுடன் திகழ்கின்றன.

மதுரையிலிருந்து **மதுரை மணி**யும், நாகர்கோவி லிருந்து **குமரி முரசும் வஞ்சி நாடும்** கோவையிலிருந்து **நவ இந்தியா**வும், அவ்வப் பகுதியின் செய்திகளை அதிக மாகக் கொண்டு வெளியிடப்பட்டு வருகின்றன **தீக்கதிர்**— இந்தியக் கம்யூ னிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழுவின் சார்பில் வெளிவரும் நாளிதழ். தலையங்கமும்,

கட்சிச் சார்பான கட்டுரைகளும், தொழிற் சங்கச் செய்திகளும் நாள்தோறும் இதில் வெளியிடப்படுகின்றன.

நாள்தோறும் வெளிவரும் இதழ்கள் 'தினமணி' 'தினசரி' 'தினகரன்' 'தினத்தந்தி' தினச்சுடர்' 'தினமலர்' 'தினபதி' இதில், 'தினமணியும்' 'தினத்தந்தியும் 'தினகரனும்' காலையில் வெளிவருகின்றன. பிற்பகல் எனும் இதழ் இரண்டு பக்கங்களைக் கொண்டு, கோவையிலிருந்து பிற்பகலில் 10,000 படிகள் அச்சடிக்கப்பட்டு வெளியாகிறது. மாலையில்- 'மாலை முரசு', 'மாலை மலர்' வெளியாகின்றன 'தினமணி', 'இனமணி,' 'மதுரை மணி', 'தமிழ் மணி' என்பவை 'மணி' என்றும் பின்னொட்டைப் பெற்றுள்ளன. 'மக்கள் குரல்', நீதியின் குரல்' என்பவை 'குரல்' எனும் பின்னொட்டைக் கொண்டுள்ளன.

'தினத்தந்தியும்,' 'மாலைமுரசும்' மாவட்டந்தோறும் வெளியிடப்படுகின்றன. 'தினமணி' சென்னை, மதுரை எனும் இரண்டு இடங்களில் இருந்தும், 'தினமலர்' திருநெல்வேலி, சென்னை. திருச்சி, மதுரை ஆகிய நான்கு இடங்களிலிருந்தும் 'தினகரன்'- சென்னை, கோவை, மதுரை, திருச்சி ஆகிய நான்கு இடங்களில் இருந்தும் வெளிவருகின்றன.

வட நாட்டில் பம்பாயிலிருந்து **மராத்திய முரசு எனும்** நாளேடு வெளியாகிறது. கர்நாடகத்தில் பங்களூரிலிருந்து **தினச்சுடர்** வெளியிடப்படுகிறது.

பொதுவாக — கொலை, கொள்ளை, சாவு, விபத்து போன்ற விறுவிறுப்பான செய்திகளை வெளியிடும் முறையில் எல்லா நாள் இதழ்களும் ஒன்று போலவே அமைந்து காணப்படுகின்றன!

நாளொன்றுக்கு 1) 50, 000 படிகளுக்குமேல் செலவழியும் நாளேடுகள் பெரிய இதழ்கள் (Big News Papers) என்றும், 2) 15,000 க்கு மேல் 50,000 க்குள் செலவாவது நடுத்தர இதழ்கள் (Medium News PaPers) என்றும் 15,000 படிகள் வரை செலவாவது சிறிய இதழ்கள் (Small News Papers) என்றும் அழைக்கப்படுகின்றன.

முதல் வகைக்கு 'தினத்தந்தி'யும் 'தினமணியும்' இரண்டாவது வகைக்கு 'மாலைமுர'சும், 'தினகரனும், 'தினமலரும்' மூன்றாவதுவகைக்கு 'தமிழ்நேசன்' தமிழ்முரசு' 'முரசொலி'யும் 'விடுதலை'யும் மக்கள்குரல், 'மாலைமலர்' 'ஜனசக்தி' முதலியவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

புதிய செய்திகளை முந்தித்தருவதே நாளிதழ்களின் தனிச்சிறப்பாகும்.

'சுதேச மித்திரன்', 'தினமணி', 'தினமலர்', 'மக்கள் குரல்' போன்றவை மிதவாத போக்குடையவை 'ஜனசக்தி', 'தீக்கதிர்', 'விடுதலை' போன்றவை தீவிரவாத போக்கு டையவை. 'தினத்தந்தி'யும் 'மாலை முரசு'ம் நடுத்தர போக் குடையவை 'தினமல'ரும் மக்கள் குரலும் அறிவு ஜீவிகளின் நலன்களைக் கோருபவவை! 'தினமணி' 'தினத்தந்தி' போன்றவை அதிக பக்கங்களுடன் குறைந்த விலையில் வெளியிடப்படுகின்றன; வெள்ளிமலர், ஞாயிறு மலர் இவை கள் இணைப்பாகத் தரப்படுகின்றது 'மாலைமுரசு' படங்கள் நிறைந்து வெளியாகிறது காலைப் பதிப்பில் 'தினத்தந்தி'யும் மாலைப்பதிப்பில் 'மாலை முரசு'ம் மக்களைக் கவரும் வகையில் வெளியிடப் படுகின்றன.

உலகச் செய்திகள், உள்நாட்டுச் செய்திகள், விளக்கக் கட்டுரைகள் 'தினமணி'யில் வெளியாகின்றது. ஞாயிறு தவிர பிற நாட்களில் தலையங்கமும் துணைத் தலையங் கமும் எழுதப்படுகின்றது. 'தினத்தந்தியில் தலையங்கம் எப்போதாவது வெளிவரும்!

'முரசொலி'யை நிறுவியவர் கலைஞர் கருணாநிதி. தற்போது முரசொலி மாறன் ஆசிரியராகி உள்ளார். கழகச் செய்திகளுடன் உலக முக்கிய செய்திகளுடன், உடன் பிறப் புக்கு மு. க. எழுதி வரும் மடலுடன், நாள்தோறும் வெளி வரும் தி. மு. க.சார்புள்ள கருத்திதழாகும். சென்னையிலும் மதுரையிலும் முதலில் வெளியாகியது. தற்போது சென்னை யில் மட்டும் வெளியிடப்பட்டு வருகிறது. 'விடுதலை' - திரா

விடர் கழகச் சார்பில், திரு. கி. வீரமணியை ஆசிரியராகக் கொண்டு, முதல் பக்கத்தில் அன்றாட முக்கியச் செய்தி களும், இரண்டாம் பக்கத்தில் தலையங்கமும், பொதுச் செயலாளரின் சுற்றுப் பயணச் செய்திகளும், பெரியாரின் பொன் மொழிகளும் கொண்டு வெளிவரும் கருத்திதழாகும். இது சீர்திருத்த எழுத்தில், நீண்ட காலமாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது.

தமிழ் இதழ்களின் முன்னோடிகளில் ஒருவரான சேலம் **பகடாலு நரசிம்மலு நாயுடு** அவர்கள் தெரிவித்துப் போயிருப் பதை நாம் உன்னிப்பாகக் கவனித்து மனத்தில் இருத்த வேண்டும்! 'இந்து' பத்திரிகைக்கு முன் நான் சேலத்தில் 'சுதேசாபி மானி' பத்திரிகையை ஸ்தாபித்து நஷ்டமடைந் ததில் அப்பத்திரிகை மறைந்தது. பிறகு 1881 ஆம் வருஷம் 'கலாநிதி' பத்திரிகையை ஸ்தாபித்து வந்ததில் நாளது வரையில் ரூ. 7000 நஷ்ட மடைந்திருக்கிறேன். இத்துடன் எனக்கு 'எடிட்டர்' சம்பளமும் சேர்த்தால் ரூ. 10,000 நஷ்டம் இருக்கும்!'' - (தட்சிண இந்து சரித்திரம்).

அநேக இதழ்கள் நன்றாக நிலைத்து நின்ற பின்னரும் தொடர்ந்து வெளியாக வில்லை. 100 ஆண்டுகளுக்கு மேல் சிறப்புடன் வெளிவந்த 'மெட்ராஸ் மெயில்' நிறுத்தப்பட்டு விட்டது! ''சுதேசமித்திர'னுக்கும் இதேகதி ஏற்பட்டு விட்டது! 'லோகோபகாரி' பல ஆண்டுகள் வரை பல ஆசிரியர்களால் தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்துங்கூட நீடிக்கவில்லை. 'திராவிடன்', 'நவசக்தி' முதலான இதழ்கள் பல ஆண்டுகள் வரை புகழ்பெற்ற ஆசிரியர்களால் நடத்தப்பட்டும் இடையில் துவண்டு விட்டுள்ளன. 'ஆனந்த போதினி' சிறந்த இலக்கிய மாத இதழாகப் புகழ்பெற்றும் 50 ஆண்டுகளுக்குள் நிறுத்தப் பட்டு விட்டது!

சிறந்த ஆலை முதலாளியாக இருந்த கருமுத்து தியாக ராய செட்டியாரால் மதுரையில் நடத்தப்பெற்ற 'தமிழ்நாடு'-நாளிதழ், பல லட்ச ரூபாய் இழப்புக்குப் பிறகு

நிறுத்தப்பட்டு விட்டது! தமிழே தெரியாத கோயங்காவிற்குச் சொந்தமாகிய 'தினமணி'-ஆசிரியர்கள் மாறினும் நல்ல நிர்வாகத் திறமையின் கீழ் தொடர்ந்து சிறப்புற்று நடைபெறுகிறது!

தமிழ் இதழ்களில் முற்காலங்களில் படங்கள் வரி கோட்டு உருவங்களாகப் (Line sketches) பதிக்கப்பட்டன. பின்னர் வெவ்வேறு வகையில் எழுதப்பட்டன. இவ்வகையில் ஓவியர்களாக எஸ். ஆர். சர்மா. ஆச்சாரியா, மாலி, கோபு, ஏ. கே. சேகர், ஸ்ரீதர், சந்திரா, மணியன் எஸ். இராஜம் போன்றோரின் கைவண்ணம் இதழ் வாயிலாகத் துவக்கமாயிற்று. கதை கட்டுரைகளுக்கு ஏற்ற படங்களுடன் இதழ்கள் வெளி வரலாயின. இதழ்கள் மலர்கள் வெளியிடத் தொடங்கின.

மலர்கள்- பொங்கல் மலர்களாக முகிழ்த்து, தீபாவளி மலர்களாக வளர்ச்சியுற்றன.

இவைகளுள் அந்தந்த ஊர்களின் தனிச் சிறப்பும், கோயில் சிறப்பும், சிற்பச் சிறப்பும் தனித்தனியே விளக்கப் பட்டன. தமிழர்களின் ஆடை அணிவகைகள் பற்றியும் கட்டிடக் கலை பற்றியும் சிறப்புக் கட்டுரைகள் இதழ்களில் வெளிவரலாயின. இந்தியாவிலுள்ள அஜந்தா, எல்லோரா, சித்தன்னவாசல், இலங்கையிலுள்ள சிக்கிரியா ஆகியவற்றிலுள்ள சுவர் ஓவியங்களும், புடைப்பு ஓவியங்களும், வண்ண ஓவியங்களும், ஓவியர்களால் வியப்புறும் வகையில் சித்தரிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டன. இவை இதழ்களால் ஏற்பட்ட பெருத்த இலாபமாகும்.

முற்காலத் தமிழ் இதழ்கள் வாயிலாகச் சிறுவர் பகுதி, பெண்கள் பகுதி, சிறுகதை பகுதி, நாவல் பகுதி, கட்டுரை பகுதி எனப் பாகுபடுத்தப்பட்டு வெளியிடப்பட்டன. இவ்வாறு பல துறை அறிவு வளர வாயிலாக அவை அமைந்தன. கட்டுரை, சிறுகதை, தொடர் கதை, நாடகம் போன்ற பல பகுதிகள் இதழ்களில் இடம் பெறலாயின. புதியதாக வெளிவரும் நூல்களைப் பற்றியும் மதிப்புரை செய்யப்பட்டன.

ஆங்கில இதழ்களிலும் பிறமொழி இதழ்களிலும் வெளி யாகும் புதிய முறைகளும், புதிய உத்திகளும் தமிழ் இதழ் களிலும் ஏற்ற வகையில் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன. 'விவேக சிந்தாமணி' இதழில் திரு. இராஜம் ஐயர் எழுதிய 'கமலாம்பாள் சரித்திர'மும் 'பஞ்சாமிர்தம்' இதழில் திரு. மாதவய்யா எழுதிய 'பத்மாவதி சரித்திர'மும் தொடர் கதைகளாக வெளி வந்தன.

**திறனாய்வு :** இதற்கு முன்னர் குறிப்பிட்டுள்ளபடி முதற்காலத் தமிழ் இதழ்களின் ஆசிரியப் பொறுப் பேற்றிருந் வர்களுக்குத் தமிழ் இலக்கியம் தெரிந்து இருந்தது. உடன் ஆங்கில இலக்கியத்தையும் பிற இலக்கியங்களையும் அறிந்து இருந்தனர். ஆகவேதான் அவர்கள் எழுதியுள்ளவை அனைத் தும் தமிழ் மரபு குன்றாமல் எழுதப்பட்டுள்ளன.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 20 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதி வரையில் தமிழ் இதழாசிரியர் களாக அமர்ந்தவர்கள் கூடியவரை தமிழ் மரபு குன்றாமலே எழுத்தாற்றலைப் புலப்படுத்தி வந்துள்ளனர். அவர்களது புலமையும் அறிவுக்கூர்மையும் பொறுப்புணர்ச்சியும் அவர்தம் நடையால் நன்கு புலப்படுத்தப்பட்டுள்ளன.

'மறுமலர்ச்சி எழுத்தாளர்கள்' என்று பெயர் சூட்டிக் கொண்டவர்களுக்குத் தமிழ் இலக்கியத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வமில்லை! அவர்கள் கற்ற அரை குறை ஆங்கில அறிவை வைத்துக் கொண்டே, தமக்கு ஓரளவு தெரிந்திருந்த தமிழைக் கொண்டு புதுமை கூட்ட முற்பட்டனர்!

''மேனாட்டு ஆசிரியர்களுக்கும் நம் நாட்டு எழுத்தாளர் களுக்கும் அடிப்படையான வித்தியாசம் ஒன்றுண்டு அவர்கள் தங்கள் மொழியிலுள்ள இலக்கிய நூல்களைக் கரை கண்டவர் கள்; மரபு வழுவாமல் எழுதத் தெரிந்தவர்கள். நம் நாட்டின் எழுத்தாளர்களுக்குத் தமிழ் இலக்கியத்தின் ஒரு மூலைகூடச் சரிவரத்தெரியாது. அங்ஙனம் தெரியாததைப் பெருமையாகக் கூடப் பேசிக்கொள்கிறார்கள்!

**தமிழிலுள்ள இலக்கியங்களின் பெயர்கூடத் தெரியாத எழுத்தாளர்கள் எத்தனையோ பேர் இந்தத் தமிழ் நாட்டில் 'ஆசிரியர்'களாக இருக்கிறார்கள்''**— என்று திரு. **கி. வா. ஜகன்னாதன்** ('கலைமகள்' ஆசிரியர்) 'பாரதமணி' 22-1-1939 இதழில் தெரிவித்திப்பது இன்றும் பொருத்த மானதாகவே உள்ளது!

''அநேக பத்திரிகைகள் நன்றாய் நடத்தப்படாமல் இலக்கணப் பிழைகள், அச்சுப் பிழைகள் நிரம்பிய தாயும், சமாசாரம் அதிகமாயிராமல் வீண் வார்த்தைகள் பலவாயு மாயிருப்பதால் அநேகர்கள் பத்திரிகைகளைக் கைசோர விடுகிறார்கள்''-என்று திரு. **வி நடராஜ ஐயர்** பி. ஏ. (''லோகோபகாரி'' ஆசிரியர்) கூறி யுள்ளதை நாம் நினைத்து பார்க்க வேண்டும். இவர் இந்து தியாலஜிகல் பள்ளியில் பணியாற்றியவர். மேலும், இவர் இதழின் தமிழ் நடை, சந்தாதாரர்கள் ஊக்குவிப்பு முதலியனவற்றைப் பற்றியும் திட்டவட்டமானக் கொள்கைகளைத் தமது 'லோகோபகாரி'யில் வெளியிட்டுள்ளார்.

''தமிழ் ஜனங்களுக்கு 'சுதேச மித்திரன்' அறிவைப் பரப்புகின்றதா? அல்லது ஆங்கிலப் பாஷையைப் பரப்பு கின்றதா? ஸ்வய பாஷையை ஆதரியாத பத்திரிகைகள் ஸ்வதேசத்தை எங்ஙனம் முன்னேற்றத்திற்குக் கொண்டு வரப் போகின்றனவோ தெரியவில்லை!...

'சுதேச மித்திரன்' தன்னுடைய பிறபாஷா நடையை யும் தன்மையையும் அனுசரித்து வருமானால், அது செய்ய வேண்டிய வேலை செய்து முடித்தாகி விட்ட தென்றும், **இனிமேல் அதற்கு நமது தமிழ் நாட்டில் வேலையில்லை** யென் றும் நாம் விசனத்துடன் வெளியிடவேண்டியிருக்கிறது.'' **சுப்பிரமணிய சிவா** ('ஞானபாநு' நவம்பர் 1915, பக். [illegible]).

''சுதேசமித்திரன்' பத்திரிகை தேசீயத்தைப் பற்றியும் இலக்கியத்தைப் பற்றியும் செய்திகளும் கட்டுரைகளும் வெளி யிட்டது. இலக்கணத்தைப் பற்றி அந்தப் பத்திரிகையில்

பணியாற்றியவர்கள் கவலைப்படவே இல்லை! அது அவர் களுக்குத் தெரியாதது! அவர்கள் படித்தது ஆங்கிலமும் சமஸ்கிருதமும் தான். அந்த அறிவைக் கொண்டு சில சம்பிர தாயச் சொற்களைக் கலந்து தமிழ் எழுத்துக்களில் பத்திரி கையை அச்சிட்டார்கள்!''— 'சோமலெ' ''தமிழ் இதழ்கள், பக். 14. மேலும் அவரே, ''கதை' நாடகம், பத்திரிகை, அச்சகம், இவ்வாறு மொழித்துறையில், ஈடுபட்ட அனைவரும் மொழிப்பயிற்சி உடையவர்களாயிருத்தல் இன்றியமையாதது என்றும் மேற்படி நூலில்பக்கத்தில் வலியுறுத்தியுள்ளார்.

''ஏராளமான நாள் இதழ்கள் தமிழில் வெளி வந்துங் கூட அவற்றின் தரம் உயர்ந்ததாக இல்லை'' என்றும் அவரே தெரிவித்துள்ளார்.

''இலக்கிய இதழ்கள் மொழிக்கு விதை நெல்லைப் போன்றவை—நாளைய இலக்கிய முயற்சிகளைப் பயிர் செய்ய இவை உதவுவதைப் போலவே வேறெவையும் உத மாட்டா'' என்கிறார் திரு. நா. பார்த்தசாரதி. ''செய்திகளை உள்ளது உள்ளபடி தருவது, தனக்குச் சரியெனப் பட்டதை அச்சம் ஆதரவு கருதாமல் எழுதுவது இவையெல்லாம் இங்குத் தொண்டாக மதிக்கப்படவில்லை! திடுக்கிடும் பரப்பரப்பான தகவல்கள், உணர்ச்சியைத் தூண்டும் செய்திகளை இவற்றை வைத்து வணிகம் செய்வது பத்திரிகை தொழிலாகிவிட்டது! என்று டாக்டர் அம்பேத்கார் முன்னரே இதழ்களைப் பற்றி கணித்து எச்சரித்துள்ளார்.

''இலக்கணம் என்று ஒன்றிருப்பதைத் தமிழ் இதழ்கள் நினைத்துப் பார்ப்பதே இல்லை! ஒற்றுக்கள், பன்மை விகுதி, மொழிக்கு முதலில் வராத எழுத்துகள், வல்லின இடையின வேறுபாடுகள் முதலியவற்றை இதழ்கள் கண்டு கொள்வதே இல்லை! இப்பிழைகள் யாவும் மொழியறிவு இல்லாத இதழாசிரியரின் குறைகளே யாகும்''- என்று வலி யுறுத்திக் கூறுகிறார் திரு. இரா. கோதண்டபாணி, தமது 'இதழியல்' எனும் நூலின் 210 ஆம் பக்கத்தில்.

**''மொழி பரப்புதலுக்கு இதழ்கள் வலிமையான சாதனங் களாகும். அவை பரப்பும் தவறான மொழியமைப்பு வழக் கிற்கு வரும்போது மொழிக் கொலையாக முடிந்து விடும்!** தாய் மொழியின் முறையான வளர்ச்சியை வணிகக் காற் றில் பறக்க விட்டு விட்டுச் சந்தடிச் சாக்கில் வந்தது இலாப மெனக் கருதுவது மொழியிதழ்களுக்கு நல்லதன்று'' என்று அவரே மேலும் ஆய்ந்து எச்சரித்துக் கூறியுள்ளதை இதழா சிரியராக வந்துள்ளவர்களும் இனிவர இருப்பவர்களும் மறவாமல் கவனத்தில் கடைபிடித்து ஒழுகி வர வேண்டும்!

ஓர் இதழின் ஆசிரியராகப் பொறுப் பேற்று நடத்து பவர்க்கு, அது எந்த மொழியில் நடத்தப் பெறுகிறதோ, அம் மொழியின் இலக்கியமும் இலக்கணமும் நன்கு தெரிந் திருக்க வேண்டும். தொடக்கத்தில் போதிய தேர்ச்சியில்லா திருக்கு மாறுலுங்கூடப் பின்னராவது அம்மொழி இலக்கியங் களைப்பற்றி அவர் நன்கு கற்றறிந்து கொள்ள வேண்டும் அதன் நவீன போக்குகளை எல்லாம் கூர்ந்து அறிந்து கொள்ள வேண்டும்.

ஓர் இதழை நடத்துபவர்க்கு அம்மொழியின் பெருமை யும் மேன்மையும் சிறப்பும் குன்றாமல் பாதுகாக்கும் உள்ளம் இருக்க வேண்டும். அவர் விழுமிய நோக்கங்களைக் கொண்ட வராகத் திகழவேண்டும். தாம்நடத்தும் இதழை தரங்கெடா மல் விழிப்பாகப் பாதுகாக்க வேண்டும். ஓர் இதழானது வாழ்விற்கு வேண்டிய இன்றியமையாத தத்துவக் கூறுகளை எடுத்துச் சொல்வதால் **ஆசிரியராகவும்**, செவிக்கினியகளை, சிந்தனைக் கினியவைகளைத்தேடி உற்ற காலத்தில் மகிழ்ச்சி யுடன் அளிப்பதால் **தாயாகவும்**, நற்கல்விகளைப் பருவ பேதங்களுக்குத் தகுந்தவாறு பயிற்றுவிப்பதால் **தந்தையாக வும்**, குற்றங்களை எடுத்துக்காட்டித் திருத்தங்கள். செய்வதால் **நண்பராகவும்**, உள்ளதை உள்ளபடி எடுத்துக்கூறி குற்றம் செய்பவரைத் தண்டித்தும் நியாயமாக நடப்பவரைப் போற்றிப் பெருமைபடுத்துவதால் **நீதிபதி யாகவும்** அயலிடத்துச் செய்திகளை உய்த்து உணர்ந்தும்

சேகரித்தும் அறிவிப்பதால் தூதராகவும் விங்குகிறது என்று புகழப்படுகிறது!

மூலதனமுள்ளவர்களால் இதழ்கள் தோற்று விக்கப் படுகின்றன என்றாலும், ஆசிரியப் பொறுப்பேற்கும் தகுதி வாய்ந்த பெருமக்களால் அவை சிறப்பாக வகுத்தும் தொகுத்தும் அமைத்தும் எழிலாக கொண்டுவரப் படுகின்றன ஆசிரியர்களாலும் எழுத்தாளர்களாலும் அது அணி செய்யப்பட்டாலும் அவை படிப்பவர்களாலும் சந்தா தாரர்களாலும் வளர்க்கப்படுகின்றன.

இதழ்கள் அவசர அவசரமாக உரிய காலத்திற்குள் வெளிக்கொண்டுவரப் படுகின்றன. ஆகவே, அவைகளில் வெளிவருபவை 'அவசர இலக்கியமாக'க் கருதப்படுகின்றன! இதழ்களைப் படிக்காதவன் அரைமனிதனே என்று விளிக்கப் படுகிறான்!

எந்த நாட்டில் இதழ்கள் வெளிவரவில்லையோ, அந்த நாடு பேச்சற்ற ஊமை நாடென்று கூறப்படுகிறது! எந்த நாட்டில் இதழ்களை அடக்குகிறார்களோ, அந்த நாட்டில் வாக்கு உரிமையை அடக்கியதாகவே கருதவேண்டும்!

தமிழ் இதழ்கள்—துவக்க காலத்தில் அதை நடத்துபவர் களின் படிப்பு, மொழிப்பற்று அவர் சார்ந்துள்ள இனம், சமயம், சமூகம், கட்சி ஆகியவற்றிற்கு ஏற்பவே பெயர் சூட்டப்பட்டன. இப்போது ஏற்பட்டிருப்பது போன்ற தூயதமிழ்ப்பற்றும் சமயச் சார்பற்ற போக்கும் அக்காலத் தில் இல்லை என்பது உண்மையே.

தமிழ் இதழ்களின் வேகமான வளர்ச்சிக்கு, மக்களின் படிப்படியான கல்வி வளர்ச்சியும், புதியதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும், சமூக சமயவிழிப் புணர்ச்சியும், அரசியலில் ஈடுபாடும், உலகில் ஏற்பட்ட பெரும் போர்களும், இந்தியாவில் ஏற்பட்ட உரிமைக் கிளர்ச்சியின் பின் விளைவுகளும் காரணங்களாகும்.

தெளிந்த எண்ணமும் தேர்ந்த சிந்தனையும், தாம் அறிந்தவற்றைப் பிறர்க்குத் தெரிவிக்க வேண்டிய உந்துதலும், அச்சு சாதனங்களின் வளர்ச்சியும், அவர்தம் உணர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்தன; எழுத்தார்வத்தைப் பெருக்கின.

உலகில் பல நாடுகளில் ஏற்பட்டு வந்த மறுமலர்ச்சியும், மேன்மையும், இந்நாட்டையும் முன்னுக்குக் கொண்டுவர வேண்டும் என்ற தாக்கமும் ஒன்று சேர்ந்து கொண்டன!

படித்த வர்க்கம், படியாத பாமரர்களை விழிப்படையச் செய்தால்தான் தம்நாடு முன்னேற வழி பிறக்கும் என்று கண்டு கொண்டது! ஆகவே, உலக நடவடிக்கைகளை உடனுக்குடன் அறிந்து கொள்ள வேண்டும் என்ற அவா மேலெழுந்தது.

உலகப் போர்கள் ஏற்பட்டபோது செய்தி இதழ்களின் தேவையும் இன்றியமையாமையும் உய்த்து உணரப்பட்டன. அதனால் அவை செழித்து வளரத் தொடங்கின.

விடுதலையார்வம் இங்கு மேலோங்கி நின்ற காலத்தில் இந்நாட்டில் எல்லா வகை இதழ்களும் நல்ல வளர்ச்சியைப் பெற்றன.

உலகின் நானா பக்க செய்திகளைத் தந்தியாலும், கம்பில்லா ஒலிபுரப்புச் சாதனங்களாலும் உடனுக்குடன் தெரிந்து கொள்ள வழியேற்பட்டது! இவை காரணமாக இதழ்களுக்கு நல்ல செய்திகளும் தீய செய்திகளும் கிடைத்தன. அவற்றை இதழ்கள் தங்களது நீக்குப் போக்குக்கு ஏற்ப வெளியிட்டன. இவற்றைப் படித்தவர்கள், படியாதவரிடம் தாம் தெரிந்து கொண்டதைப் பரப்பினார்கள். இதனால் போர் நடந்த காலம் பொற்காலமாகக் கருதப்படுகிறது.

உலகெங்கும் நடந்த உரிமைப் போரில் மக்கள் தங்கள் வசதிக்கு ஏற்றபடி பங்கெடுத்துக் கொண்டனர். இந்திய மக்களும் இதில் சோடை போகவில்லை! போர்க் காலங்களிலும் அதற்குப் பின்னரும் இதழ்கள் புற்றீசல் போல்

கிளம்பத் தொடங்கின. அவை போர்க் கருவிகளில் ஒன்றாகவே கருதப்பட்டன! இதழ்களின் ஆசிரியர்களாக இருந்தவர்களில் சிலபேர், உரிமைப் போரில் நேரிடையாகவும் கலந்து கொள்ள முற்பட்டனர். போர்ப் பரணியில் மக்களை அணி சேர்க்கவும் தொடங்கினர். ஒரு சில ஆசிரியர்கள் இதன் காரணமாகச் சிறை சென்றனர்; சிலர் காரசாரமாக எழுதி விட்டு எங்கு கைதியாகி விடுவோமோ என்று அஞ்சி வேறு இடங்களுக்குச் சென்று தஞ்சம் புகுந்தனர்!

## தனிச் சிறப்பு

இந்தியத் துணைக்கண்டத்திலே உள்ள மொழிகளில் முதன் முதலில் உரோம வரிவடிவில் (Roman Script) கி. பி. 1554 இல் **கார்ட்டில்லா** எனும் வினாவிடை வெளியீட்டில் இடம் பெற்றது தமிழ்மொழிதான்! அடுத்து கி. பி. 1578 இல் அச்சிட்டப்பட்ட **தம்பிரான் வணக்கம்** எனும் சிறு வெளியீடு, தமிழ் வரிவடிவில் அச்சிடப்பட்ட முதல் நூலாகும். பின்னர் அச்சுத்துறையில் தேர்ச்சிய பெற்ற தமிழர்கள்தான், இந்தியா முழுவதிலும் உள்ள அச்சகங்களில் சில ஆண்டுகளுக்கு முன்வரை நிர்வாகிகளாகப்பொறுப் பேற்றுத் திறம்பட நடத்திவந்துள்ளனர்.

தமிழில் தோன்றிய முதல் மாத இதழ் **தமிழ் மாகசீன்** (1831); முதலில் வெளியான மாத இருமுறை இதழ்- **உதயதாரகை** (1841); முதல் மாத மும்முறை இதழ்- **லோகோபகாரி** (1895); முதல் வார இதழ்- **தினவர்த்தமானி**; முதல் வார இருமுறை இதழ் **சுதேசமித்திரன்** (1887) (1851); முதல் காலாண்டு இதழ்- **ஐந்து வர்த்தமான சாரம்** (1900)' முதல் அரையாண்டு இதழ்- **தமிழ் விவசாய சஞ்சிகை** (1938); முதல் ஆண்டு இதழ் **அறிவுச்சுடர்** (1941). ஆனால், முதல் நாளிதழ் எது என்பதில் சிலருக்கு ஐயப்பாடு ஏற்பட்டுள்ளது. இந்தியாவிலேயே முதன் முதலில் இந்திய மொழிகளில் **இந்தியப் பத்திரிகைத் தொழில்** (1935) பற்றி தமிழில் நூல்

எழுதியவர் திரு. வி. நா மருதாசல கவுண்டர் ஆவர். இவர் எழுதிய நூலில் 'தினவர்த்தமானி' தான் முதல் நாளிதழ் என்று தவறாகக் குறிப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் 'தின வர்த்தமானி' என்ற பெயர் அப்படி பொருள் கொள்ளும்படி செய்துள்ளது. அடுத்து ''வீராசாமி செட்டியார் என்பவர் 'தினவர்த்தமானி' என்ற நாளிதழைத் தொடங்கி நடத்தி வந்தார்'' என்று திரு. கி. வா. ஜகன்னாதன், தமது நாடும் ஏடும்' எனும் கட்டுரையில், ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டு மலரில், 125 ஆம் பக்கத்தில் உண்மைக்கு மாறாக எழுதியுள்ளார்.

உண்மையில் 'தினவர்த்தமானி' என்பது நாளிதழ் அன்று, வார இதழ்தான் என்பதை ரெவ். மர்டாக்கின் நூல் விவரப்பட்டியலில் குறிப்பிடுவதிலிருந்து எடுத்துக்காட்டி மெய்ப்பிக்கப் பட்டிருக்கிறது. 'தினவர்த்தமானி' எனும் வார இதழில் துணை ஆசிரியராக இருந்தவர்தான் திரு. வீராசாமி செட்டியார். லலிதபிரசனோதயா (1887) எனும் இதழ்தான் மூதல் நாளிதழாகும் என்று அரசாங்கத் தாய் மொழி இதழ் அறிக்கையில் கண்டுள்ள குறிப்பை ஆதார மாகக் கொணடு திரு. பெ. சு.மணி கூறுகிறார். அக்காலத்தில் மாத, வார இருமுறை இதழ்களை நடத்தி வருவதே பெரும் பாடாக இருந்தபோது 'லலித பிரசனோதயா' எனும் சமய இதழாகக் கருதப்படும் ஒன்று 150 படிகளே அச்சிடப் பட்டது, எப்படி நாளேடாக வந்திருக்க முடியும்? இதழைப் பாராமலே, அதுஒரு இந்து சமய நாளிதழாக இருக்கலாம் என்று ஊகத்தின் அடிப்படையில் கூறுவது சரியானதாகத் தோன்றவில்லை!

அடுத்து 'சுதேசமித்திரன்' தான் முதல் தமிழ் நாளிதழ் என்று கொள்வதும்ஒப்புக்கொள்ளக் கூடியதன்று. ஏனெனில் 1887 வரை 'சுதேசமித்திரன்' வார இருமுறை இதழாக 1120 படிகள் அச்சடிக்கப்பட்டு நடத்தப் பெற்றுள்ளது! 1889 இல் தான் அது நாளிதழாக மாற்றப்பட்டது.

1880 இல் **தியாக நாடு** என்னும் இதழ், நாகர் கோவிலிலிருந்து திரு. டி. ஸ்ரீ. ஜோஸப்பால் நடத்தப் பெற்றது என்று திரு. இரணியல் இரவி எனக் கெழுதிய மடலில் குறிப்பிட்டுள்ளார். இலங்கையில் 1886 இல் **இலங்கைத் தினவர்த்தமானி** திரு. ரி. எஸ். இராஜ பிள்ளையால் முதல் தமிழ் நாளிதழாக எடுத்த எடுப்பிலேயே வெளியிடப் பட்டுள்ளது. இவ்விரண்டையும் அடுத்துதான் 'சுதேச மித்திரன்' 1889 இல் தான் நாளிதழாக வெளியாகி யுள்ளது என்று திட்டவட்டமாக முடிவு கட்டலாம்.

கிறிஸ்தவ சமயத்தினர்தான் முதலில் தமிழில் இதழைத் தொடங்கியவர்களாவர் இவர்களால் மாத, மாதமிருமுறை, மும்முறை, வார, வார இருமுறை இதழ்கள் நடத்தப்பெற் றுள்ளன. இவர்கள் தங்கள் இதழ்களின் பெயர்களை- 'மாசாந்திர சாட்சி' (1911) 'மாதக் கடிதம்' (1913) 'மாதத்தோழி' (1929), 'தினசரிவேதவாசிப்பு' (1948) என்று அமைத்துள்ளனர். இவர்களால் நாளிதழ் ஒன்று நடத்தப் பெற்றதாகத் தெரிய வரவில்லை.

'திருக்குறளும் நாலடியாரும்' சேர்த்து 1812 இல் 'மாசத் தினச்சரிதை'யின் அச்சுக்கூடத்தில் அச்சிடப் பட்டுள்ளது, இதனை எனது **அச்சும் பதிப்பும்** (1980) எனும் நூலிலே அச்சுப் படிமைசெய்து வெளியிட்டுள்ளேன். இதனைக் கண்ட எனது நண்பர் திரு. **அ. மா. சாமி,** ''முதல் தமிழ் இதழ் 1812 ஆம் ஆண்டிலேயே வெளிவந்து விட்டது'' என்று தமது ''தமிழ் இதழ்கள் தோற்றம் வளர்ச்சி'' எனும் நூலின் 147 ஆம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலே காட்டியுள்ளபடி கிறிஸ்தவ சமயத்தினரால் இதழ்கள் வெளியிடப்பட்டி ருக்கின்றனவே ஒழிய, 'மாசத் தினச் சரிதை' என்ற பெய ரால் எந்த இதழும் அச்சிடப்பட்டுள்ளதாக அவர்களாலோ, அல்லது திரு. மர்டாக்கின் நூல் விவரப் பட்டியலிலோ, அரசாங்க மொழி பெயர்ப்புத் துறையினராலோ அறிவிக்கப் பட்டில்லை! ஆகவே, இப்படி வெளியிடப்படாத ஒன்றின்

பெயரை வைத்துக் கொண்டு, ஊகத்தின் அடிப்படையில் வெளியிடப்பட்டிருப்பதாகக் கொள்வது அடிப்படையற்ற கூற்றாகும்! ஒன்று அவ்விதழை நேராகக் கண்ட பிறகு, புதையலைக் கண்டு பிடித்ததுபோல பெருமிதத்துடன் கூறுதல் தக்கதாகும். அல்லது யாரால் எங்கு எக்காலத்தில் அவ்விதழ் வெளியிடப்பட்டிருக்கிறது, எந்தப் பட்டியலில் அது இடம் பெற்றிருக்கிறது என்ற சான்றுகளைக் காட்டி மெய்ப்பிக்க வேண்டும். இவ்விரண்டு அடிப்படை ஆதாரங்கள் இல்லாமல், 'மாசத் தினச் சரிதை' எனும் இதழ் வெளியிடப்பட்டிருப்பதாகவும், இவ்விதழின் பெயரைக் கொண்டுள்ள அச்சகத்தில்தான் 'திருக்குறள்' அச்சிடப்பட்டிருக்கிறது என்று வாதிப்பதும் முறையானதாகக் கொள்வதற்கில்லை!

'சுதேசமித்திரன்' 1882இல் வார இதழாகத் தொடங்கப்பட்டு, வார இருமுறையாக நடத்தப் பெற்று, 1889இல் நாளிதழாக வளர்ச்சியுற்றுள்ளது. ஆகவே, இதற்கு முன்பு நாளிதழாகப் பதியப்பட்டு, வெளியாகியுள்ள 'தியாக நாடு', 'இலங்கை தினவர்த்தமானி' இதழ்களையே முதலில் வெளியான நாளிதழ்களாகக் கருத வேண்டும்.

1838 இல் **பாலியர் நேசன்** எனும் முதல் தமிழ்ச் சிறுவர் இதழ், யாழ்ப்பாணத்தில் வெளியாகியுள்ளது. இதற்கு அடுத்தபடியாகத்தான் பிற மொழிகளில் சிறுவர் இதழ்கள் வெளிவரத் தொடங்கின. 1840 இல் **பால தீபிகை** எனும் மற்றொரு சிறுவர் இதழ், நாகர்கோவிலிலிருந்து வெளியிடப்பட்டுள்ளது.

1860 இல் தொடங்கப்பட்ட **அமிர்த வசனீ** இதழ்தான், தமிழில் வெளியான முதல் மகளிர் இதழாகும். **மாதர் போதினி** எனும் இதழில்(22-9-1914) 'சந்திர லோக யாத்திரை' என்ற கட்டுரை வெளியாகியுள்ளது. நிலாப் பயணம் குறித்து அக்காலத்திலேயே இப்படிப்பட்ட கட்டுரை ஒன்று வெளியிடப்பட்டிருப்பதை அறிந்து நாம் பெருமை கொள்ளலாம்.

1877-லே சித்தாந்த சங்கிரகம் எனும் முதல் சட்ட இதழ் தமிழில் தோன்றியுள்ளது. இதனைத் தொடர்ந்து பல சட்ட இதழ்கள் வெளிவந்துள்ளன. அண்மையில் தீர்ப்புத் திரட்டு எனும் இதழும் வெளிவந்து கொண்டிருக்கிறது.

'அச்சுத் தொழில் (1926) 'சிற்பக் கலை' (1947) 'நாட்டியம்' (1949), 'தையற் கலை', 'ஆடல் பாடல்' (1935) எனப் பல துறை இதழ்கள் தமிழில் வெளியாகியுள்ளன.

தமிழில் சமய, சமூக, அரசியல், நாட்டு, நிர்வாகம்' விகடம், சட்டம், தொழில், மருத்துவம், சிறுவர், மகளிர், கதைக் கடல், திரட்டு, கல்வி, திரைப்படம், கலை, வேளாண்மை, உடல் நலம், புராணம், சீர்திருத்தம், ஆசிரியர், கல்வி, அரசு, கூட்டுறவு, தொழிற் சங்கம், விஞ்ஞானம் செய்தி, மதுவிலக்கு, நூலகம், பயணம், எழுத்தாளர், சிற்றிதழ்கள், கவிதை, தமிழர் விளையாட்டு மடல். மாதம், மாத இருமுறை, மாத மும்முறை, வாரம், வார இருமுறை, வார மும்முறை, நாள், காலாண்டு, அரையாண்டு, ஆண்டு எனப் பல துறைகளிலும் பல வகையிலும், பல காலங்களிலும் இதழ்கள் வெளியிடப்பட்டுள்ளன.

சமய இதழ்களின் வாயிலாகப் பலவகைப்பட்ட சமயங்களின் வரலாறும் மேன்மையும் தெரிய வந்தன. சமூக இதழ்கள் மூலமாகப் பல சமூகங்களின் புராண வரலாறுகளும் அவற்றின் பெருமையும் நிலைமைகளும் தெரியலாயின. பல்வகைத் துறையில் வெளியான இதழ்களால் பலதுறை அறிவும் பயனும் கிட்டின.

"நம் தமிழ் நாட்டில் சுமார் 20,000 ஜைனர்கள் இருக்கின்றார்கள்; இவர்கள் சுமார் 80 கிராமங்கள் வரை குடியேறியிருக்கிறார்கள். இவர்களுக்குச் சுமார் லட்சம் ஏகரா நிலங்களுக்கு மேல் இருக்கின்றன"-என்று தரும சீலன் (1918-மே) எனும் சமண சமய இதழில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

"பார்ப்பான் என்பது பார்த்தல் என்னும் தொழிற் பெயரடியாகப் பிறந்தது. க்ஷத்திரியன் என்பது க்ஷேத்திரம் என்னும் இடப் பெயரடியாகப் பிறந்தது. மறைவன் என்பது மறை என்னும் பொருட் பெயர் அடியாகப் பிறந்தது" என்று **க்ஷத்திரியமித்திரன்** (ஆசிரியர்: த.விஜய துரைசாமிகிராமணி) எனும் சமூக இதழில் (1920 செப்டம்பர், இரண்டாம் மடலம், எண்-8, பக்கம் 217) விளக்கம் காணப்படுகிறது.

"இந்தக் (சாம்பல் வழங்கும்) கெட்ட செய்கை யெங்கு நடக்கிற தென்றால், மூடத்தன்மையும் தன்னகங்காரமுங் குடி கொண்டிருக்கிற தர்ஹாக்களிலேயாம்! அங்கு இது மட்டுமா நடக்கிறது? பின்னைத் தாசியாட்டம், சந்தனக் கூடு, கொடியேற்றல், விளக்கு வைத்தல், கொட்டியடித்தல் இவை போன்ற அநாகரிகச் செய்கைகளுமாம்!" என்று **'இஸ்லாம் நேசன்**,- புத்தகம்-2, சஞ்சிகை-2 (1910) இதழின் 51 ஆம் பக்கத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

ஏழிசைமன்னர் எம்.கே. தியாகராஜபாகவதரின் சொந்த ஊர் மாயவரம். ஆனால் 30 ஆண்டு காலத்திற்குமேல் அவர் திருச்சியிலே வாழ்ந்துள்ளார். அவர் நடித்த 'ஹரிதாஸ்' திரைப்படம் சென்னை பிராட்வே கொட்டகையில் 142 வாரங்கள் ஓடிப் புகழ் பெற்றது. "எவ்வளவோ ஆண் குரல்கள் இதுவரை 'மைக்' கருவி மூலம் ஒலிந்திருக் கின்றன. ஆனால், பாகவதரின் குரலுக்கு இணை அவரு டையது தான்! 'சினிமா'வுக்குக் குரல் எப்படியிருக்க வேண்டும்? பாட்டுக்கள் எப்படிப் பாடவேண்டும்? என்பதற் குப் பேசாமல் பாகவதரின் பாட்டை உதாரணமாகக் காட்டி விடலாம்!

பாகவதர் தமது வாழ்க்கையிலும் தொழிலும் வெற்றி பெற்றதற்குக் காரணம் அவருடைய பாட்டுகளே!" என்று திரைப்பட இதழான 'குண்டூசி' 1947 முதல் ஆண்டு மலரில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

"**தமிழ் மொழிக்கு வடமொழி நிகரென்பதும் பொருந்தாது.** தமிழிலுள்ள பலவகைமாண்புகளை அது தழுவப்பெற்றும்

மணமில்லாத மலரை யொப்ப, அது ஒருவராலும் பேசப்படா மையால் 'இறந்த மொழி' என்று எல்லோராலும் சொல்லப்படு கின்றது. வடமொழி நூல்களில் மட்டுமுள்ளது. அஃதன்றி, தமிழ் பேசப்படுதலாலும் வளர்க்கப் படுதலாலும், 'வளர்மொழி' எனப்படுகிறது. வடமொழி ஒற்றெழுத்துக்களாலும், சிக்குள்ள சொற்களாலும் நிறைந்திருப்பதால், அதை எழுதவும் படிக்கவும் பயிலவும் மிகவும் அரிதாயிருக்கிறது!

தமிழின் அமைப்பு அவ்வாறின்றி எல்லா நயமுடையது. குறைந்த எழுத்து, வளர்ந்த ஒலி, நிறைந்த சொல், பரந்த பொருள், கண்ணுக்கு அழகு, காதுக்கு இனிமை என்பன தெளி வாம்.'' என்று திரு. ல. சு. சுப்பராய அய்யர், 'ஞானபாநு' இதழில் (1915 ஆகஸ்டு) பக். 257 இல் புகழ்ந்து உரைத் துள்ளார்.

''இச் சென்னை மாநகரிலுள்ள பல சாலைகளுள்ளும் மிகவும் பிரசித்தமான மலைச்சாலையில், பல விதமான பொன் வெள்ளி பாத்திரங்களும், பூஷணங்களும் சுலோசன முதலான பலவகைக் கண்ணாடிக் கருவிகளும், இவை போன்ற வேலைத் திறமுள்ள இன்னும் அநேக சாமான் களும் வைத்து விற்பனை செய்வதற்காக பி. ஆர். அண்டு கம்பெனி என்னும் சங்கத்தார் சிறந்த மாளிகை யொன்று அமைத்திருப்பது இந்நகர வாசிகள் அநேகருக்குத் தெரிந் திருக்கலாம்...

''அம்மாதிரி கட்டடம் ஏற்படுத்தியதற்குக் காரணம் என்னவெனில், அதே விதமாய் விசாலமாயும் நடுவே கம்பம் முதலிய தடையில்லாமல் ஒரே சமமாயும் கூடமமைத்து, நீரொழுக்கு உண்டாகாமல் உறுதியாய் மேல் தளம் போட்டு, பார்வைக்கு இலேசாகவும இந்த உஷ்ண தேசத் துக்கு ஏற்ற குளிர்ச்சி யுடையதாகவும் மாளிகைகள் ஏற் படுத்த வேண்டுமென்பதேயாம்......

''பகற்காலத்தில் சுவர்க்குள் மடக்கி வைக்கவும், இராக் காலத்தில் வழியை மூடி வைக்கவும் ஏற்றதாய், மாறு சாவி

போட்டுத் திறக்கக்கூடாததாய், தாள் பூட்டு முதலியவை ஒன்றுமில்லாத சுழல் கதவுகள் தெருப்புறத்தில் நாட்டப் பட்டிருக்கின்றன.''— என்பது **ஜனவிநோதனி** (1878) ஜனவரி இதழில் காணக்கிடக்கும் பகுதி.

மலேசிய தீபகற்பத்தில் முதலில் தமிழர் குடியேற்றம் பினாங்கில் 19 ஆம் நூற்றாண்டு துவக்கத்தில் ஏற்பட்டது. 'வணிகர்களும் கற்றவர்களும் அதிக அளவில் தமிழகத் தொடர்பிலிருந்து இங்கு நட்புறவு காரணமாக ஏடுகளைத் துவங்கினர்'. 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் முதன் முதலில் பினாங்கு நகரில் தமிழ் இதழ்கள் தொடங்கப் பட்டன. சிங்கப்பூரிலும் இதேபோன்றுதான் இதழ்கள் வெளிவந்தன.

''ஈப்போவைத் தவிர 19ஆம் நூற்றாண்டில் கோலாலம் பூரிலோ, மலேசியாவின் உள் நகரங்களிலோ எந்த இதழும் நூலும் வெளிவந்ததாகக் குறிப்பு இல்லை'' என்றும், இங்கு 20 ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில்தான் சில இதழ்கள் தலையெடுத்தன என்றும் **புலவர் முருகையன்** ('தமிழ் நேசன்' துணையாசிரியர்) தமது ''மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் தொடக்கக் காலத்தில் தோன்றிய தமிழேடு கள்'' என்ற கட்டுரையில் தெரிவித்துள்ளார்.

மலேசியாவில் மலாய் மொழியின் மேன்மைக்காக உழைத்தவரே, நாகூரிலிருந்து சென்ற தமிழ் முஸ்லீமான **முன்ஷி அப்துல்லா** என்பவராவர்! மலேசியாவில் முதன் முதலாக மலாய் மொழியில் இதழை வெளியிட்டவரும் ஓர் இந்தியரே ஆவர்! **முன்ஷி முகம்மது சையது பின் முகைதீன்** என்பவர் (இவர் சிங்கப்பூர்-மலேயாவில் பிறந்த தமிழ் முஸ்லீம் என்று கூறப்படுகிறார்) **ஜாவி-பிராணக்கான்** என்ற மலாய் இதழைச் சிங்கப்பூரில் 1876இல் தொடங்கி நடத் தினார். மேலும், 'மலேசியாவில் சீன இதழ் ஒன்றை வெளி யிடவும் இந்தியர் ஒருவர் முயன்றுள்ளார்!' என்று **திரு. சென் மொங் ஹொக்** என்பவர் ஆய்ந்து கூறியுள்ளார்.

1897 இல் கோலாலம்பூரில் **நன்யாங்-சீ-லூபாங்** என்ற இதழை இந்தியர் வெளியிட்டுள்ளார்!

மலேயாவில் முதன் முதலாகத் தமிழ் இதழ்களைத் தொடங்கியவர் **திரு. சி. கு. மகுதூம் சாயபு** ஆவர். இவர் 1875 இல் **சிங்கை வர்த்தமானியையும்** அடுத்து 1879 இல் **தங்கைநேசனையும்** மூன்றவதாக ஞானசூரியனையும் நடத்தியுள்ளார்.

**சிங்கைநேசன்** (1887 ஜூன் 27-) இது திங்கட் கிழமை தோறும் வெளியான வார இதழ்; சிங்கப்பூர் தீனோதய யந்திர சாலைத் தலைவரால் அச்சிடப்பட்டது. ஆசிரியர் சி. கு. மகுதூம் சாயபு. இப்பத்திரிகையின் நோக்கம்: "இம்முறை பொது நன்மைக்குரிய விஷயங்களைப் பற்றிப் பிரசுரிக்கிறதே யொழிய தனித்தனி ஆட்களை யிகழ்ந்தும் புகழ்ந்தும் வீண்காரியங்கள் வெளிப்படுத்தப் படா படித்தவர்களும் படியாதவர்களும் வாசிக்க விளங்கத்தக்க-பாஷையில் எழுதி வருவோம்.

எழுதி வருங்காரியங்கள் எவர்களையும் பிரியப்படுத்தவும் எழுப்பிவிடவும், முயற்சி பண்ணவும், சோம்பலின்று விழிக்கவும் செய்யவே கூடியளவு பிரயாசப்படுவோம்.

வாசிப்பவர்கள் அருவருத்து வெறுக்கத் தக்க காரியங்களை நீக்கி விடுவோம்.'' இது சிங்கப்பூர் முகம்மது அலி சந்து 1 ஆம் எண் வீட்டிலிருந்து வெளியிடப்பட்டது.

**தமிழ் நேசன்** எனும் வார இதழைக் கோலாலம்பூரில் தொடங்கியவர் திரு. **கே. நரசிம்ம ஐயங்கார்.** இவர் திருச்சி மாவட்டத்திலுள்ள நங்கவரத்தில் 1890 ஆம் ஆண்டில் பிறந்தவர். நாவலர் வேங்கடசாமி நாட்டாரிடம் தமிழ்ப் பயின்றவர். பர்மா சென்று சில காலம் பணிபுரிந்து மலேயாவிற்கு வந்தவர். இங்கு நிலைத்து வாழ்ந்தார். மலேசியாவில் வாழும் இந்தியர்களுக்குச் சிலாங்கூர் 'ஸ்டேட்கவுன்சி'லிலும் "பெடரல்' சட்ட மன்றத்திலும் பிரதிநிதித்துவம் வேண்டும் என்று போராடியவர். பொதுவாக மலேசியா இந்தியர்களின், சிறப்பாகத் தமிழ் தோட்டத் தொழிலாளர்களின்

குரலாகத் 'தமிழ்நேசன்' இருக்கும் விதமாக அவர் பெரிதும் பாடுபட்டு உழைத்தவர்.

''இந்தியா, இலங்கையில் உள்ளவர்களைக் காட்டிலும் மலாய் நாடுகளிலுள்ளவர்கள் அதிக தேசாபிமானமும் பத்திரிகாபிமானமும் உடையவர்கள். ஆனால்,அவர்களிடத்தில் கல்வியறிவும் ஒற்றுமையும் இல்லையே என்பது தவிர வேறு லோபித் தனத்தைச் சாற்ற முடியாது!'' என்று எழுதியவர். ''அரசாங்கத்தாரும் அடிக்கடி பத்திரிகாசிரியர்களுக்கு முட்டுக்கட்டை போட்டுக் கொண்டிருப்பார்களானால், ஆசிரியர்களின் சுதந்திரம் கெட்டு. ஊக்கந் தளர்ந்துவிடும்''! என்று 'தமிழ்நேசன்' (17-9-1924) முதல் தலையங்கத்திலேயே ஆணித்தரமாகக் கூறியுள்ளார். இவருக்குப் பின்னரும் பல ஆசிரியர்களால் இவ்விதழ்ச் சிறப்புற நடத்தப்பட்டுவந்தது. தற்போது இது டத்தோ சாமுவேல் குடும்பத்தினரால் ஏற்று நடத்தப்பெற்று வருகிறது. மலேசியாவில் நிற்காமல் தொடர்ந்து நடத்தப் வரும் பெருமை 'தமிழ் நேச'னுக்கு உண்டு.

சிங்கப்பூரில் தமிழ் முரசு இதழைத் தொடங்கி நடத்தியவர் தமிழவேள் கோ. சாரங்கபாணி ஆவர். இவர் திருவாரூரில் பிறந்து சிங்கப்பூர் சென்று வாழ்ந்தவர். அங்குத் தமிழர் திரு நாளைச் சிறப்பாகக் கொண்டாடும்படி ஊக்குவித்தவர் மலேசியாப் பல்கலைக் கழகத்தில், திரு கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி சமஸ்கிருதத்தை வைக்க வேண்டும் என்று பரிந்துரைத்தபோது, அதனை எதிர்த்துப் போர்க்குரல் எழுப்பி, பலத்த கண்டனத்தைத் தெரிவித்தவர். தமிழைப் பல்கலைக் கழகத்தில் இடம் பெறும்படிச் செய்தவர். முன்பு 'தமிழ் முரசு' இதழ்-சிங்கப்பூரான தெற்கே முதல் வடக்கே கெடாரம் வரை ஊர் தோறும் வளர்ந்து வாழ்ந்தது; நகரம் முதல் தோட்டப்புறம் வரை 'தமிழ் முரசு' கொடிகட்டிப் பறந்தது என்று புகழ்ந்து கூறப்படுகிறது. ஆனால், இன்று சிங்கப்பூரில் மட்டும் அது விற்பனை ஆகிறது! அதனை அவரது சீனப் பிள்ளைகள் ஏற்று நடத்தி வருகின்றனர்.

'தமிழவேள்' மீது தமிழ் பாக்கள் யாத்து நூலாக்கியுள்ளனர் சிங்கப்பூர் தமிழ் அன்பர்கள்!

'பத்திரிகைகளைச் சார்ந்துவரும் இலக்கியம் பொதுவாகப் பொழுது போக்கையே நோக்கமாகக் கொண்டிருப்பது வழக்கம் ஆனால் மலேசியத் தமிழிலக்கியத்தைப் பொறுத்த மட்டில் இதற்கு நேர்மாறான வழக்கமே வழக்கத்தில் இருக்கிறது.

எதைச் சொன்னாலும் அல்லது சிந்தித்தாலும் அதில் சமுதாய நோக்கு இருக்கவேண்டும் என இங்குள்ள எழுத்தாளர் எப்பொழுதுமே வற்புறுத்துவர் ''என்று டாக்டர் இரா. தண்டாயுதம், தமது மலேசியாவில் தமிழ்'' என்னும் கட்டுரை யில், ''எண்பத்திரண்டில் தமிழ்'' பக். 488 இல் எடுத்துக் காட்டியிருப்பது நினைந்து பார்க்கத்தக்கதாகும்.

''நாளேடுகளைப் பொறுத்த வரையில் மலேசியா, இலங்கை சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் பக்கங்களின் எண்ணிக்கை. தோற்றம், அமைப்பு, செய்திப்பரப்பு ஆகியவை தமிழக நாளேடு களைவிட ஒருபடி மிஞ்சி நிற்கின்றன என்று சொல்வதில் தவறில்லை!'' என்று திரு. முருகு சுப்பிரமணியம் உலகத் தமிழ் ஆராய்ச்சி இரண்டாவது மாநாட்டுக் கருத்தரங்கில் (1968) கட்டுரை படித்ததில் தெரிவித்துள்ளது ஆய்ந்து பார்க்க வேண்டிய ஒன்றாகும்.

இவர் சிங்கப்பூர் மலேசிய இலக்கியத் துறைக்கு மிகுந்த தொண்டாற்றியவர். இவர் தமிழகத்தில் வெளிவந்த **பொன்னி** எனும் இலக்கிய மாத இதழின் ஆசிரியராக இருந் தவர். டாக்டர் மெ. சுந்தரத்துடனும் என்னுடனும் சேர்ந்து சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப்பள்ளியில் படித்தவர். மலேசியாவில் 'தமிழ்நேசன்' நாளிதழின் ஆசிரியராகவும் இருந்தவர். புதிய சமுதாயம் எனும் மாத இதழைச் சொந்தமாக அங்குத் தொடங்கி நடத்தி வந்தவர். இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு சென்னையில் நடைபெற்ற போது வந்து கலந்து கொண்டவர். இவர்

ம்றைவை ஒட்டி, சிங்கப்பூரின் மூத்தக் கவிஞரான திரு. தா. பழனிவேலன் ''மறைந்த முருகு''எனும் இரங்கற்பா பாடி அவர்க்குப் புகழஞ்சலி செய்துள்ளார்.

''ஈழம், மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் வெளியாகும் தமிழ் இதழ்களில் இல்லாத மொழிக் கலப்பு, தமிழ்நாட்டு இதழ்களில் மட்டும் மிகுந்திருப்பது வியப்பாக உள்ளது!'' என்று திரு. இரா. கோதண்டம், தமது 'இதழியல்'' நூலில் 209 ஆம் பக்கத்தில் கூறியிருக்கிறார். இதற்குக் காரணம் மேற்கூறிய பகுதிகளில் வாழும் தமிழர், தமிழை உண்மையாகவே தம் தாய் மொழியாகக் கருதி அதன் மேன்மைக்காக வேண்டி பாடுபட்டுவருகின்றனர். ஆனால், தமிழகத்தில் உள்ள 'எழுத்தாளர்' களாக 'இதழாசிரியர்'களாக 'ஆகி' யுள்ளவர்களில் பெரும்பாலோரும், இதழ்களை நடத்தி வருபவர்களும் தமிழைத் தம தாய் மொழியாக எண்ணுவதில்லை! அதன் மேன்மைக்காக உண்மையில் பாடுபடுவதில்லை! எண்ணம் சிந்தை செயல் ஆகியவற்றில் உள்ளத்தில் வேறொரு மொழியின் ஏற்றத்தையே பெரிதாகக் கருதி வாழ்பவர். அவர்கள் பிழைப்புக்காக வேண்டியே தமிழ் இதழ்களை நடத்தி வருகின்றனர். இவர்களுக்குத் தமிழின் மேன்மையும் தூய்மையும் கட்டோடு பிடிக்காது. இவர்களுக்குக் கலப்புத் தமிழே இனிக்கும்!

மலேயாவில் இதுவரை 200 இதழ்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருப்பவை— 1924 இல் தோன்றிய 'தமிழ் நேச'னும் 1952ல் வெளியிடப்பட்ட சங்கமணியும் மட்டுமே! 'சங்கமணி' தோட்டப் புறத் தமிழர்களின் இதயக் குரலாக விளங்குகிறது. இதன் முதல் பொறுப்பாசிரியராக அமர்ந்தவர் திரு. ஆதி. நாகப்பன். இவரைத் தொடர்ந்து திருவாளர்கள் தி. சு. சண்முகம், கவிஞர் சங்கு சண்முகமும் 'சங்க மணி'யின் பொறுப்பாசிரியர்களாக வந்தனர். பின்னவர் 1964 முதல் இன்று வரை தொடர்ந்து இதில் பணியாற்றி வருகிறார்.

'சங்கமணி' மலேயா தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் பிரசார இதழாகத் தொடங்கப் பட்டது. அதனைப் படிக்கின்ற தோட்டப்புறச் சமுதாயத்திற்கு இலக்கிய விருந்து படைக்கும் வகையில் பல்வேறு செய்திகளையும் தாங்கி பல்சுவை விருந்தளிக்கிறது. இதில் இந்திய அரசியல் கண்ணோட்டச் செய்திகளும், தமிழ்த் திரையுலகச் செய்திகளும், சிறு கதைகளும், கவிதைகளும், கட்டுரைகளும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும், கேள்வி பதில் போன்ற பல்வேறு கூறுகளையும் கொண்டு வெளியிடப் படுகின்றன.

''கவிஞர் கா. பெருமாள், சா. ஆ. அன்பானந்தன், சை. பீர் முகமது, ரெ. சண்முகம், சாரங்கன், சரஸ்வதி அரிகிருஷ்ணன், சங்கு சண்முகம், கோ. வி. பெருமாள், மா. பூ. சோழன் போன்றவர்களும் இன்னும் பலரும் 'சங்க மணி'யைத் தங்களது எழுத்தாற்றலை, வளர்க்கும் பயிற்சிக் களமாகக் கொண்டனர்.'' என்று திரு. எம். கிருஷ்ணன், தமது 'மலேசியத் தமிழ்ப் பத்திரிகை உலகில் சங்கமணி' என்னும் ஓர் ஆய்வுக் கட்டுரையில் (ஆறாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டு மலர், பக். 156) குறிப்பிட்டுள்ளார்.

சிங்கப்பூரில் 1878 இல் துவங்கி இன்றுவரை சுமார் 90க்கு மேற்பட்ட இதழ்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் சிங்கப்பூரில், தமிழ் முரசு 40 ஆண்டுகளாகத் தொடர்ந்து நாளிதழாகவும், நான்கு மாத இதழ்களும் நடைபெற்று வருகின்றன. 'தமிழ் முர'சின் ஞாயிறு பதிப்பில் சிறுகதைகள் கட்டுரைகள், கவிதைகள், மகளிர் பகுதி, திரைப்பட பகுதி, ஆகியவை இடம் பெறுகின்றன. வாரம் ஒரு நாள் மாணவர்க்கு என 'மாணவர் மணி மன்றம்' என்ற பிரிவும் நடத்தப் பெறுகின்றது. இதில் பள்ளி மாணவரின் எழுத் தோவியங்கள் இடம் பெறுகின்றன. சிங்கப்பூரில் இலக்கிய இதழ்கள் எதுவும் வெளியாக வில்லை! திரு. எஸ்.எஸ். சர்மா இந்தியன் மூவி நியூஸ் எனும் இதழைக் கடந்த 32 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தி வருகிறார். மலேயாவில்—தமிழ் நேசன்,

தினமணி, தமிழ் ஓசை-எனும் நாளிதழ்களும், வானம்பாடி எனும் வார இதழும், புதிய சமுதாயம், ஒளிவிளக்கு எனும் மாத இதழ்களும் வெளியிடப்படுகின்றன.

மலேசியத் தமிழ் நாளிதழ்களின் ஞாயிறு பதிப்புகளையே பெரும்பாலும் நம்பி வளர்ந்து வருகிறது தமிழ் இலக்கியம்!

மலாயாயப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவையின் சிறந்த பணிகளில் ஒன்று அதன் ஆண்டு வெளியீடான **தமிழ் ஒளி** என்னும் இதழாகும். இது மலேசியத் தமிழியல் துறையின் ஒரு குறிப்பிடத்தக்க சிறந்த வெளியீடாகும். ''மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் பல் வேறு நிலைகளைக் காட்டும் பல அரிய கட்டுரைகள் இவ்விதழில் எப்போதும் இருக்கும். இந்நாட்டுத் தேசிய மொழியான மலாய், ஆங்கிலம் தமிழ் ஆகிய மும்மொழிகளிலும் எழுதப்பட்ட கட்டுரைகளை ஒரு சேரத் தாங்கி வருவது இதன்தனிச்சிறப்பு'' —'மலேசியாவில்' தமிழ்—' இரா. தண்டாயுதம் எழுதிய கட்டுரை, பக்கம்-497.

இலங்கையில் கிறிஸ்தவர்களாலும், இந்துக்களாலும் இஸ்லாமியர்களாலும் பல இதழ்கள் இதற்கு முன்பு வெளியிடப் பெற்றும் இப்போதும் நடந்தப் பெற்றும் வருகின்றன. இவ்விதழ்களில், இலங்கைத் தமிழர்களுக்கே உரிய தனிக் கூறுகளை வெளிப்படுத்தி வந்துள்ளதைக் காணலாம். இங்கும் 'உதயதாரகை, 'கத்தோலிக்க நேசன்' இந்து சாதனம், முதலிய இதழ்கள் தோன்றிய நாள் முதல் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன! பல வேறு சமய அறிஞர்களாலும், கற்றறிஞர்களாலும். இதழாசிரியர்களாலும் இங்குத் தமிழ் நன்கு வளர்க்கப்பட்டு வருகின்றது.

இலங்கையில் **தெல்லியூர் நடராசா** 'சுதந்திரன்' எனும் இதழில் பணியாற்றியவர்; சொந்தமாகவும் இதழைநடத்தியுள்ளவர். நாவற்காடு **சி. செல்லத்துரை**, எழுத்தாளர் வட்டத்தில் சிறந்த 'நிருபர்' எனப்புகழப் பெற்றவர். திருவாளர்கள் **ஆசிர்வாதன்** (ச. பெண்டிக்), **ஆ. தம்பித்துரை**

ஆகிய இருவரும் நல்ல ஓவியர்களாகத் திகழ்ந்தவர்கள். **பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, பொ. கிருஷ்ணன், சோ. சிவபாதசுந்தரம்** ஆகியோர் இலக்கியச் சுவையை வளர்ப்பதிலும், இலக்கியத் திறனாய்வு செய்வதிலும் முன்னணியில் இருந்தவர்கள். திரு. **க. கைலாசபதி** 'வீரகேசரி'யில் ஈழத்து நாவல்களைப் பற்றி எழுதி வந்தவர், 'தினகரன்' ஆசிரியராக இருந்தவர்; மல்லிகை இதழில் எழுதி வந்தவர். ஞாயிறு 'தினகர'னில் ஆற்றல் இலக்கிய முயற்சிகளுக்குக் கணிசமான இடம் கொடுத்து ஊக்கியவர். திரு. கைலாபதியின் விமர்சனக் கட்டுரைகளிலே, ஆங்கில வசன அமைப்பினைக் கையாண்டுள்ளார் என்று திரு. கனக செந்திநாதன் தமது நூலில் தெரிவித்துள்ளார். திரு. **கா. சிவத்தம்பி,** 'கைலாசபதியினுடையதிலும் பார்க்கத் தெளிவான நடையில் எழுதி, வாசகர்களைக் கவர்ந்துள்ளார்' என்றும் குறிப்பிடப்படுகின்றது. இவ் விருவரது எழுத்துகளிலும் தருக்கஞ் சார்ந்த விவாதங்கள் குறைந்தும் மார்க்சிய நோக்கு எல்லா இடங்களிலும் விரவியுங் கிடப்பதைக் காணலாம்' என்றும் மேற்படியாரால் சுட்டிக்காட்டப் படுகின்றது.

**முஸ்லிம் நேசன் (1883)** எனும் இஸ்லாமிய இதழைத் தொடங்கிய கண்டி முகம்மது எனும் **காசிம் சித்தி லெவ்வை,** ஒரு 'நியாய துரந்தராவார்' என்றும், அவர் தமது சமூகத்தின் முன்னேற்றத்திற்காக அயராது பாடுபட்ட சீர்திருத்த செம்மலாவார் என்றும் புகழ்ந்து கூறப்படுகிறார். அவரது தமிழ் நடையிலே அறபுச் சொற்களும் பேச்சு வழக்குகளும் விரவிக் காணப்படும்! 1946 இல் தோன்றிய **இஸ்லாமிய தாரகை** ஈழத்து முஸ்லீம் எழுத்தாளர்களிடையே மறுமலர்ச்சியை ஏற்படுத்தியதாகும். இது வாரம் 20,000 படிகள் விற்பனையாகியது! இதற்கு திருவாளர்கள் **கே. எம். முகம்மது சாலிஹ்யும், ஒ. கே. மொஹிதீனும்** ஆசிரியர்களாக இருந்தனர். திரு. **ஏ. எல். எம். கியாஸ்** என்பவர். 20 ஆண்டுகளாகத் 'தினகர'னில் பணியாற்றியுள்ளார். இவரது

மேற்பார்வையில் முஸ்லீம் மஞ்சரி எனும் இதழ் ஒன்று நடை பெற்றது.

இலங்கையில் மட்டக்களப்பு பகுதியில் வாழும் இஸ்லாமியர், இயற்கையாகவே நாட்டுப் பாடல்களை நல்ல தமிழில் பாடக்கூடிய வல்லமை பெற்றவர்களாகத் திகழ்கிறார்கள்.

இலங்கையிலும், மலேயாவிலும், பர்மாவிலும் தமிழகத்திலிருந்து சென்றவர்கள் இதழாசிரியர்களாகவும் நூலாசிரியர்களாவும் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் அப்பகுதியில் உள்ள தமிழர்களை இதழ்களில் எழுத வாய்ப்பளித்து ஊக்கினார்கள். இலங்கையில் 'வீரகேசரி'க்கு ஆசிரியராக வ. ரா. இருந்துள்ளார். மலேயாவில், திருவாளர்கள் குலாம் காதிர் நாவலர், கு. அழகிரி சாமி, ரா. வெங்கட்டராஜுலு ரெட்டியார், ரா. பி. மு. கனி, முருகு சுப்பிரமணியன், வை. திருநாவுக்கரசு முதலியோர் இதழாசிரியர்களாக இருந்து, இதழ்களைச் சிறப்புற நடத்தி எழுத்தாளர்களை உருவாக்கியும் ஊக்குவித்தும் பயிற்சிக் கொடுத்தும் உள்ளார்கள். தமிழகத்திலிருந்து திருவாளர்கள் சாமி சிதம்பரனார், மயிலை சீனி. வேங்கடசாமி, க. அன்பழகன், ராதாமணாளன் போன்றோர் மலேயாவிலுள்ள இதழ்களில் சிறப்புக் கட்டுரைகளையும், கதைகளையும் தொடர்ந்து எழுதி வந்துள்ளனர் என்பதையும் இங்கு குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். இதே போல் பர்மாவில் திருவாளர்கள் வி. சுந்தரம் (தேசோபகாரி). எஸ். பி. இரத்தினம் (ரசிக ரஞ்சனி), ஹரி கிருஷ்ணன் (பால பர்மா) (வெ. சாமிநாத சர்மா) (ஜோதி), டேவிட் (பர்மா நாடு) தி. ம. பொன்னுசாமி இரங்கூன் நேசன், போன்றவர்கள் அங்கு வார இதழ்களையும் நாள் இதழ்களையும் மாத இதழ்களையும் சிறப்புற நடத்தியுள்ளனர்.

பர்மாவில் முன்பு இங்கிருந்து சென்ற தமிழர்களால் பல நாளிதழ்கள் நடத்தப் பெற்றுள்ளன. பர்மா தனிநாடாக

இந்தியாவிலிருந்து துண்டிக்கப்பட்ட பின்னர், நம்மவர் செல்வாக்குக் குறைந்தது. தமிழர்கள் அங்கிருந்து வெளியேற்றப் பட்டனர். தற்போது அங்கு **நல்ல காலம்** என்னும் ஓரே ஒரு சோதிட இதழ்தான் நடத்த அனுமதிக்கப்பட்டுள்ளது என்று திரு. காந்தி அண்ணாமலை எனக்கு எழுதிய மடலில் தெரிவித்துள்ளார். வேறு இதழ்கள் ஒன்றும் அங்கு வெளியிட அனுமதிக்கப்படவில்லை!

இலங்கையில் - கொழும்பு பல்கலைக் கழகத்திலிருந்து **இளந்தென்றல்** என்ற இதழும், பேராதனை பல்கலைக் கழகத்திலிருந்து **இளங்கதிர்** என்ற இதழும், யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திலிருந்து **பொதிகை** என்ற இதழும் வெளியிடப்படுகின்றன. மலேயா பல்கலைக் கழகத்திலிருந்து **தமிழ்ஒளி** என்ற இதழ் வெளியாகின்றது. இதேபோல் தமிழகத்தில் - சென்னை, அண்ணாமலை, மதுரை, தஞ்சாவூர் பல்கலைக் கழகங்களிலிருந்தும், கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலிருந்தும், மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்தும், உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்திலிருந்தும், ஆசிய ஆராய்ச்சி மன்றத்திலிருந்தும் ஆய்வு இதழ்கள் வெளியாகின்றன. மேலும் **தமிழ்ப் பண்பாடு**, **நுண்கலை** முதலிய இதழ்களும் தொடர்ந்து வெளியிடப்படுகின்றன.

முன்பு தமிழக அரசின் சார்பில்—வேளாண்மைத் துறையில் **மேழிச் செல்வம்**, ஊரகவளர்ச்சித் துறையில் **கிராம நலம்**, சமுக நலத் துறையில் **சீரணி**, **ஆரோக்கிய மார்க்கம்**, மகளிர் நலத் துறையில் **பாக்கியலட்சுமி**, அறநிலையத் துறையில் **திருக்கோயில்**, செய்தித் துறையில் **சென்னைச் செய்தி**, தொழில் வணிகத் துறையில் **இண்ட்காம்** எனும் இதழ்கள் வெளியிடப்பட்டு வந்தன. செய்தி விளம்பரத்துறை 1971 இல் செய்தி மக்கள் தொடர்புத் துறையாக மாற்றப் பட்டது.

'திருக்கோயில்' எனும் இதழைத் தவிர, பிற துறைகளிலிருந்த இதழ்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு - அனைத்துத்

துறைகளின் பணிகளைப் பற்றிய தகவல்களையும் தாங்கி 1970 சூலை மாதம் முதல் **தமிழரசு** எனும் பெயரில் மாத இருமுறை இதழ், தமிழக அரசால் வெளியிடப்பட்டு வருகிறது. இது 50,000 படிகளுக்குமேல் செலவாகிறது/ பெரியார் ஈ. வே. ரா, திரு. வி. க. ச. சோ. பாரதி, பாரதியார், வ. வே. சு. ஐயர்; டி. கே. சி ஆகியோரின் நூற்றாண்டு விழா மலரைச் சிறப்பாகத் தயாரித்துத் 'தமிழரசு' வெளியிட்டது. தலைமைச் செயலகத்தில் உள்ள நூலகம் பற்றியும் ஆவணக் காப்பகம் பற்றியும் மிகச் சிறந்த கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன.

இக்காலத்தில் வெளியாகும் தமிழ் இதழ்களின் சிறப்பியல்புகளைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

**நல்வழி** எனும் உடல்நலம் பற்றி விளக்கிச் சொல்லிவரும் இதழ், புனாவிலிருந்து 76 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது. பொழுது போக்கு இதழ்களில் ஒன்றான **ஆனந்தவிகடன்**-வார இதழ் 63 ஆண்டுகளாக நடைபெற்றுவருகிறது. ஒவ்வொரு மாவட்ட சிறப்பு மலரை வெளியிட்டுள்ளது. இதழியல் துறையில் ஆர்வங்கொண்டுள்ள மாணவர்களுக்கு அழைப்பு விடுத்து, அவர்களது திறமையைச் சோதித்து, ஆண்டு தோறும் பல மாணவர்களைத் தேர்ந்தெடுக்கிறது; பயிற்சிக் கொடுத்துப் பயன்படுத்திக் கொள்கிறது. 'ஆனந்தவிகடன்' 2,60,000 படிகள் செலவாகின்றது. கருத்துப் படங்களை வெளியிடுவதில் புகழ்பெற்று விளங்குகிறது.

**கல்கி**-வார இதழ், 46 ஆண்டுகளாக வெளியிடப்பட்டு வருகிறது. இதன் தலையங்கம் சீர்தூக்கி சிந்தனையைத் தூண்டும் வகையில் எழுதப் படுகிறது. ஒவ்வொரு பகுதியிலும் நிறைவேற்றப் படாத பணிகளைச் சுட்டிக்காட்டி அப்பகுதி முன்னேற வழிவகை சொல்லப்படுகிறது. இதுவாரம் 70,000 படிகள் விற்பனையாகின்றது. இதில் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி முன்பு எழுதிய நாவல்கள் மீண்டும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன!

**வானொலி**-மாத இருமுறை இதழ் 49 ஆண்டுகளாக, வானொலி நிகழ்ச்சிகளையும், முக்கிய கட்டுரைகளையும் வெளியிட்டு வந்தது. **கல்கண்டும் தேனோலையும்** 39 ஆண்டுகளாக வெளியாகின்றன. சமூக இதழ்களில் **செங்குந்த மித்திரன்** 50 ஆண்டுகளாகவும் **மகாஜனம்** 39 ஆண்டுகளாகவும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. **மறுமலர்ச்சி** 39 ஆண்டுகளாகத் திருச்சியிலிருந்து வெளியாகின்றது. **பொள்ளாச்சிவாசி**, 35 ஆண்டுகளாகவும், **வணிகச் செய்தி** 31 ஆண்டுகளாகவும் வெளியாகின்றன. **பாசன முறையின் மறுமலர்ச்சி செய்தி** இதழ் ஆண்டு இதழாக 26 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியாகிறது.

**சமுதாயம்**, 26 ஆண்டுகளாகக் கோவையிலிருந்து வெளியிடப்பட்டு வருகின்றது. **வாராந்திர இராணி**, கடந்த 26 ஆண்டுகளாக வெளியிடப்பட்டு வருகின்ற குடும்ப வார இதழாகும். இதில் குடும்ப பெண்களுக்கு வேண்டிய பல செய்திகள் கூடும் சுவையுள்ளதாகத் தரப்படுகின்றன. அண்மையில் இது வெள்ளி விழாக்கொண்டாடி மலர் வெளியிட்டுள்ளது. இது 5 லட்சம் செலவாகின்றது. **சோவியத் நாடு** 24 ஆண்டுகளாகச் சென்னையிலிருந்து தமிழில் நல்ல தாளில் படங்களுடன் வெளியிடப்பட்டு வருகின்றது. **தினமணிகதிர்**, தினமணி நிறுவனத்தின் வார வெளியீடாகும்; சமூக சிறப்பு மலரை வெளியிட்டுள்ளது. இதில் 'டில்லி ராஜா' எழுதிவரும் தில்லியில் நடைபெறும் பல தகவல்கள், அனுபவ மிககனவாகவும், சுவையானவையாகவும் தரப்படுகின்றன.

தமிழ் நாளிதழ்களில், **தினத்தந்தியை** 1984 இல் 30 லட்சம் வாசகர்கள் படிக்கிறார்கள். இது இந்தியாவிலேயே அதிகம் பேர் படிக்கக்கூடிய இதழாகத் திகழ்கிறது! 1970 இல் 'தினத்தந்தி'யைப் படிப்பவர்களில் கீழ்த்தட்டு, நடுத்தட்டு மக்களே முதலிடம் பெற்றிருந்தனர். இளைஞர்களில் 19 லட்சம் பேர் இதனை விரும்பி வாங்கிப் படிக்கிறார்கள். 10,20,000 'தினத்தந்தி' வாசகர்களில், ஐந்துக்கு

இரண்டு பங்கினர் வேறு எந்த வெளியீட்டைக் காட்டிலும் 'தந்தி'யிலிருந்தே கருத்தையும் தகவல்களையும் தெரிந்து கொள்ளக் கூடியவர்களாக உள்ளனர். பொதுவாக, வாசகர்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது, 'தினத்தந்தி'யை 30,77,000 பேரும், 'தினமணி'யை 14,57,000 பேரும், 'இந்து'வை 10,44,000 பேரும், 'இந்தியன் எக்ஸ்பிரஸை' 5,22,000 பேரும் படிக்கக் கூடியவர்களாகக் காணப்படுகின்றனர். தேசிய படிப்பவர்களின் ஆய்வுப்படி:

| | முதல் ஆய்வு | இரண்டாவது ஆய்வு | மூன்றாவது ஆய்வு |
|---|---|---|---|
| இந்து | 9 50 லட்சம் | 9.96 லட்சம் | 10. 44 லட்சம் |
| தினமணி | 10.31 ,, | 14.57 ,, | 17. 89 ,, |
| தினத்தந்தி | 17.60 ,, | 27.20 ,, | 30.77 ,, |

-"Daily Thanthi, towers above the rest in terms of reader ship" — The National Reader ship Surney III.

'தினத் தந்தி' நாளிதழானது, தமிழ் அறியாதவர்களையும் தமிழ்ப் படிக்குமாறு செய்துள்ளது. ஏழை எளிய மக்களிலிருந்து பணக்கார படித்த மக்கள் வரையில் படித்துப் பார்க்க வேண்டிய இதழாக விளங்குகிறது! 'இந்து'விற்கு அடுத்தபடியாக அதிக வரி விளம்பரங்களை வெளியிடுவதும், தொழில் மலர்களை வெளியிடுவதும் 'தந்தி'யேயாகும்.

'தினத்தந்தி' ஐந்து லட்சம் அச்சாகிறது. மாவட்டந்தோறும் அவ்வப் பகுதியின் முக்கிய செய்திகளை உடன் தாங்கி முந்தி வருகிறது. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரே சமயத்தில் சொந்த கட்டிடத்தில் விரைவில் அச்சிடப்பட்டு வெளியாகின்றது. இதனைப் படிப்பவர்கள் ஒரு குடும்பத்தில் 6 பேர் படிக்கிறார்கள் என்று கொண்டால், 30 லட்சம் பேர் இதனைப் படிப்பவர்களாகக் கணக்கிடப்படுகிறது. பங்களூரிலும் 'தினத்தந்தி' வெளியிடப்படுகிறது. விமானப் பதிப்பையும் வெளியிடுகிறது! **தினமணி**யில் செய்திகள்

விளக்கமாகவும், அவ்வப்போது உருவாகும் பிரச்சனைகள் அலசி ஆராய்ந்தும் கூறப்படுகின்றன. தற்போது இதன் அமைப்பு முற்றிலும் மாற்றப்பட்டு, கணிப்பான் மூலம் 2, 25,000 படிகள் அச்சிடப்படுகிறது. 'மாலை முரசு'ம் 'மாலை மல'ரும், 'தினகரனும்' நல்ல முறையில் வெளிவரும் நாளிதழ்களாகும். இவை அனைத்தும் 'தினத்தந்தி'யின் உறவினர்களால் நடத்தப்படுகின்றன. **தினமலர்** முதலில் திருவனந்தபுரத்தில் வெளியாகியது; திருவாங்கூர் கொச்சியிலுள்ள தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் சேர்க்கப்பட வேண்டும் என்ற போராட்டத்தை ஆதரித்து மலர் வெளியிட்டது. பின்னர் திருநெல்வேலி முதலிய இடங்களில் தனித்தனியாக அச்சிடப்படுகிறது.

மலேயாவில் **தமிழ்நேசன்** நாள்தோறும் 40, 000 செலவாகிறது; ஞாயிறன்று 75, 000 விற்பனையாகிறது. அங்கு **(தினமணி)** நாளொன்றுக்கு 40, 000 அச்சாகிறது; ஞாயிறன்று 50, 000 செலவாகிறது.

**தமிழ் ஓசை** 20, 000 அச்சாகிறது; ஞாயிறு தோறும் 40, 000 செலவாகிறது. அங்கு வார இதழ்களில் **வானவில்** 4, 200மும், **சலங்கை** 4000மும், மாதமிருமுறை இதழான **மல்லிகை** 4,000 மும், மாத இதழான **சங்கமணி** 4,000மும் செலவாகின்றன என்று தெரியவருகின்றது.

முற்கால இதழ்களில்-சிறுவர் பகுதியும் பெண்கள் பகுதியும் இணைநதே வெளியிடப்பட்டன. இக்காலத்தில் அவை தனித்தனி இதழ்களாக வெளியிடப்படுகின்றன.

சிறுவர் இதழ்களிலே தாய்மொழி இதழ்களில் முதன் முதலாக வெளியிடப்பட்டது **பாலியர்நேசன்** (1825). ஆகும். பின்னர் திரு. வை. கோவிந்தன், **அணில்** எனும் சிறுவர் இதழைத் தொடங்கி நடத்தியுள்ளார். அடுத்து **பூஞ்சோலை**, திரு. அழ வள்ளியப்பாவை ஆசிரியராகக் கொண்டு சிறப்பாக நடத்தப்பட்டது. **அம்புலிமாமா** படங்கள் நிறைந்து,

தமிழிலும் பிறமொழிகளிலும் சந்தமாமா நிறுவனத்தினரால் சென்னையில் தொடர்ந்து பல ஆண்டுகளாக வெளியிடப் பட்டு வருகின்றது. **கல்கண்டு** திரு. தமிழ்வாணனை ஆசிரியராகக் கொண்டு கடந்த 40 ஆண்டுகளாக இடையறாது குமுத் நிறுவனத்தால் நடத்தப்பட்டு வருகிறது. தற்போது திரு. லேனா தமிழ் வாணன் இதற்கு ஆசிரியராகியுள்ளார். 'துணிவே துணை' இதன் மூல பலம்! கேள்வியும் பதிலும் இதன் சிறப்புப் பகுதியாகும். **கோகுலம்**-திரு. அழ. வள்ளியப் பாவைச் சிறப்பாசிரியராகக் கொண்டு, 'கல்கி' நிறுவனத் தால் நடத்தப்பட்டு வருகின்றது.

**மங்கையும், மங்கை மலரும்** தற்போது சிறப்பாக நடத்தப் பெற்று வரும் மகளிர் இதழ்களாகும். இப்போது **தாய்** (வலம்புரி ஜான்), **சாவி** (சா. விசுவநாதன்), **இதயம் பேசுகிறது** (மணியன்), **சங்கொலி**(சோலை இருசன்), **குங்குமம்** (பராசக்தி), **தினமணி கதிர்** (கஸ்தூரிரங்கன்), **ஓம்சக்தி** (மகாலிங்கம்) ஆகிய இதழ்கள் மக்கள் உள்ளத்தைக் கொள்ளும் வகையில் நடத்தப் பட்டு வருகின்றன.

**குமுதம்**-வார இதழ் திரு. எஸ்.ஏ.பி. அண்ணாமலையை ஆசிரியராகக் கொண்டு, கடந்த 41 ஆண்டுகளாக அவ்வப் போது புதிய உத்திகளைக் கையாண்டும் அடிக்கடி மாறுதல் களைச் செய்தும் வெளியிடப்படுகிறது. தலையங்கமும், திரைப்பட விமர்சனமும் இதன் தனிப் பாணியாகும! சென்னை மாகாணத்தைக் காங்கிரஸ் கட்சி, கட்டி ஆண்ட போது, தமிழ்நாடு என்ற பெயர் வைக்க மறுத்ததை எதிர்த்து கண்டனம் தெரிவித்து, தமிழ்நாடு என்னும் பெயரைத் தனது கடைசி பக்கத்தில் தொடர்ந்து வெளியிட்டு சாதனை புரிந்துள்ளது. தமிழ் இதழ்களில், இந்தியாவிலேயே ஐந்து லட்சத்திற்கு மேல் விற்பனையை எட்டிய முதல் சிறப்பு 'குமுத'த்திற்குக் கிட்டியது! 'ஆனந்த விகடன்' 'கல்கி' போன்ற இதழ்களை மிஞ்சும் அளவிற்கு தனது எண்ணிக்கை பலத்தையும், வாசகர் வட்டத்தையும் பெருக்கிக் கொண்டுள்ளது 'குமுத'மே யாகும்!

சிறிய இதழ்களில் சுட்டு, அளவில் சிறியது என்றாலும், அதில் வெளியாகியிருக்கும் சங்கதிகள் உண்மையை விளக்கு வதாக அமைந்துள்ளன. இதழ்களைப் பற்றி 'சுட்டு'வில் வெளியிடப்பட்டுள்ள தொடர் கட்டுரைகள், நூல் வடிவில் வெளியிடப்பட வேண்டிய ஒன்றாகும். எழுகதிர்- திரு. அரு. கோபாலனை ஆசிரியராகக் கொண்டு அரும் முயற்சியினால் தொடர்ந்து வெளியாகும் மாத இதழாகும். அவரது அரசியல் அனுபவமும், தமிழினப் பற்றும எவரையும் அவர வர் செயல்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு திறனாய்ந்து கூறும் தன்மையும் பாராட்டப்பட வேண்டிய தாகும். முகம் எனும் இதழில் தமிழ்த் தொண்டு புரிவோரைப் பற்றியும், வ. உ. சியின் மாண்பு குறித்தும், பாரதியார் சிறையில் மன்னிப்பு கேட்ட மடல்களை ஆதாரத்துடன் வெளியிட்டத் துணிவையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். அடிக்கடி முகத்தை வாங்கிப் பார்க்க வேண்டும். தமிழ்ப்பணி-பெருங்கவிக்கோவை ஆசிரிய ராகக் கொண்டு தொடர்ந்து வெளியாகிறது.

ஓம் சக்தி - இதழ் அதிக பக்கங்களுடன் விலை மலிவாக வும், ஏராளமான தக்வல் தரும் ஏடாகவும் வெளியாகிறது.

பிறரைக் கேலி செய்வதையே பிழைப்பாகக் கொண்டு துக்ளக் இதழ், 'சோ' இராமசாமியால் நடத்தப்படு கின்றது. இதில் சில சமயம் அஞ்சாமையும், அசடு வழியும் கட்டுரைகளும், உண்மைக்குப் புறம்பான 'விஷயங்' களும், உள்ளூர மறைத்து வைத்துக் கொண்டுள்ள வகுப்பு வாத உளபபாங்கும் வெளியிடப் படுகின்றன.

நாளிதழ்களில் அன்றாடம் வரும் செய்திகளைத் த்ங்களுக்கே உரிய கொள்கைக்கு ஏற்றபடியும் சிறு சிறு தலைப்பிட்டும் முழுத் தலைப்பிட்டுப், திரித்தும் வெளியீடு செய்கின்றன. நடுநிலை நாளிதழ் என்று குறிப்பிடப்பட்டா லும், பெரும்பாலும் ஓரம் சார்ந்தே வெளியாகின்றன!

அரசியல் இதழ்கள்-அரசியலில் சரடு விடுவதும் நடக்காததை நடந்ததுபோல இட்டுக்கட்டி வெளியிடுவதிலும் காலந் தள்ளுகின்றன! வார இதழ்களும் அரசியல் இதழ்களுக்கு எந்த விதத்திலும் சளைக்கவில்லை! அரசியல் கயிறு திரிப்பதிலும், நடவாத பேட்டியைக் கற்பனையில் நடந்தது போல் சித்தரிப்பதிலும் அசகாயத் சூரத்தன்மை காட்டுகின்றன! இப்போது துப்பறியும் முறையிலும், புலனாய்வு முறையிலும் செய்திகளை வெளியிடுவதிலும் நிகழ்ச்சிகளை விளக்கிக் காட்டுவதிலும் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு— ஜுனியர் விகடன், தராசு போன்ற இதழ்கள் வெளியிடப்படுகின்றன! இவை, சில சமயங்களில் வேண்டாத வீண் அக்கப் போரை உண்டாக்கி விடுகின்றன!

விசிட்டர் லென்ஸ் ஜூனியர் விகடன், போன்ற ஆங்கிலப் பெயர்களைக் கொண்டு தமிழில் துணிவுடன் இதழ்கள் வெளியிடப்படுகின்றன! தாம் தமிழ்நாட்டில் வாழ்கின்றோம் அல்லது தமிழ் பேசும் பகுதியில் இருக்கிறோம் என்ற நினைப்பே இல்லாமல் இத்தகைய இதழ்களை வெளியிடுகின்றனர்.

எண்ணுவைதத் தாய் மொழியில் எண்ணி கருத்துகளை வெளியிடுவதே இயல்பானதாகும். பிறமொழிகளை அறிவதில் தவறில்லை. அம்மொழிகளிலுள்ள நற்கருத்துகளைத் தாய்மொழியில் எடுத்துக்கூறுவதே சாலச்சிறந்ததாகும்! தமிழ் இதழ்களுக்கு ஆங்கிலப் பெயர் சூட்டுவதும். தமிழில் ஆங்கிலச் சொற்களையும் பிறமொழிச் சொற்களையும் கலப்பதும் அடிமைப்புத்தியையும் தாய்மொழிப் பற்றின்மையையுமே எடுத்துக் காட்டும்!

பொதுவாக இதழ்கள் மக்களின் இன்றைய மையாகக் கருதப்படுகின்றன! மக்களை நல்வழியில் அழைத்துச் செல்வதே அவற்றின் தலையாய கடமையாக இருக்க வேண்டும்.

தமிழ் இதழ் உலகம் குழவிப் பருவத்தைக்கடந்து. காளைப்பருவத்தை எட்டிவிட்டது! என்றாலும் தமிழ் இதழியல் தொழில் ஒரு திட நிலையை அடைய பெரிதும் பாடுபட வேண்டியுள்ளது!

இந்தியாவிலே தாய்மொழிகளில் வெளியாகும் இதழ்களில் தமிழ்மொழி இதழ்கள்தான் அதிக செல்வாக்கோடும் எண் ணிக்கை பலத்தோடும் சிறந்து விளங்குகின்றன! தினத்தந்தி, தினமணி, குமுதம், ஆனந்த விகடன், கல்கண்டு, விடுதலை வ ாரப்பதிப்பு) - உலகில் தமிழர் வாழும் இடங்களுக்கு எல்லாம் விமானம் மூலம் இதழ்களை அனுப்பி வைக்கின்றன.

டாக்டர் மா. இராசமாணிக்கனார் இலக்கிய வட்டம் தமிழ் இதழ்களையும் இதழாசிரியர்களையும் தனித்தனி கூட்டங்களில் ஆய்வு செய்து தொடர்ந்து பணியாற்றி வருகிறது. இந்தியாவில் பிற பகுதிகளில் இதழியல் பற்றிக் கற்று கொடுத்துச் சான்று இதழ் வழங்கி வருகின்றன. ஆனால், தமிழகத்தில் ஆதித்தனார் கல்லூரியில் இதழியல் துறையில் படிப்பவர்களுக்குப் பட்டங்கொடுத்துச் சிறப்பிக்க திட்டமிட்டு செயல்படுத்த முனைந்து சிறப்புப்பெற உள்ளது!

தமிழில் இதழியல் துறையை நல்லமுறையில் வளர்த்த பெருமக்களை என்றும் நினைத்து போற்றி வருவோமாக!

# பொருடளக்கம் (தொடர்ச்சி)

# மேற்கோள் நூல்கள்

1. தட்சிண இந்திய சரித்திரம் (1919)- சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு.

2. சென்று போன நாட்கள்- எஸ் ஜி. இராமாநுஜலு நாயுடு, 'அமிர்த குணபோதினி' (1928) இதழில் எழுதி யுள்ள கட்டுரை.

3. இந்திய பத்திரிகைத் தொழிலியல் (1935)- வி. நா. மருதாசலக் கவுண்டர், கோவைத் தமிழ்ச் சங்க வெளியீடு.

4. சென்ற 60 ஆண்டு காலப் பத்திரிகைகள்- பரலிச். சு. நெல்லையப்பர், 'தினமணிச்' சுடரில் (1-7-1945) எழுதிய கட்டுரை.

5. தமிழ்ப் பத்திரிகைகள் - மா. சு. சம்பந்தன், சென்னை எழுத்தாளர் சங்க 'பாரதி' மலரில் (1958) எழுதிய கட்டுரை.

6. தமிழ்ப் பத்திரிகைகள்- 'குளத்தூரன்' எழுதிய நூல், கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை வெளியீடு.

7. தமிழ்ப் பத்திரிகைகள் (1968) - திரு. பட்டாபி ராமன் தொகுத்த நூல்.

8. தகவல் சாதனங்களில் மொழி பெயர்ப்புச் சிக்கல்- முருகு சுப்பிரமணியன், முதலாவது உலகத் தமிழ்க் கருத் தரங்கு மாநாட்டில் (1968) பேசிய கருத்துரை.

9. நாள், தாள் கையேடு (1971)- சி. பா. ஆதித்தனார்.

10. தமிழ் இதழ்கள் (1975)- 'சோமலெ', கல்கி நினைவுச் சொற்பொழிவுகள், சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.

11. செய்தி உலகம் (1975)- பழனி. அரங்கசாமி.

12. இலங்கையில் பத்திரிகைகளும் ஆசிரியர்களும் F X. C. நடராஜா.

13. பத்திரிகைத் தமிழ் (1979)- தங்க மணியன், மாணிக்கப் பதிப்பகம். உடையார் பாளையம்.

14. இதழியல்- இரா. கோதண்டபாணி.

15. குழந்தைகளுக்குப் பத்திரிகை- அழ. வள்ளியப்பா

16. நாள், கிழமை, வார இதழ்கள்- *சைவ சிந்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.*

17. முற்காலத் தமிழ் இதழ்கள்- மா. ரா. இளங்கோவன், *சேகர் பதிப்பக வெளியீடு.*

18. முதல் தமிழ் இதழ்கள் மூன்று - ,, ,,

19. இதழியல் நோக்கு ,, ,, ,,

20. தலையங்க இலக்கியம் ,, ,, ,,

21. தமிழ் இதழ்கள்-தோற்றம்-வளர்ச்சி (1987)- அ. மா.சாமி.

22. எண்பதில் தமிழ்-வார இதழ்கள்— இரா. குமரவேலன், குருநாதன்.

,, — சிறு பத்திரிகைகள்-வீ. அரசு

,, — இலங்கையில் தமிழ்- இ. பாலசுந்தரம்

,, — மலேசியாவில் தமிழ்-இரா தண்டாயுதம்

23. எண்பத் தொன்றில் தமிழ் —மாத இதழ்கள்— கரு. நாகராஜன்

சிங்கப்பூரில் தமிழ்-எஸ், எஸ். சர்மா

24. தமிழ் நாட்டுச் செய்தி இதழ்கள் 'தமிலன்', ''குமுத' *இதழில் எழுதியுள்ள தொடர்கட்டுரைகள்*

25. கிறித்தவ இலக்கிய மரபு- *மதுரை இறையியல் கல்லூரியின் இதழ்கள் பற்றிய கட்டுரை*

26. Clssified Catalogue of Tamil Printed Books- Rev. Murdoch.

27. The Woes of Tamil Journals- Madras Library Association Memoirs.

28. Tamil Malaysiana - a check list of Tamil books and Periodicals compiled by Rama Subbiah. Published in Malaysia and Singapore.

29. Press in India (1974) Published by the Ministry of Information and Broad casting, Govt. of India, NewDelhi, Part-I.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | |
|---|---|---|---|
| 2 F. N. | 3 | Remined | Remained |
| 7 | 271 | 2×8 | 12 × 8 |
| 9 | 15 | இதழைப்பர் | இதழைப் பர்தோன்ஜி |
| 42 | 24 | சி. க. சுப்பிரமணிய | சுப்பிரமணிய |
| 45 | 28 | காய்ச்சின வழுதி | காய்சினவழுதி |
| 47 | 20 | பேபர் | பேப்பர் |
| 48 | 8 | வித்யாபாநு | விவேகபாநு |
| 52 | 7 | செங்கலவரால் | செங்கல்வராய |
| 62 | 15 | ஞானந்தம் | ஞானாந்தம் |
| 74 | 10 | ஈடுகானம் | ஈடுகாணம் |
| | 17 | கள்வனும் காதலியும் | கள்வனின் காதலி |
| 80 | | ஏ. ஆர். சேஷாசலம் | டி. என். சேஷாசலம் |
| 111 | 25 | வானளில் | வானவில் |
| 123 | 8 | திருவெல்வேலி | திருநெல்வேலி |
| 159 | 12 | சுதேசமித்திரன் | சுதேச நாட்டியம் |
| 172 | 8 | மூண்டி அரங்கநாத | பூண்டி அரங்கநாத |
| 184 | 1 | நூல்கள் பறறிய | நூல்கள் பற்றிய |
| 193 | 18 | சாம் | வரம் |
| 199 | 30 | என்னும் | என்றும் |
| 201 | 26 | வடார் காட்டிலுள்ள | வடார்க்காட்டிலுள்ள |
| 206 | 5 | வீரகேசசி | வீரகேசரி |
| 208 | 3 | தினவர்த்தானி | தினவர்த்தமானி |

| பக்கம் | | வரி | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 213 | — | 24 | ஜி. சுப்பிரமணிய பிள்ளை | | ஜி. சுப்பிரமணிய ஐயர் |
| 215 | — | 17 | இதழை | — | இதழ்களை |
| | | 24 | ஒரு | — | |
| 216 | — | 12 | 'எடுத்த முயற்சி தளர | | விடாது நடத்தினேன். பின் என்முயற்சி' என்ற வரி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் |
| 218 | — | 13 | சினக்ஷ | — | சிக்ஷை |
| 219 | — | 6 | அரவிந்திரன் | — | அரவிந்தரின் |
| 220 | — | 1 | தேண்டும் | — | வேண்டும் |
| | | | கொணடிருந்தார் | — | கொண்டிருந்தவர் |
| 220 | — | 22 | என்று ஒதுக்கி | — | என்று வைதீகர் ஒதுக்கி |
| 221 | — | 23 | தாட்டிலும் | — | நாட்டிலும் |
| 222 | — | 5 | கழனி ஒரீகி | — | கழ்னிநாடு ஒரீஇ |
| | — | 11 | கிளர்ச்சிக் கொள்ள | -- | கிளர்ச்சிக் கொள்ளச் செய்வர். |
| | — | 23 | தெரிந்தது | -- | தெரிந்திருந்தது |
| 224 | — | 18 | தந்தவர் | — | வந்தவர். |
| 225 | — | 28 | 1786 | — | 1886 |
| 226 | — | 21 | மாணிப்பாய் | — | மாணிப்பாய் |
| 231 | — | 7 | கயட்டி | — | கட்டிய |
| 233 | — | 12 | கொள்கைகளை | — | கொள்கைகளைத் தாங்கி |
| 238 | — | 30 | அக்சட்டுரை | — | அக்கட்டுரை |
| 240 | — | 22 | மிகுந்திருத்தன | — | மிகுந்திருந்தன! |
| 241 | — | 13 | காணும் | — | காண |
| 245 | — | 26 | கொள்கையின் | — | கொள்கையில் |
| 246 | — | 22 | மாதேலியிலிருந்து | — | மாதேவியிலிருந்து |

| | | | | |
|---|---|---|---|---|
| 247 — | 20 -- | எஸ். விசாலாட்கி | — | எஸ். விசாலாட்சி |
| 251 — | 16 -- | 1976 | — | 1876 |
| 253 — | 29 -- | தினமணியிம் | — | தினமணியில் |
| 254 — | 6 -- | பரப்பியராவர் | — | பரப்பியவராவர் |
| 257 — | 8 -- | தமிழிறிஞர் | — | தமிழறிஞர் |
| 262 — | 24 -- | நேடாவில் | — | நேடாலில் |
| 265 — | 4 -- | சிந்தனையில் | — | சிந்தனையைக் |
| | 16 -- | கைவல்ய கட்டுரை | — | கைவல்ய சாமியார் கட்டுரை |
| 270 — | 8 -- | கண்ணசிச் | — | கண்ணகிச் |
| 273 — | 15 -- | பக்கள் | — | பக்கங்கள் |
| 274 — | 23 -- | ரூ...... | — | ரூ. 3. |
| 277 — | 8 -- | தவைவரால் | — | தலைவரால் |
| 179 — | 5 -- | Literary | — | Library |
| 280 — | 23 -- | காலானா | — | காலணா |
| 284 — | 3 -- | மாதமும் முறை | — | மாத மும்முறை |
| — | 12 -- | மாத இருமுறைகள் | — | மாதமிருமுறைகள் 161 |
| 286 — | 17 -- | கள்தாரர் | — | தாரர்கள் |
| 297 — | 15 -- | தரப்படுகின்றது | — | தரப்படுகின்றன. |
| 300 — | 17 -- | பொறுப்புனர்ச்சி | — | பொறுப்புணர்ச்சி |
| 301 — | 5 -- | தெரிவித்திப்பது | — | தெரிவித்திருப்பது |
| 302 — | 10 -- | நூலில் | — | நூலில் ×× |
| 303 — | 9 -- | கவனத்தில் | — | கவனத்தில் கொண்டு |
| 304 — | 1 -- | விங்குகிறது | — | விளங்குகிறது |
| 314 — | 6 -- | தங்கநேசயை | — | தங்கநேசனை |
| 316 — | 1 ... | பாக்கள்பற்றி | ... | பாக்களியற்றி |

இந்நூலாசிரியரான திரு. **மா. சு. சம்பந்தன்,** சென்னை மாநகரிலே பிறந்தவர். முத்தியாலுப் பேட்டை உயர் நிலைப் பள்ளியிலும், பச்சையப்பன் கல்லூரியிலும் பயின்ற வர். பள்ளியில் கட்டுரை போட்டியிலும், கல்லூரியில் பேச்சுப் போட்டியிலும் பரிசுகள் பெற்றவர். உயர்திருவாளர் மயிலை சிவ. முத்து அவர்களும் டாக்டர் மா. இராச மாணிக்கனார் அவர்களும் இவருக்குத் தமிழ்ப் பற்றும் எழுத்துப் பயிற்சியும் செய்து வைத்த பெருமக்களாவர். இவர் எழுதிய முதல் கட்டுரை 'பாரத தேவி' எனும் மாத இதழில் வெளி வந்தது. 'தமிழன்' எனும் வார இதழில் இவர் எழுதிய ''ஜி. டி. நாயுடு'' என்னும் கட்டுரை வெளி யிடப்பட்டுச் சிறப்பு பெற்றது.

இவர் தமிழர் கழகம், தமிழர் பேரவை, சென்னை ஒய். எம்.சி. ஏ. பட்டிமன்றம் போன்ற பொது அமைப்புகளில் பெரிதும் பங்கு கொண்டிருந்தவர். **தமிழர் மலர்** கையெழுத்து இதழ்க்கும் **முருகு, மதி** எனும் மாத இதழ் களுக்கும் ஆசிரியராக இருந்து நடத்தியவர். **எங்கள் நாடு** (1949) எனும் நாளேட்டின் துணையாசிரியராகப் பணி யாற்றியவர்.

சென்னை கன்னிமாரா பொது நூலகத்தில் சில காலம் உதவியாளராகப் பணிபுரிந்தவர். சென்னைத் தமிழ் எழுத் தாளர் சங்கத்தின் பொதுச் செயலாளராகவும், சென்னை மாநகராட்சியின் உறுப்பினராகவும், அதன் கல்வி நிலைக் குழுவில் இடம் பெற்றும், அதன் சார்பில் சென்னைப் பல்கலைக் கலைக் கழக மூப்பரவை (செனெட்) உறுப்பின ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டும் தொண்டாற்றியவர்.

இவர் எழுதிய **சிறந்த பேச்சாளர்கள்** (1947) எனும் நூல், மேடைத் தமிழின் முதல் நூலாகும்; **திருச்சி விசுவ நாதம்** (1949), வாழ்க்கை வரலாற்று நூல்களில் சிறப்பிடம் பெற்றதாகும்; **சென்னை மாநகர்** (1949) நகர வரலாற்று

நூல்களில் குறிப்பிடத்தக்க தாகும்; **அச்சுக் கலை (1959)** கவின் கலை ஒன்றின் நுணுக்கங்களைத் தெளிவாக விளக்கிக் கூறும் தொழில் நுட்ப நூலாகும்.

**அச்சும் பதிப்பும் (1980)**, தமிழ் அச்சு பற்றியும் பதிப்பும் பற்றியும் தொடக்க முதல் ஆதாரத்துடன் விளக்கிக் கூறும் பெரிய நூலாகும். தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் முதற் பரிசை பெற்றுச் சிறப்படைந்தது. **எழுத்தும் அச்சும் (1981)** எளியவரும் எழுத்துக் குறித்தும் அச்சுக் குறித்தும் நன்றாக விளங்கிக் கொள்ளும் வகையில் தெரிவிக்கும் நூலாகும். இவரது இலக்கியத் தொண்டினைப் பாராட்டி வி. ஜி. பி. சகோதரர்கள் சந்தனம்மாள் பெயரில் நடத்தப் படும் அறக்கட்டளையின் சார்பில் பொற்கிழியில் ரூ. 1000 கொடுத்துச் சால்வைப் போர்த்திப் பெருமைப்படுத்தினர்.

இந்நூல், இந்நூலாசிரியரின் 40 ஆண்டு காலச் சேகரிப்பின் விளைவாகும். இதில், தமிழ் இதழியல் வரலாற்றைத் தொடக்க முதல் இக்கால வரையில் நிரல் படத் தொகுத்து வகைப்படுத்தி விளக்கித் திறனாய்ந்து கூறப்படுகிறது. இதனைப் படிப்பவர்களுக்கு, ஆசிரியரின் நோக்கமும் பெரு முயற்சியும் உழைப்பும் தெளிவாகப் புலப்படும் என நம்புகிறோம்!

**இந்நூல் மொத்தம் 354 பக்கங்கள் (படங்களைச் சேர்த்து) கொண்டது.**

**விலை ரூ. 27.00.**

